# வானமுது




புலவர் முனிசாமி

மலர் நிலையம்
133. பிராட்வே... சென்னை-1

# முன்னுரை

பஞ்சம் காரணமாகப் பல குடும்பங்கள் பல் வேறிடங்களுக்குப் பஞ்சையாய்ப் பறந்து போய் விடுகின்றன. அவற்றில், பரம்பரையாகப் பண்பாட்டில் ஊறித் திளைத்த குடும்பத்தினர் பஞ்சத் தாண்டிகளாகப் போக நேர்ந்தாலும் அவர்களுள் நடேசன், வானமுது போன்ற பண்பு குறையாதவர் சிலர் இல்லாமலில்லை. உயர்ந்த குடும்பத்தில் பிறந்து, உயர்தரக் கல்விகற்று, உன்னதமான பதவி வகிப்பவருக்கிடையில் ஏழைகளிடம் இரக்கம் காட்டி, எந்த நாட்டில் சென்று வாழ்ந்தாலும், தாய் நாட்டையும், தாய் மொழியையும் மறவாது அவற்றின் ஆக்கத்துக்காக ஊக்கம் காட்டும் கண்ணப்பர் போன்றவர் சிலர் எந்த நாட்டிலும் எக்காலத்திலும் இருக்கவே இருப்பர். அன்றாடம் கூலி வேலை செய்து வாழ்வு நடத்
் ஏழைகள் வாய்ப்பு நேர்ந்து பெருஞ் செல்வராகி
துட் போதிலும், தன் பழைய நிலையை மறவாது,
விட்ட ாக மக்களிடம் அன்பு காட்டி, ஆடம்பர
பொதுவ ளிமையாக வாழும் மனிதர் முருகப்பனைப்
மின்றி எ ர் சிலரும் இருக்கிறார்கள். இவர்கள்
போன்றவ ின் மூலம் இக்காலத் தமிழர் நிலையைக்
வாழ்க்கைய இந்த நூலின் அடிப்படை.
குறிப்பதே

க, மங்கலங் கிழார் போன்ற பெரியோர்
திரு. வி. ா உழைப்பாலும், ஊட்டிய தமிழ்
களின் சலிய உணர்வு கொண்டவர் பலராவர்.
உணர்வாலும்

அவர்கள் ஆற்றிய அருந் தமிழ்த் தொண்டுகளை நினைவுறுத்துவது நலம் என்று எண்ணுகிறேன். என்றுமுள தென் தமிழாக இருப்பினும் அது இன்று இறவாது, தமிழர் உள்ளங்களில் தளிர்த்து நிற்பதற்கு அத்தகையோரே காரணம் என்பதைத் தமிழுலகம் நன்கறியும். அவர்களுக்கு இழுக்கு நேரா வகையில் அவர்களை நினைவு கூர்வது நல்லதென்றும் நம்புகின்றேன்.

இந்த நூல் என் முதல் முயற்சி. இதை நன்முறையில் வெளியிட்டுதவிய மலர் நிலையத்தாருக்கு என் உளம் நிறைந்த நன்றியைத் தெரிவிப்பதோடு என் ஆசிரியப் பெருந் தகையார், மறைந்த பெரியார் உயர்திரு. மங்கலங்கிழார் அவர்கள் திருவடித் தாமரைக்கு இவ் வானமுதைப் பெய்கின்றேன். வானமுதைச் சுவைக்கும் தமிழுலகம் குற்றங் களைந்து குணங் கண்டு என்னை இம் முயற்சியில் ஊக்குவிக்கும் என்று நம்புகின்றேன்.

வணக்கம்.

புலவர் முனிசாமி.

1 80




# வானமுது

கண்ணப்பர்

---

இன்றைய கூட்டம் இவ்வளவு சிறப்பாக நடக்குமென்று நாங்கள் எதிர்பார்க்கவே இல்லை. கட்சிக் கூட்டங்களுக்கே முதலிடம் என்று எண்ணும் இக்காலத்தில், இது போன்ற அறிவு சம்பந்தமான கூட்டம், இவ்வளவு திரளுடன் சிறப்பாக நடந்ததென்றால்—அதன் செயலாளனை நான் மகிழாது இருக்க முடியுமா?

ந தமிழர் பண்பாடு என்ற தலைப்பில் மிக அழகா
ல மேற்கோள்களுடன் அலசியலசி ஆராய்ச்சி
ச் கலந்து பேசியபோது—தமிழனைப் பிறந்த
களும் என்போன்றவர்களும் அளவில்லாது அனுபவித்தோம்—ஆனந்தமாகச் சுவைத்தோம். அந்தக் கால நாகரிகம், அறட அரசியல், இல்வாழ்க்கை எதிலும் எல்லைகடவாத நெறி இவைகளைப்பற்றி மெல்

லாம் அவர் பேசிய போது கூட்டத்திலிருந்த அத்தனை பேரும் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட உலகில் வட்டமிட்டுக் கொண்டிருந்தோம். குறைந்தது மூன்று மணி நேரம் அவ்வாறு ஆழ்ந்திருந்தோம்; பேச்சு முடிந்த பிறகு ஒவ்வொருவரும் இந்த உலகிற்கு இறங்கி வந்தோம். அது வரைக் கேட்டுக் கொண்டிருந்த அந்தக் கால வாழ்க்கை நெறிக்கும், இக்கால மக்கள் நெறிக்கும் உள்ள வேறுபாடு தான் என்னே! என்று ஆராயத் தொடங்கினேம். இரவும் பகலும் போல, ஏன்—தீப்புங் கைப்பும் போல நேர் மாறாக இருப்பது அனைவர் ஆராய்ச்சிக்கும் எட்டி இருக்கும். கூட்டம் சிறிது நேரத்துக்குள் கலைந்து விட்டது. 'தமிழர் என்றோர் இனமுண்டு; தனியாய் அதற்கோர் குணமுண்டு' என்று அவர் கூறிய அடி மட்டும் எல்லோருடைய காதிலும் ஒலித்துக் கொண்டிருந்தது. அந்த அடியைப் பலர் சொல்லிக்கொண்டே சென்றதிலிருந்து அது நன்றாக விளங்கியது. ஏன்—அவர் கூறிய பல செய்தியில் அந்த அடி மட்டும் ஒவ்வொருவர் உள்ளத்திலும் நன்றாகப் பதிந்து விட்டது. அதற்கு நாமே சான்றில்லையா? என்ன அழகான தொடர்! அவர் கூறிய அத்தனைக் கருத்துக்களையும் அத்தொடர் அடக்கிக் கொண்டிருப்ப[illegible] போல இருக்கிறதே! என்று எண்ணிக்கொண்[illegible] நான் கடற்கரைப் பக்கம் போனேன். அப்[illegible] மாலை ஐந்து மணி ஆகி இருந்தது.

எதிரில் எத்தனையோ காட்சிகள் தென்பட்டா லும், அவற்றிலெல்லாம் அப்போது என் மனம் ஈடு

படவில்லை. பேச்சாளர் பேசிய பேச்சை—பழங்காலத் தமிழர் பண்பாட்டை—என் மனம் எண்ணிக் கொண்டே இருந்தது. என் கால்கள் வழக்கமாகச் செல்லும் பாதையில் நடந்து கொண்டிருந்தன. என் மனத்திரையில் திருவள்ளுவர், இளங்கோவடிகள், சாத்தனர், கம்பர் போன்ற புலவர் பெருமக்கள் தோன்றி மறைந்து கொண்டிருந்தனர். அவர்கள் வழி வந்த தமிழர், இன்று எந்த நிலையில் இருக்கிறார் கள்? என்று ஆராயத் தொடங்கினேன்.

பிற நாட்டாருக்கெல்லாம் தமிழர் அழகான ஆடை கொடுத்துக் கப்பல் வாணிகம் கம்பீரமாகச் செய்தார்களாம்; புகார்த் துறையிலிருந்து ஏற்றுமதி யான ஒவ்வொரு பொருளிலும் புலிச் சின்னம் பொறித்தனுப்பப்பட்டதாம். ஒவ்வொரு கப்பலிலும் ஒய்யாரமாகத் தமிழ்க் கொடி வானளாவிப் பறந்த தாம்; சோழநாட்டு மக்கள் உழவிலே மேன்மையுற் றிருந்தார்கள்; சோம்பலின்றி அவர்கள் சுறுசுறுப் பாயுழைத்துக் காவிரியாற்றைக் கவனத்துடன் பயன் படுத்தித் தானியத்தை மலையெனக் குவித்து மாண் புற்றார்கள்; சோழ நாடு சோறுடைத்தென்று பிற நாட்டவரெல்லாம் அதனைப் பாராட்டினார்களாம்.

அத்தகைய உயர்நிலையை எண்ணும் எண்ணங் களுக்கிடையில் தற்காலத் தமிழகம் என் கவனத் துக்கு வரத் தொடங்கியது. அத்துடன், சில மாதங் களுக்கு முன் தமிழ் நாட்டிலிருந்து இங்கு வந்து பேசிய ஒருவர் பொருளில்லாத பேச்சும் என் எண்

ணத்தில் எழுந்தது. தமிழர்கள் கவரி மானைப் போன்று மானமுடையவர்களாம்; உடம்பிலுள்ள ஒரு மயிர் போயினும் உயிர் தரிக்காதாம் கவரிமான். தமிழர்களும் அத்தகையவர்களாம். இந்த நிலை ஒரு காலத்தில் இருந்திருக்கலாம்; இன்றைக்கு இல்லை யென்பது உறுதி. இந்தப் பம்பாய் நகரில், ஏன்— உலகில் பல பாகங்களிலும் தமிழர் எவ்வளவு இழி வாக நடத்தப்படுகிறார்கள்? குறிப்பாகப் பம்பாய் தாராவிப் பகுதியில் தமிழர்கள் எவ்வளவு இழிவாக நடந்து கொள்ளுகிறார்கள்? எவ்வளவு இழிந்த தொழில் உலகில் இருக்க இயலுமோ அவற்றையெல் லாம் கூசாமல் செய்பவர் யாரென்றால்—உடனே தமிழர்கள் என்று கூறலாம். அந்த நிலையில்தான் இன்றைய தமிழர்கள் வாழ்கிறார்கள். தாய் நாட்டை விட்டுப் பிற நாட்டிற் குடியேறி வாழ்வது எல்லோ ருக்கும் பொதுவானதுதான். ஆனால், இவ்வளவு இழிவாக—மானத்தை மறந்து — வேறு மக்கள் நடந்து கொள்வதென்பது முடியவே முடியாது. இது வரை நான் பார்த்ததில்லை. நான் எத்தனையோ நக ரங்களைக் கண்டிருக்கிறேன்—சென்னையைப் போன்ற பிச்சைக்காரர் நிறைந்த நகரத்தை வேறு எங்கும் காணவில்லை. வறுமையால் வாடி வதங்கும் பிறரை யும் நான் காண்கிறேன்; தமிழரைப் போன்று பிச்சையெடுக்கும் அளவுக்கு இறங்கிவிட்ட பிறரைக் கண்டதில்லை; காணவும் முடியாது!

ஐரோப்பியரும், அமெரிக்கரும், ஜப்பானியரும், சீனக்காரரும் பலர் சென்னையில் இருக்கிறார்கள்.

அவர்களெல்லாம் ரிக்ஷா இழுப்பதில்லை; மூட்டை சுமப்பதில்லை. குஜராத்தியரும், மார்வாரிக்காரரும் சென்னையில் பேட்டை பேட்டையாகக் குடியேறி வாழ்கிறார்கள்; பிச்சையெடுக்க அல்ல—பெரும் பொருள் ஈட்டித் தாயகத்துக்கனுப்ப. தாராவியில் சாக்கடை ஓரத்தில் தமிழரைத் தவிர வேறு எந்த இனத்தினலாவது இருக்க இயலுமா? எங்கே போனது இவர்கள் மானம்!—பண்டைய பண்பாடு! எல்லாவற்றுக்கும் வறுமைதான் என்று பதில் சொல்லலாம்—சொல்லப்படுகிறது. இவர்கள் தமிழகத்திலேயே வறுமையால் வாடி—இறந்து, தமிழர் மானத்தையும், பண்பாட்டையும் காத்திருக்கலாம். அந்த மானமும் பண்பாடும் மங்கி மறைந்து விட்டது போலும்!

"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதினினும் உயர்ந்தன்று."
(புறம் 204).

என்ற புறநானூற்றுப் புலவனின் பொன்னுரையும்,

"ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இனிவந்த தில்."

என்ற திருவள்ளுவரின் கருத்தும் இப்போது யாண்டுச் சென்றொளித்தன? என்று எண்ணமிட்டவனாய் சிறிது நேரம் ஆழ்ந்து கிடந்தேன்.

ஒரு காலத்தில் உயர்ந்த நாகரிகமும், பெருகிய செல்வமும், மானமுங் கொண்டிருந்த தமிழர்கள்

இன்று எல்லாவற்றிலும் இழிந்து போனதற்குக் காரணமென்ன? என்று என் மனம் ஆராயத் தூண்டியது. நாம் ஆராய்ந்து என்ன பயன்? தாய்த் தமிழகத்தில் இருப்பவரல்லவா இதை எண்ண வேண்டும் என்று ஒரு நினைப்புத் தோன்றியது. ஆனல் என் மனம் அமைதியுறவில்லை. எங்கிருந்தாலும் நாம் தமிழர்தானே! தமிழர் வாழ்வுக்கு எல்லோருந்தானே ஆராய வேண்டியுள்ளது? மலையிலிருந்தாலும், மண்ணுக்கடியில் கிணற்றிலிருந்தாலும், பொங்கும் கடலில் பொலிவுடனிருப்பினும் நீர், நீர்தானே! பூங்காவில் சாய்வு இருக்கையில் அமர்ந்து கொண்டிருந்த நான் மேலே பார்த்த வண்ணம் இவற்றை எண்ணிக் கொண்டிருந்தேன். மரக்கிளையில் கட்டெறும்புகள் சாரையாகச் சென்று கொண்டிருந்தன. பாவம்! பெரிய பல்லியொன்று, வரும் எறும்புகளை யெல்லாம் விழுங்கிக் கொண்டே இருந்தது. உணர்வுங் கண்ணுமில்லாத ஏழை எறும்புகள் பல்லியின் வயிற்றுக்குள் சென்று கொண்டே இருந்தன. இவற்றையெல்லாம் ஆராய்ந்து கொண்டிருந்த என் மனம், இன்றைய கூட்டத்துக்குக் காரணமாயிருந்த நடேசனை இடையிடையே எண்ணியது.

தாராவியில் வாழும் தமிழர் கூட்டத்தில் நடேசனும் ஒருவன். ஆனல் உயர்ந்த உள்ளமுள்ளவன்; பெருந்தன்மை மிக்கவன்; நடேசன் இங்கு வந்து குடியேறி ஓராண்டு முடிந்தபின்னும் தன்னைப் பற்றி எதையுங் கூற மறுக்கிறுன். "நாங்கள் வறுமையால் விரட்டியடிக்கப்பட்டோம்" என்று மட்டுங் கூறு

கிருன்; மேற்கொண்டு அவன் எதையும் சொல்வதில்லை. தமிழ் நாட்டில் பல பாகங்களிலிருந்து பலர் இங்கு வந்து குடியேறி இருக்கின்றனர். இவர்கள் எந்த ஜில்லாக்காரர்கள் என்பதும் தெரியவில்லை. எத்தனையோ சந்தர்ப்பங்களில் கேட்டும் மேற்கொண்டு நடேசன் எதையுஞ் சொல்லியதில்லை. அவன் பெருந்தன்மை, பிறரிடம் காட்டும் பரிவு முதலியவற்றைப் பார்த்தால் உயர்ந்த குடும்பத்து ஆளாக இருக்க வேண்டுமென்று தெரிகிறது. நல்ல குடும்பத்தில் பிறந்த—உயர்ந்த ஒழுக்கத்தோடு வாழும்—நடேசன் ஏன் தன்னைப் பற்றி எதையுங் கூற மறுக்கிருன் என்பது தெரியவில்லை. அதனுல், எனக்கு அதைப் பற்றி மேலும் மேலும் அறிய வேண்டுமென்னும் ஆவல் அதிகரித்தது. அதற்காக அவனிடம் நெருங்கிப் பழகுகிறேன். இதை ஆராயவே சென்ற மாதம் ஒரு நாள் அவன் வீட்டுக்கும் சென்றிருந்தேன். அவனைப் போலவே பெருந்தன்மையும், அடக்கமுங் கொண்ட அவன் மகள் வானமுதம், மகன் சிற்றரசு இருவரையுங் கண்டேன். வானமுதத்தைத் தினமும் நடேசனுடன் தொழிலுக்கு வரும்போது ஆலையில் பார்க்கிறேன். தொழிலாளராக இருவரையும் ஆலையில் சேர்த்ததும் நானே. இவர்களைப் போலவே பலரை நான் சேர்த்திருந்தாலும் இவர்களிடம் ஒரு தனிப் பண்பிருப்பதைக் காண்கிறேன். பஞ்சாலையில் நான் உயர்ந்த பதவியிலிருப்பதால் பலரைச் சேர்க்க முடிகிறது. அதற்காகப் பலர் என்னிடம் வருகிருர்கள். அவர்கள் வரும்போது—சேர்க்கும் வரையிலும் காட்

டும் பண்பு, சேர்த்த பிறகு காணப்படுவதில்லை. அவர்கள் இயற்கைப் பண்பு வெளி வந்து விடுகிறது. அதனால், உலகில் எல்லோருமே பொய்யாகத்தான் நடிக்கிறார்களா? என்று நான் பலமுறை எண்ணி வருந்தியும் இருக்கிறேன்.

நடேசன் குடும்பம் பம்பாய்க்கு வந்த சில நாட்களிலேயே எனக்கு அறிமுகமாய் விட்டது. நடேசன் முதன் முதல் என் வீட்டிற்கு மற்றொரு தொழிலாளியால் அழைத்து வந்து அறிமுகம் செய்துவைக்கப்பட்டான். இடம் காலி இருந்ததால் உடனே நடேசனையும் வானமுதத்தையும் ஆலையில் சேர்த்துவிட்டேன். அன்று முதல்முதல் என்னிடம் அழைத்துவந்தபோது நடேசனிடம் அமைதியும் பெருந்தன்மையும் எப்படி இருந்தனவோ அப்படியே இன்றுவரை இருக்கக் காண்கிறேன். நடேசன் வறுமையால் வாட்டமுற்றிருந்தாலும் அவன் அதைக் குறிப்பிடவே இல்லை. அவனை அழைத்து வந்த ஆள்தான் "இவர்கள் வறுமையால் வாடுகிறார்கள்" என்று அளவில்லாமல் அளந்து கொட்டினான். அது அவன் நடிப்பு; மேலும் தொழில் கேட்க வரும் பலரும் அப்படியே நடிக்கிறார்கள். உடன் வந்தவன் நடேசனுடைய வறுமையை வருணித்தபோது, நான் நடேசனைக் கவனித்தேன். அவன் கூறும் ஒவ்வொரு சொல்லும் நடேசனை அம்பு போலத் துளைப்பதாக நான் உணர்ந்தேன். என்னிடம் நடேசன் பேசிய யாவும் பெருந்தன்மையாகவே இருந்தன. சேர்த்துவிட்ட பிறகு வேறு துறைகளில் நான் நடேசனைச் சந்திக்க நேர்ந்திருக்கிறது. அவ்

போதும் நடேசன் தனக்கே உரிய பெருந்தன்மையில் சிறிதும் குறையவில்லை. உயர்ந்த உத்தியோகங்களில் இருப்பவர்களிடம் வலிய வந்து பலர், நட்பை அதிகரித்துக்கொள்ளுவார்கள். அது தயவுக்காக என்பது உலகறிந்த செய்தி. பல சந்தர்ப்பங்கள் ஏற்பட்டும் அவ்வாறு அவசியமற்ற பேச்சு, வணக்கம், நடிப்பு, எதுவும் நடேசனிடங் காணப்பட்டதில்லை. இவையெல்லாம் அவன் பெருந்தன்மைக்கு அடையாளமென்பதைச் சொல்லவா வேண்டும்?

தொழிலாளர் பலர் படித்துப் பெரிய அறிவாளிகளாக இருப்பதில்லை; இருக்கவும் முடியாது. அரசியல் கட்சித் தலைவர்கள் அளப்புகளுக்கெல்லாம் அவர்கள் கைப்பொம்மையாக—கருவியாக—மாறுவதற்கும் அதுவேதான் காரணம். ஆதலால் தொழிலாளருக்கு, சிறப்பாகத் தாராவியில் வாழும் தமிழ்த்தொழிலாளருக்கு நல்ல தெளிந்த அறிவும், ஒழுக்கமும் ஏற்படவேண்டும்; அது மற்ற தொழிலாளருக்கும் உதவும் என்று நான் பலநாள் எண்ணி, அதற்காக 'தமிழர் அறிவு வளர்ச்சிக் கழகம்' என்று ஒரு கழகத்தைத் துவக்க முடிவு செய்தேன். அதற்குத் தொழிலாளரிடம் ஆதரவுங் கிடைத்தது. இதை நடேசன் மிகவும் ஆதரித்துத் தொழிலாளர் பலரை அதில் உற்சாகமூட்டினன். இப்பணி நடேசனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அதிலிருந்து நடேசன் சுமாராகவாவது படித்திருக்க வேண்டுமென்று நான் முடிவுசெய்தேன். ஆனல் அவன் எதையுங் கூறியதில்லை. மறைத்தே வந்தான். அந்தக் கழகத்தின் சார்பில் அடிக்கடி பல

அறிஞர்களைக் கொண்டு வந்து சொற்பொழிவாற்றச் செய்வது வழக்கம்.

கழகக் கூட்டங்களுக்கு யார் வரத்தவறினாலும், நடேசனும், அவன் மக்களும் வரத் தவறியதில்லை. அதிலிருந்து அக்குடும்பமே அறிவொளி வீசும் குடும்பமாக இருக்குமென்று நான் எண்ணினேன். நடேசனுக்கு மனைவியிருந்தால் அவர்களும் கூட்டத்துக்கு வந்து இருப்பார்கள்; அப்படி வராமையால் மனைவி இல்லையோ? என்று நான் முதலில் ஐயப்பட்டேன். நான் சென்ற மாதம் அவர்கள் வீட்டுக்குச் சென்றிருந்தபோது நடேசனும் வானமுதும் இருந்தார்கள். அவர்களை எனக்கு நன்கு தெரியும். சிற்றரசு நடேசனின் மகன்; அவனை என்னைக்கொண்டுதான் நடேசன் பள்ளியில் சேர்த்தான். ஆகையால் அவனும் எனக்கு அறிமுகமானவன்தான். இந்த மூவருக்கு மேல் அன்று அந்த வீட்டில் யாருமில்லை. என்னிடம் இவ்வளவு அன்பைச் சொரியும் அக்குடும்பத்தில் நடேசன் மனைவி இருந்தால் அன்று கட்டாயம் நான் அவர்களைப் பார்த்திருக்கக்கூடும். ஆகையால் நடேசனுக்கு மனைவி இல்லையென்று நான் இதுவரை எண்ணியுள்ளேன்.

குடும்பச் செய்தியைத் தொட்டாலே நடேசன் முகம் மாறிவிடும். அடிக்கடி அவனை அதிகமாகச் சந்திக்க முடிவதில்லை. அலுவல் இருந்தால் சந்திப்போம்; அப்போதும் அதிகம் பேசமுடிவதில்லை. பெரும்பாலும் கழகத்தின் காரணமாகவே நாங்கள் சந்திக்க நேரிடும். நடேசனுக்குக் கழகத்திலிருக்கும்

ஆர்வத்தைக் கண்ட தொழிலாளர், செயற்குழு உறுப்பினருள் ஒருவராக நடேசனைத் தேர்ந்தெடுத்தார்கள். பேச்சாளரை வரவழைக்கவும், அதன் ஏனைய செயல்களுக்கும் நான் நடேசனையோ அல்லது நடேசன் என்னையோ சந்திக்கும் வாய்ப்பேற்பட்டது. அதனுலும் அதிகம் அவனிடம் பழக முடிந்தது. என்ன தான் பழகினுலும் அவன் வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை என்னுல் அறிய முடியவில்லை. நெருங்கிப் பழகும் நல்ல மனிதனின் வாழ்க்கை எப்படிப்பட்டதாயிருக்கும்? அவன் ஏன் எதையும் கூருது மறைக்கின்ருன்? இவ்வாராய்ச்சி மேலும் மேலும் என்னை அறிய தூபமிட்டு வந்தது.

இன்று சொற்பொழிவாற்ற வந்தவர் முதலில் 'எதைப்பற்றி பேசுவது?' என்று எங்களைக் கேட்டார். உங்களுக்குப் பிடித்தமான பேச்சை நீங்களே தீர்மானித்துப் பேசலாம் என்றேன் நான். இன்றைய தலைப்பை நடேசன்தான் கூறினுன். அவரும் அதைப் பேச இசைந்து எடுத்துக்கொண்டார். இதிலிருந்தும் நடேசன் அறிவு வெளிப்படுகிறதில்லையா? பழந்தமிழர் பண்பாட்டில் அவாக்கொண்டவன் நடேசன்; அதைத் தொழிலாளருக்குத் தெரிவிக்க வேண்டுமென்று அவன் அறிவு மனம் விழைந்தது. அதனுல் அவன் இத்தலைப்பை வெளியிட்டான். நன்ருக வாழ்ந்துகெட்ட குடும்பத்தில் பிறந்தவர் தவருக நடக்கிருர்கள். அதைக்கண்ட பலர் அனுதாபப்படுகிருர்கள். அவர்களுக்கு அவர்தம் முன்னேரின் நிலையைக் கூறுகிருர்கள். கூறுபவர் எண்ணமென்ன?

இவ்வாறு தவருக நடக்கும் இவர்களுக்கு, இவர்கள் முன்ஞேர் நிலை தெரிந்தால் சிறிதேனும் திருந்தமாட்டார்களா? என்பது கூறுபவரின் இரக்கம். அந்நிலையில்தான் நடேசன் இத்தலைப்பை வெளியிட்டான். தமிழர் நல்வாழ்வுக்கு அவன் எவ்வளவு இரக்கங்காட்டுகிருன்? தமிழர் பூர்வ குடிகள், வரலாறு காணுத காலத்திலிருந்து அவர்கள் நல்ல பண்பாட்டில் வாழ்ந்துவந்தவர்கள்; இப்போது வறுமை என்ற பேரால் அவர்கள் அந்தப் பண்பாட்டிலிருந்து விலகி நடப்பது நடேசன் போன்றவருக்கு ஒப்பவில்லை. அதனுல் இத்தலைப்பில் பேசச்செய்து தமிழருக்கு நல்லறிவு புகட்ட அவன் விழைந்தான். இவ்வளவு அறிவும், உயர்ந்த நோக்கமுங்கொண்ட நடேசன் வாழ்க்கையில் என்னென்ன மறைந்திருக்கின்றனவோ? அவற்றை அவன் மறைக்கக் காரணமென்னவோ என்று பலநாளாய் நான் துருவத் தலைப்பட்டேன்; ஒன்றும் புலனுகவில்லை. இப்போது அந்த எண்ணம் என்னை அதிகமாக உந்துகிறது. எப்படியும் நடேசனிடம் அவர்கள் வாழ்க்கையைப் பற்றி அறிய வேண்டும் என்று முடிவு கட்டினேன். சொற்பொழிவை ஆராய இறங்கிய நான் நடேசன் வாழ்க்கையை ஆராய முடிவு செய்தேன். சுற்றிலும் பார்த்தால் பூங்காவிலிருந்த மக்கள் சென்றுகொண்டிருந்தனர். அதிக நேரம் ஆகிவிட்டதென்று நான் கைக்கடிகாரத்தை நோக்கினேன்; மணி எட்டு ஆகி இருந்தது; நிலாவைப் பார்த்தேன்; கருமேகம் ஒன்று திங்களை மறைத்து விட்டது. ஆயினும் திங்கள் தன் குளிர்ந்த நிலவைக் கூடியமட்டும் உலகிற்கு வழங்கிக் கொண்டுதான் இருந்தது.

நடேசனைப் பற்றிப் பலவாறு எண்ணமிட்ட வறுய் நான் நடக்கத் தொடங்கினேன். பாதையின் இருமருங்கிலும் மரப் பொந்துகளிலுள்ள தவளைகள்-ல-ல-ல-ல என்று கத்தும் ஒலி எனக்குப் பரபரப்பை ஊட்டியது. பறவைகள் பாட்டெல்லாம் அடங்கிக் கிடந்தாலும், கிரீச்—கிரீச் என்று ஆந்தை யலறல்—நாய் குரைப்புகள் கேட்டவண்ண மிருந்தன. இடையிடையே மோட்டார்களின் எச்சரிக்கையொலி வேறு கேட்ட வண்ணமிருந்தது. இத்தனை ஒலிகளுக்கு இடையில் நான் நடந்துகொண்டே இருந்தேன். மின்சார விளக்குகள் பாதையோரத்தில் வரிசையாக எரிந்து கொண்டிருந்தன. பழம் என்று நம்பிய பூச்சிகள் விளக்கைச் சுற்றிப் பறந்து கொண்டிருந்தன. ஆனல் அங்கும் பல்லிகள் பல வந்து பூச்சிகளைப் பழம்போலச் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. பூச்சிகள் சாவதைக்கண்ட எனக்குத் தமிழர்கள் நினைவுதான் வந்தது. பல தெருக்களைக் கடந்து எங்கள் தெருவுக்குள் வந்துவிட்டேன். மீண்டும் நடேசன் எண்ணம் எழுந்தது. நாளைக்கு ஞாயிற்றுக் கிழமையாகையால் நாளைக்கு நடேசனிடம் சென்று பேசி ஏதாவது அறியலாம் என்று முடிவு கட்டிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தேன்.

என் வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்த என் மனைவி என்னை வரவேற்றாள். வழக்கமான கேள்விகளைக் கேட்டாள். நானும் வழக்கம்போலப் பதில் சொல்லியிருப்பேனில்லையா?

'எந்நேரமும் தமிழர், தமிழர் உயர்வு என்றே இறங்கிவிட்டாற்போலிருக்கிறதே' என்ருள் என் மனைவி முல்லை.

என்ன செய்வது முல்லை? ஒரு காலத்தில் உலகமே வியக்கும்படி உயர்நிலையில் வாழ்ந்தது அக்குடி. தமிழரின் ஆடைக்கும், முத்துக்குந் தவங்கிடந்தது உலகம்! நாகரிகத்துக்கு நாயகமாய்த் திகழ்ந்தார்கள் நம் முன்னோர்கள். அவர்கள் வழித்தோன்றல்களான இக்காலத்தமிழர் மற்றவரெல்லாம் பரிதாபப்படும் அளவுக்குத் தாழ்ந்து விட்டார்கள்! நம்போன்றவர்களால் இதைக் காண முடியாது வருந்த வேண்டியுள்ளது; என்ன செய்வது என்றேன் நான்.

'நீங்கள் ஒருவர் துன்பப்பட்டுத் தமிழகத்தை உயர்த்த முடியுமா? ஒருவர் கை தட்டிஞல் இரைச்சல் ஏற்படாதே? இன்றைய அத்தனைத் தமிழரும் இதையெண்ணிஞல் ஏதாவது வழி தோன்றலாம்; உங்களால் மட்டும் அல்லது—சிலரால் மட்டும் தமிழ் நாடு உயர்ந்துவிட முடியாதல்லவா' என்ருள் முல்லை.

குழாயில் முகங் கழுவிக்கொண்டு ஆடைகளை மாற்றிக்கொண்டே நான் தமிழர் சார்பில் முல்லைக்குப் பதில் சொல்ல முனைந்தேன்; நீ சொல்லுவதிலும் பொருள் இல்லாமலில்லை! ஆஞல் எல்லோரும் அப்படியே எண்ணிக் கொண்டிருந்துவிட்டால் முதலில் தொடங்குவது யார் முல்லை?

'நீங்கள் சொல்வதும் எனக்குப் புரிகிறது; ஒருவர் கைதட்டினால் பேரிரைச்சல் கேட்காதே என்று தான்.........'

துணிந்து ஒருவர் முதலில் கைதட்டினால் பின்னாலாவது பலர் தட்டுவார்கள்; தெரிந்தவர் தெரியாதவர் எல்லோருமே சும்மா இருந்தால் முதலில் தட்டுவதுதான் யார்? முதலில் தெரிந்தவர் தட்டினால் மற்றவர் அதைப் பார்த்தாவது பின்னால் கலந்து கொள்ளமாட்டார்களா?

'பம்பாயிலிருக்கும் நாம் என்னதான் செய்துவிட முடியுமென்பது எனக்கு ஒன்றுந் தோன்றவில்லை. அதிருக்கட்டும்; இன்றைய கூட்டத்துக்கு என்னால் வரமுடியாது போய் விட்டது; பேச்சு எப்படி?' என்றாள் முல்லை.

ஆமாம் முல்லை! அதைக் கேட்க மறந்தே விட்டேனே! வருவதாகச் சொன்னாய்! ஏன் வரவில்லை?

'ஆமாம்! நான் வராதது இங்கு நான் கேட்ட பிறகுதானே உங்களுக்கு ஞாபகம் வந்தது? கூட்டத்தில் இருக்கும்போது உங்களுக்கு என் நினைவு வந்திருக்காதல்லவா?' என்று கிண்டலாகக் கேட்டாள்.

உண்மையைச் சொல்லட்டுமா முல்லை?

'பின் என்ன? பொய் சொல்லலாம் என்று எண்ணிக்கொண்டு வந்தீர்களா என்ன? உண்மையையே சொல்லுங்கள்' என்றாள் சிரித்துக் கொண்டே.

நீ வருவதாக இங்குக் கூறினாய்; கூட்டத்தில் உண்மையில் நீ வந்தாயா—இல்லையா? என்று பார்க்க மறந்தே போனேன். பிறகு கூட்டத்திலிருந்து அப்படியே பூங்காவுக்குப் போய் விட்டேன். அங்கு எதை யெதையோ எண்ணிக்கொண்டிருந்தபோது உன் நினைவு வந்தது; அப்போதுதான் என் மறதியை எண்ணி வருந்தினேன். கூடிய வரையில் ஞாபகப் படுத்திப் பார்த்தேன்; நீ வந்ததாகத் தெரியவில்லை. ஏன் தங்கி விட்டாய் என்பதை வீட்டுக்குப் போனதும் கேட்க வேண்டுமென்று பூங்காவில் நினைத்துக் கொண்டேன்; இங்கு வந்ததும் அதையும் மறந்து விட்டேன். அதிருக்கட்டும். நீயேன் வரவில்லை? என்றேன் நான்.

'மறதியை உடன் பிறவியாகக்கொண்டுள்ள நீங்கள்—தமிழகத்தின் உயர்வில் ஈடுபட்டு—என்னையும், குழந்தை அருளையும் எங்கே மறந்து விடுகிறீர்களோ என்றுதான் நான் பயப்படுகிறேன்.'

அது இருக்கட்டும் முல்லை! நீ ஏன் வரவில்லை? ஒருகால் அருளுக்கு ஏதாவது........

'அப்படி ஒன்றுமில்லை. எனக்குத் தலை வலிப்பது போல இருந்தது; வெளியில் காற்றிலும் பஸ்ஸிலும் அலைந்தால் அதிகமாகிவிடுமோ என்றுதான் தங்கி விட்டேன். வேறொன்றுமில்லை' என்றாள் முல்லை.

மணி ஒன்பது ஆகிவிட்டது என்பதைக் கடிகாரம் ஒன்பது முறை அடித்து அறிவித்தது. வேலைக்காரனும் நேரமாகி விட்டதை எங்கள் பேச்சுக்கிடை

யில் வந்து குறிப்பிட்டுச் சென்றான். பிறகு உணவுக்குச் சென்றோம். அப்போது அருள் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தான். கபடற்ற அவன் முகம் விளக்கொளியில் நன்றாகத் தெரிந்தது. எங்கள் பேச்சுக்கிடையே நடேசன் நினைவு தோன்றி மறைந்தது. பிறகு சாப்பிடச் சென்றோம். முல்லை உணவு படைத்தாள். பிறகு அவளும் சாப்பிட்டாள். வாசலில் நாற்காலியிலமர்ந்தபடியே நாங்கள் வழக்கம் போலப் பேசத்தொடங்கினோம். வெளியுலகில் அதிக கவனஞ் செலுத்தாது குடும்ப உயர்வு, கணவன் மேன்மை, குழந்தை வளர்ச்சி, இவைகட்குப் பிறகு வெளியுலக வாசனை—இப்படி வாழ்க்கையை வகுத்துக் கொண்டு வாழும் முல்லையை நினைத்து நான் உள்ளூரப் பாராட்டிக் கொள்வதுண்டு. படிப்பு, அறிவு, அனுபவம் எல்லாம் என்னைப்போலவே அமைந்துள்ள முல்லை, வெளியுலகத்தை மறந்து கணவன், அன்பு, குடும்பம் என்று வாழ்க்கையைக் குறுக்கிக்கொண்டு வாழ்ந்து வருவது எனக்கே வியப்பாக இருக்கும்! பண்பாடென்பதற்குப் பொருள் முல்லையின் வாழ்க்கைதான் என்று நான் எண்ணிக் கொள்வதுண்டு.

'நம் நாட்டுப் பெண்கள் இயற்கையாகவே தியாக புத்தியுடையவர்கள்; ஆண்களுக்கும் அவர்களைப் போலத் தியாக உள்ளம் வேண்டும்' என்று அடிக்கடி காந்தியடிகள் குறிப்பிட்டது எனக்கு ஞாபகம் வரும். முல்லைக்குச் செய்தித்தாள் அளவோடுதான் வெளியுலகம் தெரியும்; விடுமுறை நாட்களில் படக்காட்சி, பொருட்காட்சி, நாடகம், சொற்

பொழிவு என்று சில மணி நேரம் என்னுடன் வருவ தோடு வெளியுலகம் முடிந்து விடும். அதற்குமேல் வெளியுலகமே தெரியாதவள் முல்லை. நான் வீட்டுக்கு வந்ததும், 'இன்று ஏதாவது விசேஷச் செய்தி?......' என்பாள். அதற்காக நான் அரசியல், உளநூல், வாழ்க்கை, படக்காட்சி விமரிசனம் என்று ஏதாவ தொன்றைப் பற்றி ஒவ்வொரு நாளுங் கூறுவேன். அவளும் ஆவலோடு கேட்பாள். அந்த வழக்கப்படி தான் இன்று சொற்பொழிவைப் பற்றிக் கேட்டாள். ஆனல், இன்று சொற்பொழிவைவிட நடேசன் நினைவே அதிகமாக நிற்பதால் அவனைப் பற்றிக் கூறலாமென்று எண்ணினேன்.

முல்லை! இன்று ஒரு அரிய செய்தி கொண்டு வந்திருக்கிறேன் என்று பீடமிட்டுத் தொடங் கினேன்.

'என்ன அது!!' என்ருள் முல்லை.

நான் வேலை செய்யும் ஆலையில் ஆயிரத்துக்கு மேற்பட்ட தமிழர்கள் வேலை செய்கிருர்கள்; அவர் கள் எல்லோரும் தமிழ் நாட்டிலிருந்து இங்து வந்து குடியேறியவர்களே. அவர்களில் நடேசன் என்று ஒருவன் சென்ற ஆண்டு வந்து சேர்ந்தான். அவன், அவன் மகள் இருவரும் ஆலையில் வேலை செய்கிருர் கள்—என்று நான் கூறியபோது முல்லை இதை மகிழ்ச்சியாகக் கேட்கவில்லை என்று உணர்ந்தேன். வேறு எதையோ அவள் எண்ணிக்கொண்டிருந்தாள் என்பது அவள் சிந்தனையால் தெரிந்தது.

'இப்போது ஆலைத் தொழிலாளருக்கு என்ன வந்தது? இன்றைய சொற்பொழிவில் எது பற்றிப் பேசப்பட்டது? வந்தவர் நல்ல பேச்சாளர்தானா!' என்றாள் முல்லை.

சொற்பொழிவு நன்றாக இருந்தது! நல்ல பேச்சாளர்; பழந்தமிழர் பண்பாடு என்பதைப் பற்றி நன்றாகப் பேசினார் என்று நான் கூறினேன்.

'நடேசன் என்றீர், அவன் மகள் என்றீர், யாரவர்கள்? அவர்களுக்கென்ன?' என்று பேச்சை மாற்றத் தொடங்கினாள்.

அவர்களைப் பற்றிக் கூறத்தான் நான் தொடங்கினேன்; இதற்குள் சொற்பொழிவைப்பற்றிக் கேட்கவே நான் அதைக் கூற ஆரம்பித்தேன். நீ சொற்பொழிவை எதிர்பார்த்து, நான் வேறொன்றைக் கூறினால் அது நன்றாக இருக்குமா? என்றுதான் சொற்பொழிவைப் பற்றிக் கூறத் தொடங்கினேன்; இப்போது நீ நடேசனைக் கேட்டு விட்டாய்; நடேசன் மிகவும் நல்ல மனிதன் முல்லை! என்றேன் நான்.

'நடேசனிடம் மட்டும் உங்கள் கவனம் சென்றது ஏன்?' என்றாள் முல்லை.

அவர்கள் நற்பண்பு என்னையீர்த்துக் கொண்டது முல்லை! உயர்ந்த பண்பாடு அவர்களிடம் உறைந்து கிடக்கிறது. அடக்கம், பொறுமை, பெருந்தன்மையெல்லாம் அவர்களிடம் காண்கின்றேன் நான். அவர்களை நினைக்கும்போது என்னையறியாமல்

ஒரு இரக்க உணர்வு தோன்றுகிறது. ஆலேயில் எண்ணற்ற மக்களைக் காண்கிறேன், எத்தனேயோ பேர் என்னிடம் வலிய அன்பு காட்டுகின்றனர். எத்தனேயோ பேர் தம் வறுமையை வருணித்துக் கூறக் கேட்கிறேன். அவர்களிடமெல்லாம் ஏற்படாத ஒரு வித அன்பு, எனக்கு நடேசனிடம் தோன்றுகிறது. அதற்குக் காரணம் அவர்களிடமுள்ள நடக்கையே தவிர வேருென்றுமில்லே; இதுவரை தம் வறுமை, குடும்பத் தொல்லே, என்று எதையும் நடேசன் என்னிடம் குறிப்பிட்டதே இல்லே...........

'இவ்வளவு தூரம் நீங்கள் வருணிப்பதைப் பார்த்தால்!......எனக்கு ஒன்றும் விளங்கவில்லேயே? அவர்கள் யார்? நான் அவர்களே எப்போதாவது பார்த்திருக்கிறேஞ?'

நடேசனே மட்டும் நீ பார்த்திருக்கக்கூடும், மற்றவர்களேப் பார்த்திருக்க மாட்டாய் என்று எண்ணுகிறேன்.

'நடேசனே மட்டும் நான் எங்குப் பார்த்தேன், கூறுங்கள்! நான் ஞாபகப்படுத்திப் பார்க்கிறேன்!'

நடேசன் கழகச் சம்பந்தமாகச் சில நாட்களில் நம் வீட்டுக்கு வந்திருக்கிருன்; அப்போதெல்லாம் கூட நீ கவனித்திருக்க மாட்டாய்! ஒரு நாள் அவன், மகனேப் பள்ளியில் சேர்க்க என் உதவி வேண்டி நம் வீட்டுக்கு வந்தான். அப்போது சாப்பிடச் சொல்லி நான் வற்புறுத்தினேன். அப்போது நீயும் என்னுடனிருந்தாய். நாம் எவ்வளவு கட்டாயப்

படுத்தியும் அவன் சாப்பிடவில்லை. அப்போதுதான் நீ நேரில் கண்டாய். ஞாபகம் செய்துகொள்ள முடிந்தால் எண்ணிப் பார்! என்றேன் நான்.

'ஒருவாறு நடேசன் ஞாபகத்துக்கு வருகிறான்; அவர்கள் தமிழ் நாட்டில் எந்த ஜில்லாக்காரராம்?'

அதுதானே தெரியவில்லை! அவர்கள் வாழ்க்கையை அறிந்துகொள்ள எவ்வளவு முயன்றும் இது வரை முடியவில்லை. முடியாததாலும், அவர்களிடம் காணப்படும் உயர்ந்த ஒழுக்கத்தாலும் அவர்களைப் பற்றி அறியவேண்டுமென்னும் ஆவல் அதிகமாகிறது. இதுவரை வெற்றி கிட்டவில்லை.

'அவர்கள் உங்களுக்கு எப்படி அறிமுகமானார்கள்?'

நான்தான் அவர்களை ஆலையில் சேர்த்தேன். என்றால் சேர்க்கப்பட்டவர்கள் எப்படி இருக்கிறார்கள்? என்று கவனிப்பது என் வழக்கம். அதன்படி நடேசன், அவன் மகள் இருவர் நடத்தைகளையுங் கவனித்து வந்தேன். அவர்களை மிகவுயர்ந்த மக்களாகக் கருதுகிறேன். அவர்கள் வாழ்க்கையில் சொல்லமுடியாத ஏதோ நிகழ்ச்சி நிகழ்ந்திருக்க வேண்டுமென்று எண்ணுகிறேன். அதனால்தான், அவர்கள் எதையுங் கூற மறுக்கிறார்கள். ஆனால் பயப்படுகிறவர்களாகத் தெரியவில்லை. அப்போது தூங்கிக்கொண்டிருந்த அருள் எழுந்துகொண்டு அழுததால் முல்லை அறைக்குச் சென்று அவனைச் சமாதானம் செய்து கொண்டிருந்தாள். பற்றற்ற

துறவியைப்போல அவள் கேட்டதோடு அச்செய்தியை விட்டுத் தன் கடமையைக் கவனிக்கச் சென்று விட்டாள். ஆனால் அந்த நிலை எனக்கு ஏற்படவில்லை. இதற்குக் காரணம் உணர்ச்சிதான் என்று தெரிந்தாலும் அதை என்னால் அடக்க முடியவில்லை. எத்தனையோ விதமான உணர்ச்சிகள் என் உள்ளத்தில் எழுகின்றன; இரங்கத்தக்க உணர்ச்சி எனக்கு ஒருமுறை ஏற்பட்டுவிட்டால் அநேக நாள் வரையிலும், அது என் உள்ளத்தில் இடம் பெற்றிருக்கும். அதிலும் நடேசனைப் பற்றி எழுந்த இந்த உணர்ச்சி என்னால் கட்டுப்படுத்த முடியாத ஒன்றாக ஆகிவிட்டது. நேரமாகி விட்டதாலும், அருளைத் தூங்க வைக்க வேண்டியதாலும் முல்லை படுக்கைக்குச் சென்று விட்டாள்.

வாசலில் அமர்ந்தபடியே நான் அண்ணாந்து பார்த்துக்கொண்டு ஆழ்ந்து கிடந்தேன். நீல வானத்தில் நட்சத்திரங்கள் மின்னுவது, காலை நேரத்து நீலக் கடலில் செஞ்ஞாயிற்றின் கதிர்களைப் பெற்று மின்னும் அலைகள் ஞாபகத்துக்கு வந்தது. வேறு எண்ணமற்ற என் உள்ளத்தில் நடேசனைப் பற்றிய சிந்தனை நடமாடிக் கொண்டிருந்ததுபோலவே, வெண் மேகத்துக்குள் புகுந்து ஆராய்வதுபோலச் சந்திரன் ஓடித் திரிந்துகொண்டிருந்தது. முல்லைச் செடி அழகாக மலர்ந்து நறுமணத்தை நாலாபக்கங்களிலும் பரப்பிக் கொண்டிருந்தது. குளிர்ந்த காற்று என் உடலைத் தழுவியதும் எனக்கு ஒரு புத்துணர்வு தோன்றியது. சிறிது நேரம் மாடியின்மேல் நிலாவில் காற்று வாங்க

லாம் என்று சென்றேன். பால் போலக் காயும் நிலா வில் ஊரில் பெரும் பகுதி தெரியாவிட்டாலும் தெரிந்த அளவு ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருந்தது. பாதை களில் மக்கள் நடமாட்டம் குறைந்து விட்டது. நிமிடத்துக்குக் குறைந்தது ஐம்பது கார்கள் ஓடிக் கொண்டிருக்கும் எங்கள் வீதியில், இன்று ஒரு காரைக்கூடக் காணவில்லை. வீதி ஒழுங்கு செய்யும் போலீஸ்காரனும், வீடுகளைக் காவல் செய்யும் நாய் களும், மின்விளக்குகளும், திங்களும் மட்டும் தூக்க மின்றித் தத்தம் கடமைகளில் ஈடுபட்டிருந்தன. உலகமே மோனத்தில் ஆழ்ந்துள்ளது போலக் காணப் பட்டது. சிறிது நேரங் கழித்து நானும் படுக்கச் சென்றேன். மணி பனிரண்டாகி இருந்தது. ஆயி னும் எனக்குத் தூக்கம் வரவில்லை; மேலும் மேலும் சிந்தனை ஓடிக்கொண்டே இருந்தது. கண்கள் மட்டும் மூடிக் கொண்டிருந்தன.

அருள் அழுது என்னை எழுப்பி விட்டான். பொழுது புலர்ந்து விட்டிருந்தது; குடும்பக் கடமை களைக் கவனித்துக் கொண்டிருந்தாள் முல்லை. எடுத் துக்கொண்டு நான் எவ்வளவு சமாதானம் செய் தாலும் அருளின் அழுகை அடங்கவில்லை. அடிக்கடி பழகுபவரிடந்தானே குழந்தைகள் நிம்மதியாக இருக் கும்? எப்போதோ எடுத்துக் கொஞ்ச நேரம் பழகும் என் சமாதானத்தை அவன் ஏற்றால் தானே? வீட்டி லுள்ள விளையாட்டுக் கருவிகள் அத்தனையையும் அவன் முன் கொண்டு வந்து வைத்தேன். அவற்றை யெல் லாம் எடுத்தெடுத்து எறிந்துவிட்டு அவன் மேலும் உரக்க அழத் தொடங்கினான். நான் முல்லையைக் கூப்

பிட்டேன்; அதற்குள் அவளும் சிரித்துக்கொண்டே வந்தாள்; அழுகை யெல்லாம் எங்கோ பறந்தது! தாயின் அணைப்பில் ஆழ்ந்து கிடந்தான் அருள். தாயிடம் குழந்தைக்குள்ள நம்பிக்கையைக் கண்டு வியந்த வண்ணம் நான் என் காலைக் கடமைகளைக் கவனிக்கச் சென்றேன்.

சிற்றுண்டிக்குப் பிறகு நடேசன் வீட்டுக்குப் போகப் புறப்பட்டேன். நகரத்தில் சுற்றுவதென்றால் சிலருக்கு வெறுப்பாக இருக்கும்; ஆனால், அதுவே சிலருக்கு ஆனந்தமளிக்கும். சுற்றிக் கொண்டிருப்பதையே வேலையாகக் கொண்டவர்கள் அதை வெறுக்கிறார்கள். காட்சி, வேடிக்கையென்று சுற்றும் என் போன்றவருக்கு அது வெறுப்பாக எப்படி இருக்க முடியும்? சிலப்பதிகாரத்தின் செம்மையைச் சொல்லக் கேட்கும் போதும், படிக்கும் போதும் உள்ளத்தில் அளவில்லாத உணர்ச்சி அலைமோதுகிறது. அதே சிலப்பதிகாரத்தைப் பாடமாக வைத்து விட்டால் மாணவர் அதை வெறுப்பாகப் படித்துத் தொலைக்க வேண்டியதாகிறதல்லவா? சில நண்பர்கள் என்னைக் கண்டதும் 'வெறுப்பே இல்லாமல் என்னேரமும் சுற்றுகிறீர்களே?' என்று கேட்பார்கள். அதில் அவர்கள் எவ்வளவு வெறுப்புக் காட்டுகிறார்கள் என்பதை அவர்கள் கேள்வி விளக்குகிறதில்லையா? அவர்கள் கூறும் அளவுக்கு எனக்கு வெறுப்பு ஏற்படுவதில்லை. பல நண்பர்களை இடையிடையே சந்தித்துப் பேசி விட்டு நடேசன் வீட்டுக்குச் சென்றேன்; அப்போது மணி பத்தாகி யிருந்தது.

அவர்கள் சாப்பிடும் நேரம் அது என்பது எனக்குத் தெரியாது. என்னைக் கண்டதும் அவர்களால் என்னை விட்டு விட்டுச் சாப்பிட முடியாதல்லவா? வீட்டிலும், நண்பர்கள் தொந்தரவால் வெளியிலும் பலமுறை சாப்பிட்டுச் சென்றிருக்கும் நான் மீண்டும் சாப்பிட விரும்பவில்லை. அவர்கள் என்னைத் தொந்தரவு செய்தார்கள் என்பதைக் காட்டிலும், அவர்களிடமுள்ள அன்பு என்னை அளவிலாது வற்புறுத்தியது என்று கூறலாம். எதைத் தட்டிக் கழித்தாலும் அன்பைத் தட்டிக் கழிக்க முடியாதல்லவா? இறுதியில் நான் தோல்வியே அடைந்தேன். அவர்கள் அன்புக்காக கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு எல்லோரும் அமர்ந்தோம்.

'இந்தப் பக்கமாக ஏதாவது வேலையாக வந்தீர்களா?' என்முன் நடேசன்.

ஆமாம்! என்றேன் நான்.

'வீட்டிலிருந்து வருகிறீர்களா? வேலை முடிந்து திரும்புகிறீர்களா?' என்முன் நடேசன்.

இன்று விடுமுறை யல்லவா? சில நண்பர்களைப் பார்த்து எத்தனையோ நாளாகிறது. அவர்களில் சிலர் அண்மையில் தமிழ் நாட்டுக்குப் போய் வந்தார்கள். அவர்களை யெல்லாம் பார்த்துப் பேசிவிட்டு வந்தேன். இந்தப் பக்கமாக வந்துவிட்டோமே, உங்களையும் பார்த்து விட்டுப் போகலாம் என்று நினைத்து வந்தேன்; வேறு ஒன்றுமில்லை என்றேன் நான். அதற்கு மேல் பேச ஒன்றும் வாய்ப்பில்லை.

பையன் நன்ருகப் படிக்கிருஞ? என்று நான் வேறு திசையில் பேச்சைத் திருப்பினேன்.

‘ஏதோ நன்ருகத்தான் படித்து வருகிருன்’ என்ருன் நடேசன்.

என்ன சிற்றரசு! நன்ருகப் படிக்கிருயா? என்றேன் சிறுவனைப் பார்த்து.

‘படிக்கிறேனுங்கோ!’ என்ருன் பையன்.

ஏதாவது செய்திகள்?........தமிழ் நாட்டு ஊர்ச் செய்திகள் உண்டா? என்றேன். அதிலிருந்து அவர்கள் சொந்த இடத்தையாவது அறியலாமென்று.

‘ஒன்றுமில்லேங்கோ!’ என்று முடித்து விட்டான் நடேசன்.

சாந்தத்தைத் தவிர வேறு எதுவுங் காணப்படவில்லை நடேசன் முகத்தில். வானமுது வீட்டுக் காரியங்களைக் கவனித்துக்கொண்டு எங்கள் பேச்சையுங் கேட்டுக் கொண்டிருந்தாள். நாங்கள் பேசிக் கொண்டிருந்தபோது பீமையா என்ற ஆலைத் தொழிலாளி ஒருவன், ‘வானமுது! அப்பா இருக்கிருரா?’ என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்தான். நான் வாயிலை நோக்கினேன்; சிற்றரசும் திரும்பிப் பார்த்தான். ஆனல், நடேசன் மட்டும் திரும்பிப் பாராமலேயே “ஏம்பா!’ என்று பதில் குரல் கொடுத்தான். வானமுது வாசலில் ரோஜாச் செடி வைத்திருந்தாள்; அது அன்று ஒரு மலரை முகிழ்த்திருந்தது. ஒரு வண்டு அதைச் சுற்றிச் சுற்றி வந்து அமரத் தொடங்கியது.

உள்ளே வந்த பீமையா என்னைப் பார்த்ததும் பரபரப்படைந்தான். எனக்கு ஒரு கும்பிடு போட்டான். 'இன்று மாலை ஒரு கூட்டம் நடக்கப் போகிறது. அதை நடேசன், வானமுது இவர்களுக்குத் தெரிவிக்க வந்தேன். நீங்களும் வருகிறீர்களா?' என்று கூறி என்னையும் அழைத்தான். சரியென்று நானும் பதில் கூறினேன். 'நீங்கள் எல்லோரும் வரணுங்கோ! இவர் தமிழ் நாட்டிலேயே பெரிய பேச்சாளர்! வந்திருக்கிறார். அவசியம் நீங்களெல்லாம் வரவேண்டும்' என்று கூறிச் சென்றுவிட்டான். நடேசன் முகத்தில் ஒருவித வெறுப்புணர்ச்சி ஏற்பட்டதைக் கவனித்தேன்; அதையே கோலாகக் கொண்டு தூண்டத் தொடங்கினேன்.

என்ன நடேசன்! பெரிய பேச்சாளர் வந்திருக்கிறாராமே? அவசியம் நீங்கள் மாலையில் போவீர்களல்லவா என்று தொடர்ந்தேன்.

'பேச்சாளராம்! பேச்சாளர்! என்ன பேச்சாளர்? இவர்களெல்லாம் தமிழ் நாட்டோடு இருந்து தொலைக்காமல் இங்குமா வரவேண்டும்?' என்று வெறுப்பாகக் கூறினான்.

இப்போது வந்து போனானே? அவன் யார்?

'இவன் ஒரு தமிழன்; உணர்ச்சி மிக்கவன். இத்தகையவர் உணர்ச்சி ஆக்கப் பணிக்குப் பயன்படுமானால்—தமிழகம் எப்போதோ முன்னேறி இருக்கும்! ஆனால், அது ஒற்றுமைக் குலைவுக்குத்தான் பயன் படுகிறதே தவிர, நல்லவற்றுக்கு அது பயன்பட்டதாகத்

தெரியவில்லை. உணர்ச்சி என்பது ஒரு காட்டாறு போன்றது; அதை நல்வழியிற் பயன் படுத்தினுல் எவ்வளவோ பயன்படும். இல்லையேல் பெரும் இன்னலை உண்டாக்கும்.' என்றுன் அமைதியாக.

அவன் பெயர் என்ன?

'பீமையா என்று எல்லோரும் அழைக்கிருர்கள்.'

பீமையா உங்களுக்கு வேண்டியவன் போலிருக் கிறது! அதனுல்தான் அக்கறையாக வந்து அழைத்து விட்டுப் போகிருன். உண்மைதானே? என்றேன்.

'நீங்கள் சொல்லுமளவுக்கு நாங்கள் வேண்டிய வர்களாக இல்லை. அவன் ஒரு தமிழன்; நானும் ஒரு தமிழன். தமிழர் என்ற முறையில் பழகுகிறேம். என்னைப் பொறுத்தவரை அவ்வளவுதான். ஆனுல், பீமையா அந்த அளவை மீறித்தான் எங்களிடம் பழகுகிருன். அதை நான் விரும்பவில்லை. ஆயினும், விரும்பாததை அவனுக்குச் சொன்னதுமில்லை.'

அவன் நெருக்கத்தை நீங்கள் ஏன் விரும்பவில்லை? ஒருக்கால் அவன்.........

'முரட்டு ஆள்; குணத்திலும் அப்படித்தான். அளவுமிக்க உணர்ச்சி. அத்தகையவர் நெருக்கம் எப் போதும் தீமைதான்.'

பீமையாவின் வருகையை நான் ஒருவாறு உணர்ந்து கொண்டேன். அவன் ஒழுக்கமென்பதே தெரியாதவன். வயதடைந்த வானமுது வீட்டிலிருப்ப

தால்தான் அவன் நெருங்குகிறுன். இவர்கள் உயர்ந்த ஒழுக்கம்—பண்பாடு—அவன் கனவிலுங் கருத முடியாதவை. ஆயினும், எப்படியும் வானமுதையடைய வேண்டுமென்றுதான் அவன் விரும்பாதவர் வீட்டுக்கு வருகிறுன்—என்று எண்ணிக்கொண்டு நான்,

அவன் வருவதை நீங்கள் விரும்பவில்லையென்றுல் அவன் ஏன் வருகிறுன் ? என்றேன்.

'உழவன் விரும்புவது பயிரைத்தான். உரமிட்டு அதன் வளர்ச்சிக்குப் பாடுபடுகிறுன் ; விலங்குகளிடமிருந்து அதை விழிப்பாகக் காக்கிறுன். எந்த உழவனும் களையை விரும்புவதில்லையல்லவா ? அதை முளைக்க ஒட்டாது களைந்தெறிகிறுன் ; அத்துடன் விடுகிறதா களை ? உழவன் விரும்பிலுைம் விரும்பாவிட்டாலும் அது முளைத்துக்கொண்டே இருக்கவில்லையா? அதுபோலவே தான் பீமையா போன்றவர் உறவெல்லாம். சில நண்பர்களை வலிய வீட்டுக்கழைக்கிறேம். அவர்கள் வராதபோது வருந்தவும் செய்கிறேம். ஆனுல் சிலர் வருகையை வெறுக்கிறேம் ; வெறுத்தாலும் அவர்கள் நிற்பதில்லை. மாறுபட்ட பண்புடையது உலகம் என்கிறுர்களே ? அது இதில் விளங்குகிறதில்லையா ?'

நீங்கள் இத்தகையவர்க்கு வெளிப்படையாக வர வேண்டாமென்று சொல்லி விடலாமே ? இதுவரை சொன்னதில்லையா ?

'அப்படி நான் இதுவரைச் சொல்லவில்லை. அது நாகரிகமாக இருக்காதே என்று மயங்குகிறேன்.' என்றுன் கலக்கத்துடன்.

நல்லவர்களைப் போலவேதான் பொல்லாதவர்களும் இருக்கிறார்கள். குணத்தில் தானே வேறுபாடு? பொல்லாதவர்கள் தம் குணத்தை மறைத்துக் கொண்டு நல்லவர்களைப்போல நடிக்கிறார்கள். அதைக் கண்டு ஏமாந்து போகக் கூடாது. நீங்கள் விரும்பவில்லையென்றால் வரவேண்டாமென்று துணிந்து சொல்லிவிடலாம். இவர்களுக்கெல்லாம் பயப்படக் கூடாது.

'நாம் விழிப்பாக இருந்தால் எத்தகையவராலும் நமக்குத் தீமை விளையாது. இவர்களிடமெல்லாம் நெருப்பைப் போல அளவோடுதான் பழக வேண்டும் —பழகி வருகிறோம்' என்று சாந்தமாகவே பதில் சொன்னான்.

விரும்பாதவர்களை வேண்டாமென்று சொல்வதை விட்டு விட்டு விழிப்பாக ஏன் இருக்க வேண்டும்? அது எனக்குப் பிடிக்கவில்லை. திருடனை வீட்டுக்குள் அனுமதித்துவிட்டு விழிப்பாக இருத்தல் அது எப்படி நல்லதாகும்?

'ஆமாம்! அப்படித்தான் சொல்லிவிட வேண்டும். என்று எண்ணிக்கொண்டிருக்கிறேன்.'

இன்றைக்கு விடுமுறை தானே? ஒரு கண்காட்சி நடக்கிறது, வருகிறீர்களா? அறிவுக்கு நல்ல விருந்தாக இருக்கும்.

'விடுமுறை நாட்களில் காலையிலேயே சமையலை யெல்லாம் முடித்துவிட்டு ஓய்வெடுத்துக் கொள்வது

வழக்கம். அந்த ஓய்வை வானமுதுக்குப் பயன் படுத்துகிறோம்.'

எவ்வாறு?

'வானமுதுக்கு முறையாகத் திருக்குறள் பாடம் நடத்தி வருகிறேன்.'

மலருள்ள இடத்தில் தானே மண மிருக்கும்? மலர் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும், அதன் மணம் பூவிருக்குமிடத்தைப் புலப்படுத்தி விடுகிற தில்லையா? என்று எண்ணிக்கொண்டே, நீங்கள் எவ்வளவு படித்திருக்கிறீர்கள் என்றேன். அதுவரைக் காணாத சில உணர்ச்சிகளை நடேசன் முகத்தில் கண்டேன். எதையோ பறிகொடுத்துவிட்டவன் அதை யெண்ணி வருந்துவது போன்று அவன் காணப்பட்டான். இதுவரை மறைத்து வந்தவற்றுள் ஒரு பகுதி வெளியாகி விட்டதற்கு வருந்துவது போன்ற நிலையில் நடேசன் எதையோ பேச வாயெடுத்தான்; மீண்டும் அமைதியில் ஆழ்ந்தான். அப்போது வானமுது எங்களிடம் வந்து அமைதியைக் குலைத்தாள். முதலில் எனக்கு வணக்கம் தெரிவித்து விட்டு,

'உயர்ந்த நிலையில் இருந்தும் எங்களைப் போன்ற ஏழைகளிடம் பழகும் அன்புடையவராக இருக்கிறீர்கள்; உங்கள் அன்பு எங்களைப் போன்ற ஏழைகளுக்குப் பாலைவனத்தில் கிடைத்த பலாச்சோலை போல இருக்கிறது. உங்களைப் போன்ற அன்பர்கள் சிலர் இருப்பதால்தான் நாங்கள் தென்பாக வாழ்கிறோம்' என்று அடக்கமாகவும் சாந்தமாகவும் கூறினாள்.

மல்லிகைச் செடியில் மலர்ந்த மலர் மணமற்றுக் கூட இருக்குமா? நடேசனுடைய மகள் வானமுதத்துக்கு அவனைப் போன்றே உயர்ந்த பண்பும், பெருந் தன்மையும் இருப்பது இயல்புதானே! இதுவரை சாதாரண நடக்கையை மட்டும் பார்த்து வந்த நான் வானமுதத்தினிடம் பேசும் வாய்ப்பை இப்போது தான்பெற்றேன். பண்பாட்டோடு அறிவும் மிளிர் வதைக் காண்கிறோம்! இந்தக் குடும்பம் அறிவொளி வீசும் இணையில்லாததாகக் காணப்படுகிறது; ஆனல் இவர்கள் எவ்வாறு இந்த நிலைக்கு ஆளானர்கள் என்பது மட்டும் புரியாத புதிராக இருக்கிறது. வானமுது வாராதிருந்தால் நடேசன் ஏதாவது கூறியிருப்பான்; அதுவுந் தடைப்பட்டு விட்டது. மீண்டும் நான் பேச முற்பட்டேன்.

நான் கேட்டதற்கு ஒன்றும் பதில் கூறவில்லையே?

'எதற்கு?'

படிப்பைப் பற்றிக் கேட்டேனே?

'நான் உங்களைப்போல பி. ஏ. வரை படித்தவனல்ல; சாதாரண கிராமத்திலிருக்கும் ஒரு ஏழை படிக்கும் அளவுக்கு நான் படித்திருக்கிறேன்' என்று சுருக்கமாகக் கூறிவிட்டான். அதிகம் வற்புறுத்தக் கூடாது என்று நான் பேச்சை வேறு திசையில் திருப்பினேன்.

கண்காட்சிக்குப் போனல் பாடம் தடைப்படும் என்று எண்ணுகிருயா? மாலையில் திரும்பி விடலாம்;

நேற்று உங்களைப் பற்றி என் மனைவியிடங் குறிப்பிட்டேன்; அவளும் உங்களைப் பார்க்க விரும்பினாள்; எல்லோரும் வேடிக்கையாக இன்று கண்காட்சிக்குப் போகலாமா என்றபோது நடேசன் முகத்தில் ஒருவித வியப்புணர்வு தோன்றியது.

'உங்கள் அன்பைக் கண்டு நாங்கள் வியப்படைகிறோம்; ஏழையாகிய நாங்கள் ஏழைகளுக்கிடையில் வாழ்கிறோம்; நீங்கள் எங்களிடங் காட்டும் அன்பு சாதாரண நிலையில் இல்லை! உயர்ந்த நிலையிலுள்ளவர்கள் ஏழைகளைக் காணவும் விரும்புவதில்லை: அது இன்றைய உலகியற்கை; ஆனால், நீங்கள் அதற்கு விதிவிலக்காக இருக்கிறீர்கள். எதிலும் விதிவிலக்குண்டு போலும்! எங்கள் நன்மையில் நீங்கள் காட்டும் அன்புக்கு நாங்கள் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர்களாக இருக்கின்றோம். ஆயினும், உங்கள் வீட்டுக்கு வந்து உங்களுக்குத் தொல்லை கொடுப்பது........ மேலும், உங்கள் மனைவியாருக்கு வேறு எங்களால் தொல்லை ஏற்படலாம்; நம்மால் யாருக்கும் சிறிதும் தொல்லை ஏற்படக் கூடாது என்று........'

அப்படி ஒன்றும் உங்களால் எங்களுக்குச் சிரமம் ஏற்படாது. உங்கள் வருகை என் மனைவிக்கு மிக்க மகிழ்ச்சியே தரும். அதற்கு நீங்கள் கவலைப்பட வேண்டாம். நேரமாகிறது, போகலாம் புறப்படுங்கள்! என்றேன் நான்.

'வானமுது! கண்ணப்பர் அழைப்பைத் தட்ட முடியவில்லை. போகலாமா?' என்றான் நடேசன்.

'போகலாம் அப்பா! போய் சீக்கிரம் திரும்பி விடலாம்' என்முள் வானமுது.

முதலில் எங்கள் வீட்டுக்குப் போய் என் மனைவியையும் அழைத்துக்கொண்டு போகலாம் என்று எங்கள் வீட்டுக்குப் புறப்பட்டோம்.

உணவுக்கு நேரமாகியும் வராததால் முல்லை என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். கூடத்தில் அருள் விளையாடிக் கொண்டிருந்தான். நாங்கள் நால்வரும் போனோம். காலடி ஓசை கேட்ட முல்லை, 'விடுமுறை நாள் வந்தால் நேரத்துக்கு........' என்று கூறிக் கொண்டே என்னுடன் இவர்களைக் கண்டதும் மேலே பேசாது சிரித்துக் கொண்டே 'வாங்கம்மா!' என்று வானமுதை வரவேற்றாள். நாங்கள் எல்லோரும் கூடத்தில் நாற்காலிகளில் அமர்ந்தோம். அருள் என்னிடம் வரத் தாவினான்; நான் அருளை எடுத்துக் கொண்டேன்; மழலை மொழியால் அவன் ஏதேதோ பேசினான்; அவன் அரும்புக் கரங்களால் என் தாடையில் கிரண்டடித்தான். அன்பின் மிதப்பில் அது அமிர்தமாக இருந்தது. அப்போது முல்லை, 'இரவு குறிப்பிட்டீர்களே, இவர்கள் தானே?' என்றாள்.

ஆமாம் முல்லை! இவர்தான் நடேசன். இவர்கள் இருவரும் இவர் மக்கள். மகள் பெயர் வானமுது. இவன் பெயர் சிற்றரசு என்று கூறி, நான் அவர்களை அறிமுகப்படுத்தினேன்.

'சாப்பிட்டுவிட்டு ஓய்வாகப்பேசலாம். உணவுக்கு நேரமாகிறதே, எழுந்திருங்கள்!' என்றாள் முல்லை.

'நாங்கள் வீட்டில் சாப்பிட்டு விட்டுத்தான் வருகிறோம், ஒன்றும் வேண்டாமம்மா!' என்று சிறிது தயக்கத்துடன் கூறினன் நடேசன். அதை ஆமோதிப்பதுபோல் 'ஆமாம்மா!' என்றார்கள் வானமுதும், சிற்றரசும்.

'உங்களை விட்டுவிட்டு நாங்கள் மட்டும் சாப்பிடுவதா? அது எப்படி முடியும்? எழுந்திருங்கள்! கொஞ்சமாவது சாப்பிடுங்கள்' என்று வற்புறுத்தினாள் முல்லை. மறுக்க முடியாது அவர்கள் எழுந்தார்கள். நான் குழந்தையோடு குழந்தையாக விளையாடிக் கொண்டிருந்தேன்.

'நீங்களும் வந்தால் எல்லோரும் பேசிக் கொண்டே சாப்பிட நன்றாக இருக்குமே' என்றாள் முல்லை.

எனக்குப் பசி மட்டுமில்லை; என்றாலும் எல்லோரும் சேர்ந்து சாப்பிட்டால் அது ருசியாக மட்டும் இருக்கும் என்று கூறிக்கொண்டே நானும் உண்ணச் சென்றேன்.

முல்லை, இன்றைக்கு ஒரு கண்காட்சி! அதற்குப் போகத்தான் இவர்களையும் அழைத்து வந்திருக்கிறேன். நீயும் சீக்கிரம் புறப்படு! கண்காட்சியென்றால் உனக்கு உயிராயிற்றே! என்றேன்.

முல்லை மகிழ்ச்சியோடு உடைமாற்றிக்கொண்டு புறப்பட்டாள். நாங்கள் கண்காட்சி நடக்குமிடத்துக்குப் பகல் ஒரு மணிக்குச் சென்றோம். முல்லை,

வானமுது, சிற்றரசு மூவரும் ஒன்ருகவும், நானும் நடேசனும் ஒன்ருகவும் இணைந்து காட்சிகளைக் காணத் தொடங்கினேம். என் கவனம் வேறு எங்கோ இருந்ததால் பொருள்களைக் காண்பதில் எனக்கு எழுச்சி பிறக்கவில்லை. என்னைப் போலவேதான் நடேசனுங் காணப்பட்டான். இத்தகைய அரிய கண் காட்சி கிடைத்தால் முல்லை பல நாளைக்குக்கூடப் பார்த்துக்கொண்டே இருப்பாள். வானமுது, சிற்றரசு இருவர்க்குங்கூடக் காண்பதில் மிக்க ஆர்வமிருந்தது. சிறிது நேரத்துக்குப் பிறகு, ஒரு மர நிழலில் அமர்ந்து அதுவரைக் கண்ட பொருள்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்.

சுற்றித் திரிந்ததாலும், நண்பகல் வெய்யலாதலாலும் எல்லோர் முகத்திலும் சோர்வு காணப்பட்டது. அருகிலிருந்த சிற்றுண்டிச்சாலைக்குச் சென்று தேனீர் பருகிவிட்டு மீண்டுங் காணத்தொடங்கினேம். முல்லை, வானமுது, சிற்றரசு மூவரும் முன்போலவே இணைந்து கொண்டார்கள். நாங்களும் இணைந்து கொண்டோம். அங்கங்குச் சில நண்பர்கள் தென்பட்டார்கள். அவர்களுடனெல்லாம் நான் நின்று பேச வேண்டி இருந்தது; அதனல் முல்லையைக் கூப்பிட்டு ஒரு மரத்தடியைச் சுட்டிக்காட்டி, நீங்கள் இந்த இடத்துக்கு வந்துவிடுங்கள்; நாங்களும் வந்திருக்கிருேம் என்று கூறிவிட்டு மீண்டும் பார்க்கத் தொடங்கினேம். தெரிந்தவர்கள் அடிக்கடிப் பேசி எங்களுக்குத் தொல்லை கொடுத்தனர்; அது நடேசனுக்குச் சிரமமாக இருப்பதை உணர்ந்தேன். காண்பதில் இருவருக்கும் எழுச்சி பிறக்கவில்லையாதலால்

இந்த மரத்தடியில் கொஞ்ச நேரம் அமர்ந்து ஓய்வெடுத்துக் கொள்ளலாமா? என்றேன். அதை நடேசனும் ஆமோதித்தான். இருவரும் சென்று—முல்லைக்குக் குறிப்பிட்ட—அந்த இடத்தையடைந்து நிழலில் போடப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தோம்.

கூரிய மூக்கும், பரந்த நெற்றியும், திறந்த கண்ணும் நடேசனுடைய கூர்ந்த அறிவைப் புலப்படுத்துகின்றன. மேலும், அவன் உள்ளத்தில் எழும் பல வகை உணர்ச்சிகளைக் காட்டுந் திரைபோல அவை அமைந்திருக்கின்றன. பேச்சு, நடக்கை முதலியவை அவன் சீரிய பெருந்தன்மையைக் காட்டத் தவறவில்லை. இத்தகைய நடேசன் வாழ்க்கையில் ஏதோ முறிவு ஏற்பட்டிருக்க வேண்டும். அவன் இப்போதைய வாழ்வு, மக்களுக்காகவே வாழ்வதாகக் காட்டுகிறது. அம்முறிவு எதைப் பற்றியதாக இருக்கும்? என்று நான் பலநாளாய் ஆய்ந்துவரும் ஒன்று. ஒருக்கால் மனைவியைத் துறந்து அதற்காகத்தான் நடேசன் நலிகின்றானோ என்று எண்ணுவதுண்டு; இவ்வளவு தெளிவுள்ள ஆள், இறந்துபோன மனைவிக்காக வாழ்வை முறித்துக்கொள்ளுவானோ? என்று சில சமயம் சிந்திப்பேன். அதைப்பற்றிக் கேட்க இப்போதைய ஓய்வு இடமளிக்குமென்று எண்ணிக்கொண்டு நான், நடேசா! உன் மனைவி இல்லையா? என்றேன். அவன் முகத்தில் இதுவரை நான் கண்டிராத கவலையுணர்வு காணப்பட்டது. தலையைத் தாழ்த்திக்கொண்டான்; சிறிது நேரங்கழித்துப்

பேசத்தலைப்பட்டான். நான் அவன் முகத்தைப் பார்த்த வண்ணமிருந்தேன். மரக்கிளைகளுக்கிடையில் மேகத்திலிருந்து சூரியன் வெளிவந்து கொண்டிருந்தது தெரிந்தது.........

'பல நாட்களுக்கு முன்பே என் மனைவி இறந்துவிட்டாள்' என்று சிறிது தழுதழுத்த குரலில் கூறினான். பிறகு தன் செய்தியைக் கூற விரும்பாதவன் போலக் காணப்பட்டதோடு பேச்சை வேறுதிசையில் மாற்றத் தொடங்கினான்.

'நீங்கள் இங்கேயே பிறந்தவர்களா? அல்லது, எங்களைப்போல வந்து குடியேறியவர்களா? என்பதைக் கேட்க வேண்டுமென்று எண்ணிக்கொள்வதுண்டு; ஆனால், சந்திக்கும்போது அதற்கு வாய்ப்பேற்படுவதில்லை' என்று என்னைப்பற்றிக் கேட்கத் தொடங்கினான். என்னைப்பற்றிக் கூறிப் பின்னர் அவனைப்பற்றிய செய்தியை அறிவதென்று என்னைப் பற்றிக் கூறத்தொடங்கினேன்.

நான் சென்னையைச் சேர்ந்தவன்; பிறந்து வளர்ந்ததெல்லாம் சென்னையில்தான்; சென்னையிலேயே படித்துப் பட்டம் பெற்றேன். இப்போது பம்பாயில் வேலை பார்க்கிறேன் என்று சுருக்கமாகக் கூறினேன். அது நடேசனுக்குப் பிடிக்கவில்லை. மேலும் விவரமாக அறிய ஆசைப்படுகிறான் என்பதை அவன் உரைக்காமல் உணர்த்தினான். பிறகு நான் விவரமாகக் கூறத் தொடங்கியபோது நடேசன் முகத்தில் ஒரு புத்துணர்வு பூத்தது.

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை எங்கள் சொந்த இடம்; என் தந்தைக்கு அரசாங்க உத்தியோகம்; அவர் பம்பாய்க்கு மாற்றப்பட்டார். நான் அப்போது சிறுவனாக உயர்நிலைப் பள்ளியில் படித்துக்கொண்டிருந்தேன். அதனால் என்னை சென்னையிலேயே இருந்து படிக்க என் பெற்றோர் ஏற்பாடு செய்தனர். அதன்படி நான் உயர்நிலைப் படிப்பு, கல்லூரிப்படிப்பு யாவற்றையும் சென்னையிலேயே முடித்தேன். பிறகு என் தந்தையின் முயற்சியால் இந்த ஆலையில் உயர்ந்த உத்தியோகங் கிடைத்தது. படிப்பு முடிந்ததும் பம்பாய்க்கு வந்து என் பெற்றோரிடம் இருந்து கொண்டு ஆலையில் அலுவல் பார்த்து வந்தேன். அது வரை நான் சென்னையில் என் அம்மான் வீட்டிலேயே இருந்துவந்தேன். எங்கள் வீடும், என் அம்மான் வீடும் ஒரே தெருவில் இருந்ததால் இளமை முதல் நான் இரு வீட்டிலும் வளர்த்து வரப்பட்டேன். என் பெற்றோருக்கு நான் ஒரே மகன். என் அம்மானுக்கு முல்லையைத் தவிர வேறு மக்கள் இல்லை. அதனாலும் நான் அம்மான் வீட்டில் அதிக அன்புடன் வளர்க்கப்பட்டேன். நானும் முல்லையும் சிறு வயது முதல் நெருங்கிப் பழகி வந்தோம்; படிப்பிலும் அப்படியேதான். ஆனால் முல்லை இன்டர்மிடியட் வரை படித்து நிறுத்தப்பட்டாள். அத்துடன் அவளும் வீட்டிலிருந்தபடியே முடிந்த அளவுக்குப் படித்து வந்தாள். நான் பி. ஏ. வரை பயின்றேன். என் அம்மான் நல்ல செல்வந்தர்; என் படிப்புச் செலவு முழுவதையும் அவரேதான் ஏற்றுக்கொண்டார். என் பெற்றோர் எவ்வளவு வற்புறுத்தியும் செலவைத் தாமே ஏற்று என்னைப் படிக்க வைத்தார்.

உத்தியோகத்தில் அமர்ந்த சில மாதங்களுக்குள் எங்கள் இருவருக்கும் திருமணமானது. திருமண மாகி மூன்று மாதத்துக்குள் என் தந்தை டில்லிக்கு மாற்றப்பட்டுவிட்டார். இப்போது என் தாய் தந்தை யர் டில்லியில்தான் இருக்கிறார்கள். பெரிய விடுமுறை களில் நாங்கள் சென்னையில் சேருவோம். சிறு விடுமுறைகளிலும் அவசியமான சந்தர்ப்பங்களிலும் நானும் முல்லையும் டில்லிக்குச் செல்வோம்; சில சமயம் என் பெற்றோர் இங்கு வருவதும் உண்டு. நான்கு வருடங்கட்குப் பிறகு அருள் பிறந்தான். இப்போது அருளுக்கு ஒரு ஆண்டு முடிந்துவிட்டது.

நடேசன் நான் கூறுவதை வியப்புடன் கேட்டு வந்தான்.

எனக்கு சென்னையில் பல நண்பர்கள் இருக் கிறார்கள். அவர்களில் சிலர் ஆரம்பப் பள்ளித் தோழர்கள். மற்றுஞ் சிலர் உயர்நிலைப்பள்ளியோடு நின்று விட்டவர்கள். கல்லூரித் தோழர்கள் சிலர். இவர்களல்லாமல், ஆசிரியர்கள், உறவினர், வெளி நண்பர்கள் என்று பலர் இருக்கிறார்கள். நான் சென்னைக்குப் போவதென்றால் இத்தனை பேரையும் பார்த்துப் பேசிவிட்டு வந்தால்தான் முதலில் எனக்கு மகிழ்ச்சியாக இருக்கும். இரண்டொருவரைப் பார்க்க முடியாது வந்து விட்டால் அவர்கள் வருத்தப்பட்டுக் கடிதம் வரைவார்கள். அதற்குமேல் நானும் வருந்து வேன். இது நண்பர் உலகச் செய்தி.

பத்தாவது படிக்கும்போது முடிக்காமலேயே ஒரு நண்பர் நின்றுவிட்டார். என் நெருக்கமான

நண்பர்களில் அவர் மிகமிக முக்கியமானவர். அப்போது அவரை மேற்கொண்டு படிக்க விடாது வறுமைதான் தடுத்து விட்டது. பாவம்! வறுமையால் அவர் நின்றுவிட்டதற்காக அப்போது எவ்வளவு வருத்தப்பட்டார், தெரியுமா! நான் அப்போது மற்றவருக்கு உதவி செய்யும் நிலையில் இல்லை. அதனல் நண்பருக்கு என்னுல் எந்த உதவியும் செய்ய முடியாது போய்விட்டது. எந்த வறுமை அவரை வாட்டியதோ—அந்த வறுமையை என் நண்பர் முருகப்பர் வாட்டிவிட்டார். இப்போது அவர் இலட்சாதிபதி! வியப்பாக இல்லையா?

'உயர்ந்த நிலையில் இருந்த எத்தனையோ பேர் தாழ்ந்த நிலைக்கு வந்து விடுகிறுர்கள்; கீழ்நிலையிலுள்ள சிலர் மேல் நிலைக்கு வந்தும் விடுகிறுர்கள்' என்று நடேசன் சாந்தமாகவே சொன்னுன். பிறகு சிறிது நேரம் எதையோ ஆழ்ந்து சிந்தித்துக்கொண்டிருந்தான். அப்போது, மரத்தின் உச்சியிலிருந்து ஒரு எறும்பு கீழே விழுந்து விட்டது; அது மீண்டும் பல முறை முயன்றும் மேலே ஏற முடியாது வருந்திக் கொண்டிருந்தது. இடையில் இரண்டு முறை கிளை வரை ஏறி மீண்டுங் கீழே விழுந்து விட்டது; ஆனல் முயற்சி மட்டும் ஓய்ந்தபாடில்லை........

'உங்கள் நண்பர் வறுமையில் வாடிக்கொண்டிருந்தபின் எப்படி இந்நிலையை அடைந்தார்?' என்று சிறிது நேரங் கழித்து மீண்டும் நடேசனே பேச்சைத் தொடங்கினுன். அப்போதும் எதையோ ஆராய்ந்த வண்ண மிருந்தது அவன் சிந்தனை.

முருகப்பர் இரண்டாம் உலகப்போரின்போது துணி வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தார்; போர் நின்ற பிறகு, கோட்டா முறை ஏற்பட்டது; அப்போது அவர் பெரிய பணக்காரராகி விட்டார். விரிவாக எப்படி என்பது எனக்குக்கூடத் தெரியாது. அதைக் கேட்க வேண்டுமென்று எண்ணிக்கொள்வது வழக்கம். எனக்கு மறதி அதிகம்; சென்னைக்குச் செல்லும் போது எதையெதையோ எண்ணிக்கொண்டு போவேன்; பெரும்பகுதி மறந்துவிட்டு வந்து விடுவேன். அதில் இதுவும் ஒன்று. அவருக்கு இப்போது சென்னையில் பங்களா, கார் எல்லாம் இருக்கின்றன. ஆயினும் அவர் ஆடம்பரத்தை வெறுப்பவர். நல்ல அறிவுடையவர்; நண்பர்கள் என்றால் உயிராகக் கருதுபவர்; நான் சென்னைக்குப் போய்விட்டால் பெரும்பொழுது அவர் வீட்டில்தான் கழியும். சில சமயம் வியாபார சம்பந்தமாக அவர் பம்பாய்க்கு வருவதுமுண்டு. அவர் வந்தால் எங்கள் வீட்டில்தான் தங்குவார். மற்ற எல்லா நண்பர்களைக் காட்டிலும் முருகப்பர் என் உயிர் நண்பரென்று குறிக்கத்தக்கவர். இருவரும் வாரத்தில் ஒரு முறையாவது கடிதங்கள் எழுதாது நிறுத்தமாட்டோம். சிரமமான அலுவல் இருந்து எப்போதாவது நான் நிறுத்தி விட்டால் உடனே தந்தியனுப்புவார். அவ்வளவு நெருங்கிய நண்பரவர்.

அண்மையில் அவர் இங்கு ஒரு வேலையாக வரப் போகிறார். அப்போது அவரை நேரிலேயே காட்டுகிறேன் என்று கூறிக்கொண்டே கைக்கடிகாரத்தைப் பார்த்தேன். மணி ஐந்தரை ஆகியிருந்தது. தொலை

வில் முல்லை, வானமுது அவர்கள் வந்து கொண்டிருந்தது தெரிந்தது.

'அவருக்குத் திருமணம் ஆகிவிட்டதா? ஒன்றும் நீங்கள் சொல்லவில்லையே?' என்ருன் நடேசன்.

நான் சிரித்துக்கொண்டே, இன்னும் இல்லை என்றேன்.

'இவ்வளவு பணக்காரராகிவிட்ட பிறகும், ஏன் அவர் திருமணம் செய்து கொள்ளவில்லை?' என்று மீண்டும் வியப்புடன் கேட்டான்.

நான் பலமுறை அதைப்பற்றி அவரை வற்புறுத்தியும், கேலியாகவும் கேட்டிருக்கிறேன்; 'என்ன அவசரம்? செய்துகொள்ளலாம்' என்ற ஒரே பதிலைத் திரும்பத் திரும்ப கூறுவார். அண்மையில்கூட அதைப் பற்றி ஒரு கடிதம் எழுதி இருக்கிறேன். 'அண்மையில் பம்பாய்க்கு வர இருப்பதால் எல்லாவற்றையும் நேரில் கூறுகிறேன்' என்று அவர் எழுதிய பதில் கடிதம் நேற்று வந்திருக்கிறது.

'அவருக்கு வேண்டியவர்கள் இங்கு யாராவது இருக்கிருர்களா? அல்லது, வியாபார சம்பந்தமாக வருகிருரா?'

என்னைத்தவிர அவருக்கு இங்கு யாரும் தெரிந்தவர்கள் இல்லை. அவர் இப்போது தமிழ்நாடு வியாபாரச் சங்கத் தலைவராக இருக்கிருர்; அடுத்த மாதத்தில் பம்பாயில் ஒரு மாநாடு நடக்கப்போகிறது.

அதற்காக அவர் இங்கு வரப்போகிருர் என்று கூறிக் கொண்டிருக்கும்போது முல்லே அவர்கள் வந்து விட்டார்கள்.

'ஏன்! நீங்க சுற்றிப்பார்க்கவில்லேயா? வெகு நேரமாக இங்கேயே இருக்கிறீங்களே?' என்ருள் முல்லே.

ஆமாம் முல்லே! எங்களுக்குச் சோர்வாக இருந்த தால் இங்கேயே அமர்ந்து விட்டோம். சரி, வீட்டுக் குப் போவோமா என்று கூறி, நடேசனேப் பார்த் தேன். நடேசன் எதையோ ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தான். 'போகலாம்' என்று பதில் கூறிக் கொண்டே எழுந்தான். எல்லோரும் பஸ் ஏறி வீட்டுக்குப் புறப்பட்டோம். எங்கள் வீட்டிலேயே இரவு தங்கிப் போகும்படி எவ்வளவு வற்புறுத்தியும் அவர்கள் இசையவில்லே. மேலும் வற்புறுத்த மன மில்லாமல் அவர்களே அனுப்பிவிட்டு நானும் முல்லே யும் எங்கள் வீட்டுக்குப் போனேம்.

ஆலேயிலும், வீட்டிலும்—ஓய்வில்லாதபடி—வேலேகள் ஏற்பட்டதனுல் ஒரு மாதமாக நடேசனேச் சந்திக்க முடியவில்லே, ஆனுல், நடேசனேப் பல சமயம் எண்ணிப் பார்த்ததுண்டு. ஆலேயில் வேலே செய்யும் தொழிலாளரில், தாராவிப் பகுதியில் இருந்து வரு பவருக்கு மட்டும் இரண்டு வாரம் விடுமுறையளிக்கப் பட்டது. காரணம், காலரா என்று கூறினர்கள். அதைக் கேட்டதும் எனக்கு நடேசன் நினேவு வந்தது. ஒருவனேக் கூப்பிட்டு விசாரித்ததில் அன்றும் முன்ன

னும் நடேசன் வேலைக்கு வரவில்லையென்றும், ஏன் என்பது தெரியாதென்றுங் கூறினன். மேலும் நடேச னிருக்கும் தெருவில்தான் காலரா அதிகமிருப்பதாகவும் அவன் கூறினன். ஒன்றுந்தோன்ருது நான் சிறிது நேரம் திகைத்தேன்; உடனே சென்று நடேசனைப் பார்த்துவிட்டு வருவதென்று முடிவுசெய்தேன். உடனே அன்றைய பிற்பகல் அரைநாளுக்கு விடுமுறை யும் எழுதி எடுத்துக்கொண்டு கிளம்பினேன். தந்திச் சேவகன் யாரையோ விசாரித்துக் கொண்டிருந்தான். அவர்கள் என்னைச் சுட்டிக் காட்டினர். எனக்குச் சிறிது அச்சமாக இருந்தது. இதற்குள் தந்திச் சேவகன் என்னிடம் வந்து 'நீங்கள்தானே கண்ணப் பர்?' என்ருன். ஆமாம்! என்று கூறித் தந்தியை வாங்கிப் படித்தேன். என் தாயாருக்கு உடல்நல மின்மையால் என் தந்தை மருத்துவச்சாலையில் சேர்த் தாராம்; உதவிக்கு ஆளின்மையால் நீயும், முல்லையும் உடனே வரவேண்டுமென்றும் ஒருவாரம் விடுமுறை வாங்கிக்கொண்டு வா என்றும் குறிப்பிட்டிருந்தார் தந்தை.

முன்பு எழுதிய அரைநாள் விடுமுறைத் தாளைக் கிழித்துவிட்டு ஒரு வார விடுமுறை எழுதி அதைப் பணியாள் (பியூன்) மூலம் அனுப்பிவிட்டு விரைவாக வீட்டுக்குச் சென்றேன். முல்லை, அருளுக்கு விளை யாட்டுச் சாமான்களைக் காட்டிக்கொண்டிருந்தாள். என்றுமில்லாது நான் இடை நேரத்தில் வீட்டுக்கு வருவதைக் கண்ட முல்லை தயக்கத்துடன் 'என் னுங்கோ......?' என்று கூறிக்கொண்டே வந்து வர வேற்ருள். நான் தந்தியைக் கொடுத்தேன்.

முல்லை தந்தியைப் படித்துவிட்டு 'உடனே புறப்பட வேண்டியதுதான். அத்தைக்கு என்னவென்று ஒன்றுந்தெரியவில்லையே? துணைக்கு யாருமில்லை; மாமா மட்டும் தனியாக இருந்துகொண்டு என்ன செய்வார்? நீங்கள் விடுமுறை எழுதிக்கொடுத்து விட்டு வந்தீர்களா, இல்லையா?' என்ருள்.

கொடுத்து விட்டுத்தான் வந்தேன்! என்றேன் நான். உடனே புறப்பட்டு விட்டாள் முல்லை. துணி, பெட்டி, படுக்கை எல்லாவற்றையும் தயாராக்கி விட்டாள். நான் மயங்கி நிற்கிறேன்.

'என்ன மயங்குகிறீர்கள்?' என்ருள் முல்லை.

தாராவியில் காலராவாம்! இரண்டு நாளாய் நடேசனும், வானமுதும் வேலைக்கு வரவில்லை. விசாரித்ததில் அவர்கள் தெருவில்தான் காலரா அதிகமிருப்பதாகத் தெரிந்தது என்று தயக்கத்துடன் கூறினேன்.

'பாவம்!' என்று அனுதாபப்பட்டாள் முல்லை.

எக்ஸ்பிரஸுக்கு நேரம் சரியாக இருக்கிறது. தாராவிக்குச் சென்று நடேசனைப் பார்த்துவிட்டுப் போகலாமென்ருல் எக்ஸ்பிரஸ் போய் விடும். அடுத்த வண்டி இரவு ஒரு மணிக்குத்தான். இரவு வண்டிக்குச் செல்ல முல்லை விரும்பவில்லை. புறப்பட்டுப் புகை வண்டி நிலையத்துக்குப் போனேம்; அங்கு தெரிந்த ஒருவனைக் கேட்டதில் நடேசனைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியாதென்று கூறிவிட்டான். நாங்கள் நேராக டில்லிக்குச் சென்ருேம்.

வழிநெடுக நடேசன், வானமுது, சிற்றரசு இவர்களைப்பற்றியே எண்ணிக்கொண்டும் பேசிக்கொண்டும் போனோம். டில்லியில் எங்கள் தந்தையின் வீட்டுக்குச் சென்றோம். அப்போது தந்தை வீட்டில் இல்லை. வேலைக்காரன்தான் வீட்டிலிருந்தான். 'அப்பா மருத்துவமனைக்குச் சென்றிருக்கிறார்; போய் நெடுநேரமாச்சு, வந்திடுவார்.' என்று கூறி எங்களை வரவேற்றான் வேலைக்காரன். 'நீங்கள் வருவீர்கள் என்று அப்பா போகும்போது கூறிவிட்டுப்போனார்' என்றும் கூறினான் அவன்.

'இப்போது அத்தைக்கு எப்படி இருக்கிறதாம்?' என்று கேட்டாள் முல்லை.

'ஐயாவைக் கேட்டால் நல்லா இருக்கிறாங்கோ என்று தினமுங் கூறுகிறார். இன்று காலைகூடக் கேட்டேன். அதே பதில்தான் சொன்னார். நான் போய் பார்த்துவிட்டு வருகிறேனென்றேன். நீ வீட்டிலேயே யிரு! இன்னும் இரண்டு நாட்களில் அம்மா வீட்டுக்கே வந்துவிடப் போராங்கோ என்று காலையில் ஐயா சொன்னார்.' என்றான் வேலைக்காரன்.

நாங்கள் உடைகளை மாற்றிக்கொண்டு உடனே மருத்துவ மனைக்குப் புறப்பட்டோம். வழியில் தந்தையைப் பார்த்தோம்; உடனே வண்டியை நிறுத்தச் செய்து இறங்கி விட்டோம். ரிக்ஷாவில் வந்துகொண்டிருந்த அவரைச் சந்தித்தோம். உடனே அவரும் இறங்கி எங்களை விசாரித்தார்.

அம்மாவுக்கு இப்போது எப்படி இருக்கிறதப்பா?

'நேற்று, அதற்கு முந்திய நாட்களில் இருந்த கடுமை இன்று இல்லை. கூடிய சீக்கிரம் குணமாகி விடும் என்கிறார் மருத்துவர்.'

என்னப்பா, அம்மாவுக்கு?

'ஒன்றுமில்லை! ஒரு வாரத்துக்குமுன், ஒரு நாள் மாலை, தலை வலிக்கிறது என்றாள். காலையில் உடம் பெல்லாம் சுடத் தொடங்கியது. உடனே, டாக்டரை வரவழைத்துப் பார்க்கச் செய்தேன். இரண்டு ஊசி கள் போட்டார்; இரண்டு நாள் சுமாராக இருந்தது. மீண்டும் பழையபடியே சுரம் கடுமையாகத் தொடங் கியது. டாக்டர், மருத்துவமனைக்கே கொண்டுவந்து விட்டால் நன்றாகயிருக்குமென்றார். அதற்கு உன் தாயும் இசைந்தாள்; கொண்டுபோய்ச் சேர்த்தேன். படிப்படியாக சுரம் குறைந்து கொண்டு வந்துவிட் டது. இந்த ஒரு வாரமாகவே உணவில்லை; பழச் சாறு, கஞ்சிதான் உணவு. அதனால் பலவீனமாகக் காணப்படுகிறாள். இப்போது சுரமே இல்லை' என்றார்.

இதுவரை ஏம்பா எங்களுக்குத் தெரிவிக்கவில்லை?

'இதற்கெல்லாந் தெரிவித்து உங்களுக்கு வேறு சிரமந் தரவேண்டுமா? என்றுதான் பேசாதிருந்தேன். பலவீனத்தின் காரணமாக உன் தாயுக்கு உங்கள்மீது ஞாபகம் அதிகமாயிற்று. பிறகு, வற்புறுத்தித் தந்தி கொடுக்கச் செய்தாள். முதலில் நான் உன் தாயைத் தினந்தோறும் கேட்பதுண்டு; அப்போதெல்லாம் வேண்டாமென்று மறுத்து வந்தவள், நேற்று அவ ளாகவே தந்தி கொடுத்து உங்களை வரவழைக்கச்

சொன்னுள். அவளுக்கு நீங்கள் வந்தால் மனநிம்மதி ஏற்படும் என்று நானும் இசைந்து நேற்று தந்தி கொடுத்தேன். இப்போது காணச் சென்ற போது மீண்டும் 'நேற்று தந்தி கொடுத்தீங்களா?' என்று கேட்டாள். கொடுத்திருக்கிறேன்; இந்நேரம் வீட்டுக்கு வந்துமிருக்கலாம் என்று கூறியபோது அவளும் சிறிது கவலைப்பட்டாள். 'அவசியமில்லாமல் அவர்களை வரவழைக்கச் சொல்லி விட்டேன். இரவெல்லாம் தூக்கமில்லாமல் வரப்போகிருர்கள்! அருளைப் பார்த்து அதிக நாளாச்சு; வருவதும் நல்லது தான் என்ருள்.' என்று என் தந்தை கூறிக் கொண்டே மீண்டும் மருத்துவமனைக்குச் செல்லத் திரும்பினர்.

பஸ்ஸில் போகலாமா? என்றேன் நான்.

'சமீபத்தில்தான் இருக்கிறது; நடந்தே போகலாம்' என்று கூறிக்கொண்டு அருளை வாங்கிக்கொண்டார். அருள் விருப்பமில்லாமல் பாட்டனர் தோளில் சாய்வதும் எழுவதுமாகச் சிறிது நேரம் இருந்து விட்டுப் பின் அழத்தொடங்கினன். முல்லை, அவனை வாங்கிச் சமாதானப் படுத்தினுள். மருத்துவமனை அருகிலேயே இருந்ததால் விரைவில் சென்று விட்டோம். எங்கள் தந்தை எங்களைத் தாயிருக்கும் அறைக்கு அழைத்துச் சென்ருர்.

சிறிது பலவீனமாகக் காணப்பட்டாலும், சிரமமில்லாமல் தாய் அமர்ந்து கொண்டுதான் இருந்தாள். எங்களைக் கண்டு மிகவும் மகிழ்ந்தாள்; 'வாடா

கண்ணு!' என்று அருளை வாரியெடுத்து அணைத்துக் கொண்டாள்.

'இப்போது உடம்பு எப்படி இருக்கிறது அத்தை?' என்றாள் முல்லை.

'எனக்கு இப்போ ஒன்றுமில்லையம்மா! நான் தான் உங்களை வரவழைக்கச் சொல்லி உங்களுக்குத் தொல்லை கொடுத்தேன்.'

அதற்கென்னம்மா! இதனால் எங்களுக்குத் தொல்லையா என்ன? வந்ததற்கு உங்களை நேரில் பார்த்து விட்டுப் போக முடிந்தது. அதோடு எல்லாரும், எல்லோரையும் பார்த்ததாக முடிந்தது. அருளும், நாங்களும் வந்தது உங்களுக்கு மகிழ்ச்சியாக இல்லையா? மருந்தைக் காட்டிலும் மகிழ்ச்சிதான் நோயைப் போக்குவது.

இன்னும் இங்கே எத்தனை நாளைக்கு இருக்க வேண்டுமாம் அப்பா?

'நாளை வரை இருந்து விட்டுப் போய் விடுங்கள் என்றார் டாக்டர். இன்றே போய் விடலாம் என்று இவள் தொந்தரவு செய்தாள் காலையில். பொறுத் துக்கொண்டு இந்த இரண்டு நாளையும் கழித்து விடு என்று சமாதானம் சொல்லிவிட்டுத் திரும்பினேன்' என்றார் தந்தை.

'இப்போ எனக்கு ஒன்றுமில்லை. சுரம் சுத்த மாக நின்று விட்டது; அங்க டாக்டர் இன்னும்

இருக்கணும் என்கிறார்! அதை உங்க அப்பாவும் சரி என்று ஒப்புக்கொண்டார்; இனிமேல் இங்கே இருக்கச் சம்மதமே இல்லை' என்று தாய் வெறுப்பாகக் கூறினாள்.

'வீட்டுக்குப் போன பிறகு சுரம் வந்து விட்டால் தொந்தரவாய் முடியுமில்லையா? இருந்ததெல்லாம் இருந்தாச்சு! நாளைக்கு ஒரே நாள்தானே, அத்தை!' என்று தேற்றினாள் முல்லை.

ஆமாம்மா! வீட்டுக்குப்போன பிறகு திரும்பி டாக்டரிடம் வந்தால், நான் அப்பொழுதே சொல்லவில்லையா என்று எல்லாப் பழியையும் நம்மீதே போட்டுச் சொல்லுவார்கள் டாக்டர்கள். உடம்பை டாக்டரிடம் ஒப்படைத்து விடுகிறோம்; அதன்பிறகு அவர் கூறுவது போலத்தானே நாம் நடக்க வேண்டும்? இன்னும் அதிக நாளுமில்லை. நாளை ஒரு நாள் தானே? அதுவரை வேண்டுமானால் நாங்களும் இங்கேயே இருக்கிறோம். அருள் உங்க பக்கத்திலேயே இருப்பான். நீங்க நிம்மதியாக இன்றும் நாளையும் இங்கே தள்ளிவிட்டுப் பிறகு வீட்டுக்குப் போகலாம் என்றேன் நான்.

'நீங்க வண்டியிலிருந்து வந்ததும் நேராக இங்கே வந்துவிட்டீர்கள்போலத் தெரிகிறது! நீங்க வீட்டுக்குப்போய் குளிச்சிட்டுச் சாப்பாடெல்லாம் முடிந்ததும் அப்புறமா வாங்க! எனக்கென்ன? நல்லா இருக்கிறேன்' என்றாள் தாய்.

அதைப் பின்தொடர்ந்து என் தந்தையும், 'ஆமாம்! நாம் வீட்டுக்குப்போய் குளித்துவிட்டுப்

பிறகு வரலாம்' என்று கூறிப் புறப்படச் செய்தார். மீண்டும் அம்மாவும் 'போய் வாங்கோ! இந்தா, அருளை எடுத்துக்கொண்டு போய் மாலையில் வாருங்கள்' என்றாள்.

எல்லோரும் வீட்டுக்கு வந்து பிரயாணக் களைப்புத் தீரக் குளித்துவிட்டுச் சாப்பிட்டோம். அதன் பிறகு, குடும்பச் செய்திகள், மற்ற செய்திகளைப்பற்றியெல்லாம் தந்தையும் நாங்களும் பேசினோம். அன்று மாலை மீண்டும் மருத்துவமனைக்குச் சென்று தாயைச் சந்தித்தோம். வெகுநேரம் இருந்து விட்டுப் பிறகு வீட்டுக்கு வந்தோம்.

டில்லிக்கு வந்து இப்போது நான்கு நாட்கள் ஆயின. தாயும் வீட்டில் வந்து சுகமாக இருக்கிறார்கள். 'முல்லை துணைக்கு இரண்டு வாரம் இங்கேயே இருக்கட்டும்! நீ மட்டும் பம்பாய்க்குப்போய் இருந்துகொண்டிரு' என்றார்கள் தாயார். சரியென்று நானும் சம்மதித்திருந்தேன். இச்செய்தி தந்தைக்குத் தெரிந்ததும் அவர், 'வேண்டாம் வேண்டாம்! இந்த வாரம் வரையில் கண்ணப்பனும் இங்கேயே இருக்கட்டும்!' என்று கூறி மறுத்து விட்டதாக முல்லை சொன்னாள். எந்த முடிவும் செய்யாது இருந்தோம்.

நான் டில்லிக்குச்சென்ற பிறகு பம்பாய் அலுவலகத்திலிருந்து பல கடிதங்கள் வந்தன; சென்னையிலிருந்து பம்பாய்க்குப்போய் இங்கு அனுப்பப்பட்ட ஒரு கவர் வந்தது. எதைப்பற்றியதோ? என்ற பரபரப்புடன் அதை உடைத்தேன். அப்போது நடேசன், வானமுது என் நினைவில் தோன்றினர்.

சென்னை.

அன்புள்ள **கண்ணப்பருக்கு,**

மாநாட்டுக்கு வரப்போவதை முன்பே அறிவித்திருந்தேன். இப்போது அத்துடன் வேறொரு முக்கிய அலுவலும் சேர்ந்து கொண்டது.

நெருங்கிய நண்பராகிய உனக்கும் என் சொந்த வாழ்க்கையைப் பற்றிக் கூருது மறைத்து வந்தேன்; என் திருமணத்தைப்பற்றியும், வேறு செய்திகளையும் எவ்வளவு வற்புறுத்தியும் நான் யாருக்கும் இதுவரை வெளியிட்டதே இல்லை. அதற்குக் காரணம் நான் விரும்பாதது தான்.

இப்போது என் வாழ்க்கையில் ஒரு நெருக்கடியான நிலை ஏற்பட்டுள்ளது. அதைப் பேரறிஞர் பலருடன் ஆராய்ந்தேன். வாழ்க்கையில் அனுபவமுடைய உன்னைக் கலந்து ஆராய வேண்டுமென்று எண்ணியுள்ளேன். நான் செய்த முடிவும், பிறர் கூறிய முடிவும் பற்றி நீ அனுபவத்தைக் கொண்டு நன்மை தீமைகளை ஆராய்ந்து எனக்குக் கூற வேண்டும்!

மற்றும் பம்பாயில் உன்னைக்கொண்டு ஒரு நண்பரைக் கண்டு பிடிக்க வேண்டியுள்ளது. அதற்கு உன்னைத் தவிர வேறு யாரும் உதவ முடியாது. இவைதாம் என் பம்பாய்ப் பிரயாணத்தின் முக்கிய நோக்கம். செய்தி என் திருமணத்தைப் பற்றியது. மற்றவை வரும் வெள்ளியன்றைக்கு நேரில் கூறுகிறேன்.

இங்ஙனம்

நண்பன் **முருகப்பன்.**

முருகப்பர் எங்கள் குடும்பத்தில் எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்தவர் ஆகையால், அதைப் படித்துக் காட்டினேன்; எல்லோருந் தமக்குள் ஏதேதோ சிந்தித்துக் கொண்டார்கள். நண்பர் வருகை எனக்கு மிக்க மகிழ்ச்சியையும், பரபரப்பையும் உண்டாக்கியது. அம்மாவுக்கும் உடம்பு சரியாகி விட்டது. அதற்குமேல் எனக்கு டில்லியிலிருக்கப் பிடிக்கவில்லை. 'இன்று புதன்கிழமையாகையால் இடையிலிருப்பது ஒரே நாள். நண்பர் வந்து விட்டால் நடேசனைக் காண்பது அரிதாகி விடும். நண்பர் கூடவே இருக்க வேண்டியதாயிருக்கும். இன்றே பம்பாய்க்குப்போய் விட்டால் நாளைக்கு நடேசனைச் சென்று காணவும். வெள்ளிக்கிழமை நண்பரை வரவேற்கவும் சரியாக இருக்கும்.' என்று நான் முடிவு செய்துகொண்டு முல்லைக்குக் கூறினேன்.

அத்தைக்குத் துணையாக நான் இரண்டு வாரம் இங்கிருந்து வருகிறேன். நீங்கள் உங்கள் விருப்பம் போல இன்றே செல்லுங்கள்; நான் மட்டுந் தங்கி வருகிறேன். நான் இங்கிருப்பதை அத்தை விரும்புகிறார்கள். அருள் அருகில் இருந்தால் அத்தை எவ்வளவு மகிழ்கிறார்கள்! இப்போது நான் இங்கிருப்பதுதான் நல்லது. பம்பாய்க்கு நீங்கள் மட்டும் செல்லுங்கள்! ஆனால் வேளைக்குச் சரியானபடி சாப்பிட்டு உடம்பைக் கவனித்துக் கொள்ளுங்கள்' என்று கூறினாள் முல்லை. நான் மாலையே போகப் போகிறேன்; அத்தைக்குச் சொல்லி வை! என்று சொல்லி விட்டு நான் வெளியே சென்றேன்.

அம்மா, அப்பா, முல்லை எல்லாரிடமும் கூறி விடை பெற்றுக்கொண்டு நான் பம்பாய்க்குப் பிரயாணமானேன். டில்லியிலிருந்தபோது, முதல் இரு நாளில் அம்மாவைக்காண மருத்துவமனைக்குப் போவதிலும், வருவதிலும் காலங் கழிந்தது. மற்ற இரு நாட்களில் வீட்டுப் பேச்சு, வெளிப்பேச்சு என்று எதையெதையோ பேசிக் காலத்தைக் கழித்தோம். பிறகு முருகப்பர் கடிதம், புறப்பாடு இப்படி ஒன்றையடுத்து ஒன்றாக ஓய்வில்லாமல் பல வேலைகள் வந்த வண்ண மிருந்தன. இதற்கிடையில் நடேசனைப் பற்றி அதிகமாக எண்ண முடியாது போய்விட்டது.

புகை வண்டியில் மேலே ஏறிப் படுத்துக்கொண்டேன். ஆனாலும் தூங்கவில்லை. எண்ணற்ற மக்களைத் தூக்கிச் செல்கிறது இவ்வண்டி! இதன் உதவியால் மக்கள் நடக்காமல் சுலபமாகப் பல இடங்களுக்குச் சென்று மீள முடிகிறது. உயர்வு தாழ்வு இல்லாமல் வருவார் அனைவரையும் வகையாகச் சுமந்து திரிகிறது புகை வண்டி. ஆனால் இதில் ஏறும் மக்களுக்கு எத்தனை கொடிய எண்ணங்கள்! அப்பப்பா, அவற்றை எண்ணவும் முடியாது! ஏமாற்றுவோருக்கும், ஏமாறுவோருக்கும் ஏற்ற இடம் இதுதானே! நடையுடைகளால் நாகரிகமாக ஏமாற்றும் வஞ்சகர் பலருக்கு இது வாழ்விடம்; நல்ல மக்கள் பலரையும் இங்கு சந்திக்கலாம். முன்பின் தெரியாதவர்களையெல்லாம் நண்பராக ஆக்கி வைப்பது புகை வண்டிப் பிரயாணம். பல வகை யுணவுகளையும், பல வகைப் பழக்க வழக்கமுடைய மக்களையும் பல வகை அனு

பவங்களையும் ரயில் பிரயாணத்தில் காண முடிகிறது. இடங்கிடைத்து விட்டால் தாராளமாகப் பிடித்துக் கொண்டு, பலர் நிற்க இடமில்லாது நெறிசல் பட்டா லும் ஈவிரக்க மற்றுத் தூங்குபவராக நடிக்கும் ஈனர் களையும், தனக்கே இடம் போதாதிருந்தாலும் நிற் பவர்களைக் காணப் பிடிக்காது நகர்ந்து இடந்தரும் நல்லவர்களையும் ஒரு நாள் பயணத்தில் காணலா மன்றோ! இத்தகைய நிகழ்ச்சிகள் பலவற்றைப் பார்த்துக்கொண்டே நான் போய்க் கொண்டிருந் தேன்.

நடேசன் வீதியில் காலரா என்று கேள்விப்பட் டும் அவர்களைச் சென்று பார்க்காது டில்லிக்கு வந்து விட்டது எனக்கு மிகவும் அருவருப்பாக இருந்தது. பாவம்! நடேசனும், வானமுதும் இரண்டு நாளாய் வேலைக்கு வரவில்லை; அவர்களுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்திருக்குமோ! என்று எண்ணும்போது பயங் கரமாக இருந்தது. எவ்வளவு அவசரமாக இருந் தாலும் நடேசனைப் பார்க்காது வந்து விட்டது, பெரிய தவறு செய்து விட்டவன் பிறகு வேதனைப் படுவதுபோல இருந்தது. அப்போது என் வாழ்க்கை யிலேயே கண்டறியாத துக்கம் என்னைக் கசக்கியது. இது என்ன சிறு பிள்ளைப்போல இருக்கிறதே என்று ஒரு பக்கம் எண்ணினாலும், துயரத்தைச் சிரமப்பட்டு மாற்ற வேண்டியதாயிற்று.

பெரிய மழை பெய்யத் தொடங்கியதனால் வண்டியில் பரபரப்பேற்பட்டது. வெகு நேரத்துக் குப்பின் மழையும் நின்றது; வண்டியும் ஒரு சந்திப்

பில் பெருங் கூச்சலிட்டு நின்றது. மக்களெல்லாம் வெளியே சென்று பல வகை உணவுகளையும், பானங் களையும் உண்டுவிட்டு அவரவர்கள் இருப்பிடம் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் சாப்பிட்டதன் அடையாள மாக ஏப்பங்களை இட்டுக் காட்டினர். என்ஜினும் அவர்களுடன் போட்டியிடுவது போலத் தானும் சென்று உணவையும் பானத்தையும் உண்டு விட்டுத் தன் இடத்துக்கு வந்து பெரிய ஏப்பத்தை வெளி யிட்டது. மீண்டும் வண்டி புறப்பட்டது. இரவு பத்து மணி இருக்கும்; மக்களுக்குத் தூக்க நேரம்; குழந்தைகளைத் தொட்டிலில் இட்டுத் தாய் தாலாட்டு வதுபோலப் புகை வண்டி தன் அசைவினுல் மக்களைத் தூக்கத்தில் ஆழ்த்தியது. பலர் தூங்கி விழுந்தனர். நடேசன் நினைப்பினுலோ என்னவோ, எனக்குத் தூக்கமே வரவில்லை. விடியற்காலை ஐந்து மணிக்குப் பம்பாய் போய்ச் சேர்ந்தேன். நேராகத் தாராவிக் குப் போகலாம் என்று இறங்கினேன். பம்பாயிலும் பெரிய மழை பெய்திருந்தது. தாராவியெல்லாம் சேரும் நீரும் வெள்ளக்காடாயிருக்கும்; நடந்து போவது இருளில் சிரமமாக இருக்கும். வீட்டுக்குப் போய் குளித்து விட்டுச் சிற்றுண்டியெல்லாம் முடித் துக்கொண்ட பிறகு நடேசனைப் பார்க்கப் போக லாம் என்று என் பழைய திட்டத்தை மாற்றிக் கொண்டு வீட்டுக்குப் போனேன்.

குளித்து விட்டுப் புதிய உடைகள் அணிந்து கொண்டு ஓட்டலுக்குச் சென்றேன். சிற்றுண்டி உண்டு கொண்டிருக்கும்போது தாராவி நண்பர் ஒருவர் ஓட்டலுக்கு வந்தார்.

நீங்கள், அண்மையில் நடேசனைப் பார்த்தீர்களா?

'ஒரு வாரமாக நடேசன் இல்லையென்று கேள்விப் பட்டேன்; நேற்று அவர்கள் வீதிப் பக்கம் போன போது வீடு சாத்தி இருந்தது.'

எனக்கு வயிறு குடைவதுபோல இருந்தது. ஆயினும், அமைதியாகவே, நடேசன், அவன் மக்கள் எல்லாம் எங்காவது ஊருக்கு........

'எனக்கு ஒன்றுந் தெரியாது! அங்குதான் காலரா அதிகமாக இருந்தது; அங்கிருந்த எல்லோருமே எங் கெங்கோ போய் விட்டார்கள்; ஆனல் இப்போது எல்லாம் திரும்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆயினும், நடேசன் குடும்பம் நேற்று வரை வரவில்லை. அவர் கள் எங்குச் சென்றதும் எனக்குத் தெரியாது.'

உணவை முடித்துக்கொண்டு அவரிடம் விடை பெற்றுக்கொண்டேன். நேராகத் தாராவிக்குச் சென்றேன்.

வழிநெடுகப் பள்ளங்களெல்லாம் நீர்நிறைந் திருந்தது. புதுநீர் வந்ததால் அதிலிருந்த தவளைகள் மகிழ்ச்சியாகக் கத்தத் தொடங்கின. அவைகளுக்குக் கத்துவது மகிழ்ச்சியாக இருக்கலாம். ஆனல் எனக்கு அச்சமாக இருந்தது. அந்தப் பகுதியில் மக்கள் நட மாட்டம் அதிகமாகக் காணப்படவில்லை. பாழுங் காலரா வந்து அங்கு வாழ்ந்த மக்களைக் கொள்ளை கொண்டு விட்டது. எஞ்சியபவரைப் பலவிடங்களுக் குப் பஞ்சைகளாய்ப் பரதவிக்கும்படித் துரத்தியடித் தது.

ஒளியைக்கொண்டு ஒளியை மிகுதிப் படுத்தலாம்; மரங்களைக்கொண்டு மரங்களை விருத்தி செய்யலாம்; மீன்களைக்கொண்டு மீன்களை அதிகமாக்கலாம்; இவற்றைப்போலவே பணத்தைக்கொண்டு பணத்தைப் பெருக்கலாம்; ஆனால் ஏழ்மையைக்கொண்டு என்ன செய்யலாம்? ஏழ்மையைத்தானே அதிகமாக்க இயலும்? அதுதானே இயற்கையின் சட்டம்! பணக்காரர் பணத்தின் துணையால் மேலும் மேலும் பணக்காரராக முடிகிறது. ஏழைகள் ஏழ்மை காரணமாக இன்னும் ஏழையாகத்தான் முடிகிறது. பணக்காரர் வசதிகளை வளமாகச் செய்துகொள்ள முடிவதால் இத்தகைய நோய்கள் அவர்கள் பக்கம் செல்லக்கூடப் பயப்படுகின்றன. எந்த வசதியுமில்லாத இந்த ஏழைகள் என்ன செய்வார்கள்?

காலராவுக்குக் காரணம் விஷப்பூச்சிகள்; அவை எவ்வாறு உண்டாகின்றன? சுகாதாரமின்மையால். சுகாதாரமாக வாழ்வது இந்த ஏழைகளால் ஆகிற காரியமா? நல்ல உணவுப் பொருளை வாங்க அதிகம் செலவிட வேண்டி இருக்கிறது. இவர்கள் தெரிந்தே கெட்ட—அழுகிய—விஷப்பூச்சிகள் கலந்த பொருள்களை வாங்கி உபயோகிக்கிறார்கள். அதிகமான நோய்கள் அணுகுவதற்கு அது காரணமாகிறது. செல்வமுடையவர்களால் நல்ல பொருளை வாங்கி உபயோகிக்க முடியும்; நோய்களுக்கும் இடமில்லாமல் போகிறது. நோய் வந்து விட்டாலும் பணக்காரர் பணவுதவிகொண்டு பெரிய மருத்துவர்களை நாடுகிறார்கள். பாவம்! ஏழைகளுக்கு நோய் வந்தால் அவர்கள் என்ன செய்வார்கள்? வருந்து

வார்கள்! இல்லையென்றால், தங்களுக்குத் தெரிந்த பாட்டி வைத்தியம் செய்து கொள்வார்கள். புழு வாய்த் துடித்துச் செத்து மடிவார்கள். மருத்துவர் களைக் காண அவர்களிடம் பொருள் ஏது?

அரசாங்கம் பொது மக்களுக்காக மருத்துவ மனைகளை நடத்தினாலும், அவை உண்மையில் பயன் தருவது பணக்காரருக்கே என்பது பாரறிந்த செய்தி. உயர்ந்த மருந்துகள் பணக்காரருக்கும், சாதாரண மருந்து ஏழைகளுக்கும் இன்றைய மருத்துவமனையில் தரப்படுகிறது. பணம் எந்த இடத்திலும் தன் பலத்தைக் காட்டுகிறது. பலமற்ற ஏழைகள் என்ன செய்வார்கள்? மேற்கு நாடுகளைப்போல ஏழை, பணக்காரர் என்று பார்க்காமல்—பணம் பணமின் மையைப் பார்த்து மருந்து தராமல்—நோயாளியைப் பார்த்து என்றைக்கு மருந்து தரப்படுமோ—அன்று தான் நம் நாட்டின் ஏழைகள் நோயிலிருந்து விடுதலை பெற முடியும் என்று பலவாறு எண்ணிக்கொண்டு தவளைக் கத்தலைக் கேட்டுக்கொண்டே நடந்து சென்றேன்.

தவளைகள் புதுநீரைக்கண்டு பூரிப்படைந்து கத்துவதாகக் கேள்வி. ஆனால் இப்போது எனக்கு அவ்வாறு தோன்றவில்லை. காலரா போன்ற கொள்ளை நோய் இல்லாமலிருந்து ஒருவர் இறந்திருந் தால் எத்தனை பேர் கூடி அழுவார்கள்? அவ்வாறு இறந்த மக்களுக்காக இந்தத் தவளைகள் இரங்குவ தாகவே எனக்குத் தோன்றியது.

பல தெருக்களையும், சந்துகளையும் கடந்து வந்து கொண்டிருந்தேன். அப்பகுதி இரைச்சலில்லாமல் அமைதியாக இருந்தது. நடேசன் வீட்டில் எப்படி இருக்கிறதோ? அவர்கள் திரும்பி வந்து விட்டிருப் பார்களா? அவர்கள் வராதிருந்தால் என்ன செய்வது? என்று ஆராய்ந்த வண்ணம் நடேசன் வீட்டையடைந்தேன். கதவு மூடி இருந்தது! எல் லோரையும்போல நடேசனும் எங்கோ சென்றிருக்க வேண்டும். போனவர்கள் திரும்பவில்லையா? என்று எண்ணமிட்டவனாய் சிறிது நேரம் அத்திண்ணைமீது அமர்ந்தேன். காலை நேரமாயிருந்தும் தெருவில் யாரும் திரியவில்லை. நடமாடியவர்களிலும் தெரிந்த வர் யாருமில்லை. நடேசனுக்கும் நமக்கும் தெரிந்தவ ராக யாரையாவது விசாரித்தால்தான் ஏதாவது செய்தி தெரியும்; யாரைக் கேட்பது? என்று யோசித் துக்கொண்டிருந்தேன். பலராமன் வந்து கொண் டிருந்தான்; அவனைக் கேட்டால் ஏதாவது தெரிய லாம் என்று எண்ணிக்கொண்டு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்; தொலைவில் வரும்போதே பல ராமனும் என்னைப் பார்த்துவிட்டான்.

'வணக்கங்கோ! நேற்று இருமுறை உங்க வீட் டுக்கு வந்திருந்தேன். உங்களைப் பார்க்க முடியாது போய்விட்டது. நீங்க ஊருக்குப் போய்விட்டதாகக் கேள்விப்பட்டேன்.'

எங்கள் வீட்டுக்கு இரண்டு முறை வந்திருந் தாயா? ஏன்?

'நடேசன் உங்களைப் பார்க்கச் சொன்னான். அதற்காகத்தான்.........'

நடேசனா? இப்பொழுது நடேசன் எங்கே போயிருக்கிறான்?

அவன் பக்கத்து வீட்டைக் காட்டி 'இதுதான் என் வீடு. உள்ளே போய் உட்கார்ந்து பேசலாம்' என்றான்.

எனக்குப் பரபரப்பாக இருந்தது! என்ன நடந்ததோ? பலராமனை எதற்காக நம் வீட்டுக்கு அனுப்பினான் நடேசன்! என்று யோசித்துக் கொண்டே பலராமனுடன் வீட்டுக்குள் போனேன்.

கட்டிலைக் காட்டி 'இதில் உட்காருங்கோ!' என்றான் பலராமன்.

அமர்ந்து, அவனை உட்காரச் செய்தேன்.

நடேசன் எங்கே போயிருக்கிறான்? நீ எதற்காக என்னைத் தேடி வந்தாய்?

'இதை என்னவென்று சொல்வது? நடந்ததைக் கூறவும் நா கூசுகிறது. 'பக்கத்து வீட்டுக்குக்கூடத் தெரியாது—அவ்வளவு அடக்கத்துடன்—இருந்த குடும்பத்துக்கு இப்படியா இன்னல் வரவேண்டும்?' என்று கூறித் துயரப்பட்டான் பலராமன்.

அவன் கூறியதிலிருந்து நடேசன் குடும்பத்துக்கு ஏதோ நாசம் வந்து நலிந்திருக்க வேண்டுமென்று

ஊகித்தேன். எனக்குத் துக்கமாக இருந்ததாயினும் வெளிக்குக் காட்டாது அடக்கிக்கொண்டு, என்ன பலராமா! நடந்ததைக் கூருது அழுகிருய்! என்ன நடந்தது? என்றேன்.

'என்னவென்று சொல்லுவேன்? சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? அந்தக் குடும்பமே நாசமாகி விட்டது! அடியோடு அழிந்து விட்டது! அவ்வளவுதான்!' என்று கூறிக் கோவென்று அழத் தொடங்கிஞன்.

காலராவில் இறந்துவிட்டார்களா? எல்லோருமா? எனக்குத் தொண்டை கம்மிக்கொண்டு பேச முடியாதபடி இறுக்கிப் பிடித்துக்கொண்டது. பலராமனைப் பார்த்த வண்ணமிருந்தேன். அவன் வாயிலிருந்து ஏதோ பெரிய பூதம் வெளி வருவதுபோல எனக்குப் பயமும் பரபரப்புமாக இருந்ததோடு, அவன் வாயிலிருந்து உதிரும் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு துயர மலையைச் சுமந்து வருவதுபோல இருந்தது. தழுதழுத்த குரலில் மீண்டும் பலராமன் பேசலுற்ருன். என் காதுகளை அகலத் திறந்து கூர்மையாகக் கேட்கலுற்றேன்.

'அவர்கள் காலராவில் இறந்திருந்தால் எனக்கு இவ்வளவு வருத்தம் ஏற்படாதே! காலராவில் நூற்றுக் கணக்காக இறந்தார்களே! அவர்களுக்காகத் துக்கப்பட வேண்டுமென்ருலும் எனக்குத் துயரம் வரவில்லை! பாவம்! பரிதாபமாக இருக்கிறது! வாழ வந்த இடத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கொடு

மைக்குப் பலியாவதென்றால்—எப்படித்தான் வருத்தப்படாதிருக்க முடியும்?'

எனக்குச் சம்மட்டியால் தலையில் தாக்கியது போல இருந்தது; என்னைச் சமாளித்துக்கொண்டு, நீ சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லையே? என்ன நடந்தது? விவரமாகச் சொல்லப்பா! என்று மீண்டும் தழுதழுத்த குரலில் கேட்டேன்.

'ஒரு வாரத்துக்கு முன் இந்தப் பக்கத்தில் நாளொன்றுக்கு காலராவில் நூற்றுக்கணக்கான மக்கள் இறந்தனர். அதற்குப் பயந்து எல்லோரும் எங்கெங்கோ ஓடி விட்டார்கள்; ஆனால், நடேசன் குடும்பமும், என் வீட்டில் நானும் மட்டும் இங்கேயே இருந்தோம். சிற்றரசுக்கு அந்நோயின் அடையாளம் தென்பட்டதாம்; நடேசன் மகனை மருத்துவமனையில் சேர்த்து விட்டுத் தானும் அங்கேயே இருந்தானாம். இவ்வளவும் எனக்குத் தெரியாது. பிறகு வானமுது சொன்னாள்.'

பிறகு என்ன ஆயிற்று என்று விருவிருப்புடன் கேட்டேன்.

'இரண்டு நாளைக்குப் பிறகு தமிழ்நாட்டிலிருந்து முனியாண்டி என்று ஒருவன் நடேசனைத் தேடி எங்கெங்கோ அலைந்து இறுதியில் என்னை வந்து கேட்டான். நான் அழைத்துக்கொண்டு போய் நடேசன் வீட்டில் விட்டேன். அப்போதுதான் நடேசன் வீட்டில் இல்லாததும், மருத்துவமனையில் மகனுடன் இருப்பதும் வானமுது கூறக் கேட்டேன்.

'வானமுதுக்கு முனியாண்டியைத் தெரியவில்லை. முதலில் அவனுடன் பேசத் தயங்கினாள்; முனியாண்டிக்கு ஐம்பத்தைந்து வயதுக்குக் குறையாமலிருக்கும். பிறகு முனியாண்டியே தன்னைப் பற்றிக் கூறினான்.

'நடேசன் எனக்கு இளமை நண்பன்; நான் ஏழ்மை காரணமாக எங்கெங்கோ திரிந்து வந்தேன்; அதனால் நடேசனுக்கு மட்டுந்தான் என்னைத்தெரியும். நீயும் சிற்றரசும் குழந்தைகளாக இருந்தபோது ஒரு முறை நம்மூருக்கு வந்திருந்தேன். அதன் பிறகு நான் ஊருக்கே திரும்பவில்லை யாகையால் உனக்கு என்னைப்பற்றித் தெரியாது. நான் எப்போதாவது ஊருக்கு வந்தால் உங்கள் வீட்டில்தான் தங்குவது வழக்கம்; உன் தாய் தங்கம், உங்க அத்தை நீலா எல்லோரும் என்னிடம் அன்பாகப் பழகுவார்கள்.' என்று நடேசன் உறவினர் பெயரையெல்லாம் அவன் சொன்ன பிறகு, வானமுது அவனை உள்ளே அழைத்துச் சென்றாள். பிறகு நான் போய் விட்டேன்.

'அன்று இரவு முனியாண்டி தெருத் திண்ணைமீது படுத்துக்கொண்டிருந்தான். இரவு மணி பனிரண்டு இருக்கும்! அந்தப் புரட்டுப்பயல் பீமையா இல்லைங்களா? அவன் வந்து நடேசன் வீட்டுக் கதவைத் தட்டினான்......' என்று பலராமன் சொன்ன போது எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. நெருப்பையெடுத்து நெற்றியில் வீசியதுபோல ஆகி விட்டது. அந்தப் பயல் ஏன் வந்தான்? பிறகு என்ன ஆயிற்று? என்று கேட்டபோது என் மார்பு

பட படவென்று முன்னிலும் அதிக வேகத்துடன் அடித்துக்கொண்டது. அப்போது வீட்டுக்குள்ளே பூனையின் வாயில் சிக்கிக்கொண்ட எலி ஒன்றின் பரிதாபமாகக் கத்தும் ஒலி கேட்டது. தழுதழுத்த குரலில் பலராமன் பேசலுற்றான்.

'முனியாண்டி எழுந்து 'யாரது?' என்று கேட்டான்; வானமுது எழுந்து வந்து கதவுக்குட்புறம் இருந்தபடியே விசாரித்தாள்; திண்ணைமீதே படுத்துக்கொண்டிருந்தேனாதலால் நானும் எழுந்துபோய் விசாரித்தேன்; பீமையா தற்செயலாக மருத்துவ மனைக்குப் போனதாகவும், நடேசனும் சிற்றரசும் காலராவால் இறந்து விட்டதாகவும், அதை நேராக அவன் பார்த்துவிட்டு வந்ததாகவும், இன்னும் சிறிது நேரத்துக்குள் தோட்டிகள் பிணங்களைப் புதைத்து விடுவார்களாதலால் உங்களுக்குச் சொல்ல ஓடி வந்தேன் என்றும் அவன் சொன்னான். முனியாண்டி மிகவும் பயந்து விட்டான். தந்தையையும், தம்பியையுங் காண வானமுது துடியாய்த்துடித்து முனியாண்டியைத் துணைக்கு அழைத்தாள்.

'காலராவில் இறந்தவர்களைக் காண முனியாண்டி தயங்கினான். பிறகு நானும் வானமுதும் தைரியம் சொன்ன பிறகு போகச் சம்மதித்தான். முனியாண்டியும் வானமுதும் பீமையாவைத் துணைக்கு அழைத்துக்கொண்டு மருத்துவமனைக்குச் செல்லப் புறப்பட்டார்கள்.' என்று பலராமன் கூறி நிறுத்தினான்.

எனக்கு முன்னிலும் பரபரப்பாக இருந்தது! கொஞ்சம் அசைந்து சரியாக உட்கார்ந்தேன்; கண்,

ணிமைகள் பாரமாக இருப்பதுபோலத் தெரிந்தது. நீயும் அவர்களுடன் சென்றிருக்கலாமே? நீ ஏன் போகவில்லை? என்று கேட்க எண்ணினேன்; பேச முடியாதபடி தொண்டை அடைத்துக்கொண்டிருந்தது. அதன் பிறகு என்ன நடந்தது? என்பதைத் தலையசைத்தே கேட்டேன்.

'அவர்கள் போன சிறிது நேரங்கழித்து நடேசன் வெறி பிடித்தவனைப்போல வீட்டுக்கு ஓடி வந்தான்; வெளியில் கதவு பூட்டாமல் சாத்தப்பட்டிருந்தது; வானமுது பூட்ட மறந்துவிட்டாளோ? என்று எண்ணிக்கொண்டு உள்ளே சென்று வானமுது! வானமுது!! என்று கூப்பிட்டான். அவர்களை அனுப்பிவிட்டு அப்போதுதான் திண்ணைமேலேயே படுத்துக்கொண்டிருந்தேன். நடேசன், சிற்றரசு முதலியோர் இறந்துபோனதாகச் சொன்னது உண்மையாக இருக்குமா என்று எண்ணிக்கொண்டிருந்தபோது நடேசன் வந்து கூப்பிட்டது கேட்டது. நடேசன் குரலைக் கேட்டதும் நான் திடுக்கிட்டவனாய் எழுந்து அவர்கள் வீட்டுக்குள் நுழைந்தேன்.

'என்னுங்கோ! வானமுது, முனியாண்டி அவர்கள் மருத்துவமனைக்கு வந்தார்களே, நீங்கள் பார்க்கவில்லையா?' என்றேன் நான்.

'வானமுது மருத்துவ மனைக்குப் போனாளா? இந்த இரவில் ஏன் போனாள்?' என்று நடேசன் வியப்புடன் கேட்டான்.

'நான் திடுக்கிட்டுவிட்டேன். சரி, பீமையா அவர்களைத் தவருன வழியில் எங்கோ கடத்திச் சென்றிருக்க வேண்டும் என்று எண்ணிக்கொண்டு நான் நடந்தவற்றையெல்லாம் நடேசனுக்குக் கூறினேன். அவன் இடுப்பொடிந்தவன்போல உட்கார்ந்து அழத்தொடங்கினன்.

'இன்னும் உயிருடன் என் கண்மணிகளைக் காணப் போகிறேன' என்று கூறி அழுதான்!

என்னுங்கோ! சிறு பிள்ளையைப்போல அழுகிறீர்களே! பீமையா எந்த வழியிலாவது தவருக அழைத்துச் சென்றிருப்பான்! இதற்குப்போய் அழுகிறீர்களே? நாம் போய் தேடிக் கண்டு பிடிக்கலாம், எழுந்திருங்கோ! வானமுதுக்கு முனியாண்டி துணையிருக்கிருன்; அவளுக்கென்ன பயம்? என்று நான் தேற்றினேன்.

'என் இரு கண்களும் போய் விட்டதப்பா! மருத்துவ மனையில் சிற்றரசைச் சேர்த்திருந்தோம்; அவன் இறந்து விட்டான். அவன் பிணத்தைக் காலை எழு மணிக்குத்தான் தர முடியும் என்ருர்கள்; அதைக்கூற நான் ஓடி வந்தேன். பாவிகள்! என் இன்னெரு கண்ணுன வானமுதையும் ஏமாற்றி எங்கோ அழைத்துச் சென்று விட்டார்கள்! இனி மேல் வானமுதை மட்டும் நான் உயிருடன் காணப் போகிறேன?' என்று கூறிக் கோவென்று அழுதான்.

சிற்றரசு இறந்து விட்டான?

'ஆமாம்.'

இனிமேல் இங்கு அழுது பயனில்லை. வானமுதைத் தேடிக் க்ண்டுபிடிப்பதுதான் இப்போது செய்ய வேண்டிய வேலை. அவர்கள் இன்னேரம் மருத்துவமனைக்குத்தான் சென்றிருப்பார்கள், அழுது கொண்டிருந்தால் வானமுதுக்கு ஆபத்துதான்!

வானமுதும், முனியாண்டியும் மருத்துவ மனைக்குப் போகும்போது 'இனி உனக்கு இங்கு என்னம்மா வேலை? உன் தந்தையும், தம்பியும் இறந்து விட்டப்புறம் நீ தனியாக இங்கே எப்படி இருப்பாய்? உங்க அத்தான் மாம்பலத்தில் இருக்கிறான். எனக்கு நன்றாகத் தெரியும்; நான் நடந்தவற்றையெல்லாம் கூறி உன்னை அவனிடம் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறேன்; என்னுடன் பேசாமல் சென்னைக்கு வந்துவிடு!' என்று முனியாண்டி கூறினான்.

'அப்பா, தம்பி இருவரும் இறந்து விட்டதை நன்றாகத் தெரிந்துகொண்ட பிறகு அப்படித்தான் நாம் சென்னைக்குப் போய்விடலாம்' என்று வானமுது சொன்னாள்.

பிறகு என்னிடம் வந்து, 'எங்கள் வீட்டையும் பார்த்துக் கொள்ளுங்கள்! நான் எப்படியும் மருத்துவ மனைக்குப் போய்த் திரும்பி வருகிறேன். அதுவரை நீங்கள் வீட்டை கவனித்துக் கொள்ளுங்கள்' என்று வானமுது கூறியதை நான் நடேசனுக்குக் கூறினேன்.

'அப்படியானல், நான் புகை வண்டி நிலயத்துக்குப் போய்ப் பார்க்கிறேன். நீ மருத்துவ மனைக்குக் கொஞ்சம் சென்று விசாரித்து விட்டு வருகிருயா?' என்று என்னை நடேசன் வேண்டினன். அதற்கிசைந்து நான் மருத்துவ மனைக்குச் சென்றேன். நடேசன் புகை வண்டி நிலயத்துக்குப் போனன். வழியிலும், மருத்துவ மனையிலும் எனக்கு யாரும் தென்படவில்லை. பிறகு காலை ஐந்து மணிக்கு நடேசன் முனியாண்டியைத் தூக்கிக்கொண்டு வந்தான்!

சிறிது நேரம் முனியாண்டிக்கு இருவரும் சிகிச்சையளித்தோம்; பீமையா, முனியாண்டியைக் கத்தியால் குத்தி விட்டு வானமுதைத் தூக்கிச் சென்றிருக்க வேண்டுமென்று நாங்கள் ஊகித்தோம். சிறிது நேரங்கழித்து முனியாண்டிக்குத் தெளிவு வந்தபோது அதை அவன் உறுதி செய்தான். இருவரும் முனியாண்டியைத் தூக்கிக்கொண்டு போய் இந்தத் தெருவின் கோடியிலுள்ள மருத்துவச் சாலையிற் சேர்த்தோம்.

பலராமா! நீ அருகிலிருந்து முனியாண்டியைக் கவனித்துக்கொள்! என்று கூறி விட்டு நடேசன், சிற்றரசை வாங்கி அடக்கம் செய்ய மருத்துவமனைக்குப் போனன். அதிக நேரமாகி விட்டதால் நடேசன் போவதற்குள் அவர்களே சிற்றரசை அடக்கம் செய்து விட்டார்களாம்; துக்கத்துடன் நடேசன் திரும்பி வந்தான்.

நடேசன் திரும்பி வருவதற்குச் சிறிது நேரத்துக்கு முன்பு முனியாண்டிக்குத் தெளிவு வந்து

பேசத்தொடங்கினான். 'நடேசா! நீ ஏம்பா, இங்கே இப்படி அல்லல் படுகிறாய்? உன் தங்கை மகன் மாம்பலத்தில் பெரிய பணக்காரனாக இருக்கிறான்! நீ அங்கே போய்ச் சேர்ந்துவிடப்பா!' என்று நடேசன் பக்கத்திலிருப்பதாக எண்ணிக்கொண்டு அவன் கூறினான். மரணாவஸ்தையிலும் அவன் வாய் இன்னும் எதையெதையோ முணுமுணுத்தது. அவையெல்லாம் நன்றாகக் கேட்கவில்லை. அரை மணி நேரங் கழித்து நடேசன் துக்கத்துடன் திரும்பி வந்தான்; நான் முனியாண்டி கூறியதை நடேசனுக்குக் கூறினேன்; 'நான் இல்லாமல் போய் விட்டேனே!' என்று நடேசன் வருத்தப்பட்டான். மீண்டும் முனியாண்டி படுக்கையருகில் சென்று பலமுறை கூப்பிட்டுப் பார்த்தோம்; அவன் ஒன்றும் பேசவே இல்லை. பத்து நிமிடத்துக்குப் பின் முனியாண்டி துடியாய்த் துடித்தான். அப்போது சுய நினைவில்லையென்பதை அவன் கூறிய சம்பந்தமற்ற பேச்சுகள் தெளிவாக்கின. அவன் பட்ட துயரத்தை நாங்களே காண முடியாது துக்கித்தோம்; பெரிய இரைச்ச லிட்டான்! அவ்வளவுதான்; அவன் விழிகள் சுழன்றன; பேச்சடங்கிற்று; அவன் ஆவி பேசாது பிரிந்து விட்டது. நடேசன் பட்ட சிரமம் சொல்ல முடியாததாக இருந்தது.

பிறகு நடேசன், நேராக வீட்டுக்கு வந்தான்; நானும் அவனுடன் கூடவே வந்தேன். அறை, பெட்டி, புத்தகங்கள் எதையெதையோ வெகுநேரம் சோதித்துக்கொண்டிருந்தான் நடேசன். நான் வாசல் வராந்தாவிலேயே இருந்தேன்; ஆனால் அப்போது

நடேசன் அழுததாகத் தெரியவில்லை. நடேசன், அறைக்குள் மூன்று மணி நேரம் எதையெதையோ பார்த்துக்கொண்டிருந்து விட்டுப் பிறகு வெளியே வந்தான். அப்போது நடேசன் முகத்தில் சிறிது கூட துக்கமே காணப்படவில்லை; வியப்பும், அருவருப்புமாக அவன் காணப்பட்டான். பிறகு என்னைப் பார்த்து 'பலராமா! தயவு செய்து நீ போய் நடந்த செய்திகளையெல்லாம் கண்ணப்பரிடம் கூறுகிறாயா ?' என்றான்.

இப்போதே போய்ச் சொல்லுகிறேன் என்றேன் நான்.

'நான் இங்கிருந்தால் திரும்பி வந்து உன்னைப் பார்க்கிறேன். இல்லையென்றால் சென்னைக்குச் செல்லுகிறேன். நான் சென்னை சென்றதும் என் முகவரியுடன் உனக்குக் கடிதம் எழுதுகிறேன்; என் குடும்பச் சம்பந்தமான செய்திகள் ஏதாவது உனக்குத் தெரிந்தால் உடனே தெரியப்படுத்து' என்று கூறிவிட்டு நடேசன் புறப்பட்டான். சில குடும்பச் சாமான்களையும் பெட்டி புத்தகங்கள் எல்லாவற்றையும் எங்கள் வீட்டில் வைத்துவிட்டு, 'எனக்கு இவை திரும்ப வேண்டுமென்றால் வந்து எடுத்துக்கொள்ளுகிறேன். இல்லையென்றால் எங்கள் நினைவாக நீயே வைத்துக்கொள்!' என்றான். நடேசன் போகும்போது அவனிடம் மூட்டை ஒன்று கையிலிருந்தது. இறுதியாக 'கண்ணப்பரை மட்டும் உடனே சென்று பார்!' என்று கூறினான். நான் என்னால் முடிந்த அளவு எவ்வளவோ வற்புறுத்தினேன். இன்னும் சிலநாள் இங்கு இருங்கள், ஏதாவது செய்தி கிடைக்கலாம் என்று கூறினேன்.

'எனக்கு இனிமேல் இங்கு என்னப்பா இருக்கிறது? சிற்றரசு இறந்து விட்டான்! வானமுது இறந்து விட்டதும் எனக்கு உறுதியாகி விட்டது! அதற்கேற்ற . சாட்சிகளும் எனக்குக் கிடைத்து விட்டன. இனி என்னைத் தயவு செய்து தடுக்காதே! இதுதான் நீ எனக்குச் செய்யும் உதவி!' என்று கூறி விட்டுச் சாந்தமாகவே நடக்கத் தொடங்கி விட்டான் நடேசன்.' என்று பலராமன் கூறி முடித்தான்.

நீ மேற்கொண்டு எதையும் ஆராயவில்லையா? நீங்கள் போலீஸில் புகார் கொடுத்திருக்கலாமே? அப்படிச் செய்யவில்லையா? என்றேன் நான்.

'ஆமாங்கோ! நான் அதை முதலிலேயே நடேசனுக்குக் கூறினேன். அதற்கு நடேசன் இசையவில்லை. நடேசன் போய்விட்ட பிறகு நான் பீமையா வீட்டுக்குப் போனேன். அப்போது மாலை ஐந்து மணியிருக்கும். பகல் ஒரு மணியிலிருந்து பீமையாவுக்குக் காலரா கண்டிருப்பதாகவும், அவன் பலவீனமாக இருப்பதால் பேசவும் முடியாதென்றும் அவர்கள் வீட்டார் சொன்னார்கள். மீண்டும் ஆறு மணிக்கு பீமையா இறந்துவிட்ட செய்தியைக் கேள்வியுற்றேன். பீமையாவாவது உயிருடன் இருந்தால் போலீஸில் சொல்லி விசாரிக்கச் செய்யலாம்; அவனும் இறந்து விட்டான்! மேற்கொண்டு என்ன செய்வதென்று புரியாமல் உங்கள் வீட்டுக்கு வந்தேன். உங்களைச் சந்திக்க முடியாது போயிற்று. இன்று காலை உங்கள் வீட்டுக்கு வரலாம் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். நீங்கள் வந்து விட்டீர்

கள், என்ன செய்வது? நடேசன் என்னிடம் இறுதியாகப் பேசியதைக் கவனித்தால் அவன் உயிருடன் இருக்க விரும்பவில்லை என்று ஏற்படுகிறது. அவன் மனம் முறிந்து விட்டது; தற்கொலைதான் அவன் முடிவாக இருக்கும் என்று எனக்குப்பட்டது. நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்; அவன் நிற்கவே விரும்பவில்லை. பாவம், பரிதாபமாக இருக்கிறது நடேசன் செய்தி!' என்று பலராமன் கூறிமுடித்தான்.

அழுது கொண்டிருந்த நான், தலையை நிமிர்த்தினேன். பலராமனும் தாரை தாரையாக நீரைச் சொறிந்திருக்கிறான். தரையில் சில துளிகள் மின்னிக்கொண்டிருந்தன. வெளிப்பக்கம் பார்த்தேன்; ஒளியே தெரியாதபடி மேகம் சூரியனை மறைத்துக் கொண்டிருந்தது. மேலும் என்னால் அங்கு இருக்க முடியவில்லை.

நடேசனைப் பற்றிய செய்தி ஏதாவது தெரிந்தால் உடனே வந்து எனக்குத் தெரியப்படுத்து! என்று கூறி விட்டுப் பலராமனிடம் விடைபெற்றுக் கொண்டு நான் வீட்டுக்குப் புறப்பட்டேன்.

'ஏதாவது தெரிந்தால் உடனே வந்து தெரிவிக்கிறேன்' என்று கூறிப் பலராமன் வணங்கினான்.

உள்ளம் கலங்கிக் கொண்டிருந்தது. கண்ணீர் முகத்தைக் கழுவிக்கொண்டிருந்தது. நான் வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தேன். உடம்பெல்லாம் வலிப்பது போன்றிருந்தது. பஸ் ஏறி

வீட்டுக்குப் போனேன்; மணி பதினொன்று ஆகி யிருந்தது. ஒன்றுந் தோன்றாது சிறிது நேரம் இருக்கையில் அமர்ந்திருந்தேன். மயக்கம் வரும் போல இருந்தது; வேலைக்காரனைக் கூப்பிட்டுத் தேனீர் வேண்டுமென்றேன்; அவன் தயாரித்துக் கொண்டு வருவதற்குள், இரண்டு முறை தண்ணீரால் முகத்தைக் கழுவினேன்; தெளியவில்லை! தேனீர் குடித்த பிறகு சுயநிலை ஏற்பட்டது. ஓய்வாகச் சென்று படுக்கையில் படுத்துக்கொண்டேன். வேலைக் காரன் சமையலைக் கவனிக்கச் சென்றான். நான் மீண் டும் எழுந்து போய் கதவைத் தாளிட்டுக்கொண்டு படுத்துக்கொண்டேன். அழ வேண்டும் போலிருந் தது. எவ்வளவு அடக்கிப் பார்த்தும் முடியவில்லை. என்ன இது! சிறு பிள்ளைத்தனமாக இருக்கிறதே? யாராவது கேட்டுவிட்டால் என்னுவது? என்றெல் லாம் எண்ணிப் பார்த்தும் அடக்க முடியவில்லை. விக்கல் வரத் தொடங்கிவிட்டது. தொண்டை கவ்விக்கொண்டு பேச முடியாது போலத் தெரிந்தது.

படுக்கையிற் புரண்டுகொண்டு வெகு நேரங் கிடந்தேன். அருள், தாயார், முல்லை யார் யாரையோ எண்ணிப் பார்த்தேன்; நடேசனைப் பற்றிய துக்கம் நெஞ்சிலிருந்து நெகிழவில்லை; திடீரென்று முருகப் பர் நினைவு வந்தது. இன்று முருகப்பரிடமிருந்து கடிதம் வந்திருக்குமா? என்று எண்ணினேன்; வந் திருந்தால் வேலைக்காரன் கொடுத்திருப்பானே? வந்திருக்காதென்று முடிவு செய்தேன். மீண்டும் வேலைக்காரனைக் கேட்க வேண்டுமென்று ஒரு எண்ண மெழுந்தது. வேலைக்காரனிடம் பேச்சுக் கொடுத்தா

வது இதை மாற்றலாம் என்று எண்ணிக்கொண்டு படுக்கையை விட்டு எழுந்தேன். கதவைத் திறந்து கொண்டு வாசலுக்கு வந்தேன்; அன்று வந்த கடிதங் களையெல்லாம் வேலைக்காரன் மேசைமீது வைத்திருந் தான். வீட்டுக்கு வந்ததும் இவற்றைக் கவனிக்காது போனேனே! என்று எண்ணியவனாய் நாற்காலியில் அமர்ந்து கடிதக் கட்டை எடுத்தேன்.

'இரண்டு முறை வந்து கதவைத் தட்டினேன்; நீங்க நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தீங்க! அதனால் தொந்தரவு செய்யக்கூடாதென்று திரும்பி விட் டேன். அதிக நேரமாயிற்றே, சாப்பிடவில்லைங் களா?' என்றான் வேலைக்காரன். அப்போதுதான் எனக்கு நேரத்தைப்பற்றி ஞாபகத்துக்கு வந்தது. எனக்குப் பசி இருப்பதாகத் தெரியவில்லை. மேலும் சாப்பிட முடியாது.

நீ போய்ச் சாப்பிட்டு விடு; நான் இன்று சாப்பிடப் போவதில்லை. நீ சாப்பிட்டுவிட்டு அதற் கப்புறம், சிற்றுண்டி வாங்கி வந்து வை! என்று கூறி விட்டுக் கடிதங்களைக் கவனிக்கத் தொடங்கி னேன். அலுவலாகப் பலர் எழுதிய கடிதங்கள் அவை. அவற்றையெல்லாம் படிக்க இப்போது எனக்கு விருப்பமெழாமையால் ஒரு பக்கமாக வைத்து விட்டேன். நண்பர்கள், தந்தை அல்லது முருகப்பர் இவர்களிடமிருந்து ஏதாவது கடிதம் வந்திருக்கிறதா? என்ற எண்ணத்துடன் நான் அவற்றுள் தேடிக் கொண்டிருந்தேன். அந்த நம்பிக்கை அற்றுப் போகும்போல இருந்தது. கட்டு, குறைந்துவிட்டது;

இன்னும் இரண்டு மூன்று கடிதங்கள் தானிருக்கும்; எல்லாம் அலுவல் பற்றியவை; ஆயினும், யாரால் அனுப்பப்பட்டவை என்பதை மட்டும் கவனித்து வந்தேன்; இறுதியில் முருகப்பர் கடிதம் ஒன்று கிடைத்தது. ஆவலாய் அதைப் பிரித்தேன்.

சென்னை.

நண்பர் **கண்ணப்பருக்கு,**

என் முந்திய கடிதங்களால் செய்தியறிந்திருப்பீர்கள்; என் திருமணத்தைப்பற்றி உம்மிடம் கலந்து ஆராய வேண்டியுள்ளது; மற்றும், ஒரு நண்பரைப் பம்பாயில் கண்டு பிடிக்க வேண்டும்; இவ்விரண்டுக்கும் உம் உதவி இன்றியமையாது வேண்டப்படுகிறது, என்பதை முந்திய கடிதங்களில் அறிந்திருப்பீர்.

என் வாழ்க்கைக் கூறுகளில் ஒன்றைக்கூட—அதிலும் நெருங்கிய உம்மைப் போன்ற நண்பருக்கும்—நானிதுவரைக் கூறியதில்லை. நீங்கள் எவ்வளவோ வற்புறுத்தியும் திருமணம் போன்ற என் குடும்பச் செய்திகளை நான் கூறாது மறைத்தே வந்தேன். இதில் மட்டும் என்மீது நீங்கள் வருத்தப்பட்டும் இருப்பீர்கள். அவ்வாறு நான் மறைத்து வந்ததற்கு என் வறுமை தான் முதற் காரணம்; பின்னர், என் சிக்கலான குருட்டு முடிவு இரண்டாவது காரணமென்று கூறலாம். அதற்காக மன்னிக்க வேண்டுகிறேன். அதற்குக் கழுவாயாக உங்களிடமே யோசனை கேட்க வருகின்றேன்.

நான் பம்பாயில் காண வேண்டிய நண்பர் ஆணல்ல; ஒரு பெண். ஆச்சரியப்படாதீர்கள்—என் காதலியைத்தான்! என்னுல் காதலிக்கப்பட்ட ஒருத்தி வறுமை, அச்சம் இவைகள் காரணமாகப் பம்பாயில் சென்று வருந்திக் கொண்டிருக்கிருள்; அவளை நாம் தேடிப்பிடிக்க வேண்டும். பம்பாயிலிருப்பதாக அவள் எனக்குக் கடிதம் எழுதியுள்ளாள். ஆனுல்—எதனுலோ, அவள் முகவரி எழுதவில்லை. அதனுல் நான் பதில் எழுதவோ, நேரில் சென்று பேசவோ முடியாதிருக்கிறது. அக் கடிதத்துடன் நான் வெள்ளிக்கிழமை காலை பம்பாய் வருகிறேன். மற்றவை நேரில்.

இங்ஙனம்

நண்பன் **முருகப்பன்.**

என் உணர்ச்சியெல்லாம் உறைந்து கிடந்ததால், நண்பர் கடிதத்தைப் பன்முறை படிக்க வேண்டியதாயிற்று. பழையபடி சிந்தனையோடு நண்பர் கடிதத்தைப் படித்தேன். நண்பர், முன் கடிதத்தில் யாரோ ஒரு நண்பரைக் கண்டு பிடிக்க வேண்டுமென்று எழுதியிருந்தார். இந்தக் கடிதத்தில் அந்த நண்பர் பெண்ணும்! அவளும் அவர் காதலியாம்! வேடிக்கையாக எழுதியிருக்கிருரே! என்று எண்ணிக் கொண்டு மேலே நோக்கினேன். பல்லியின் வாயிற் சிக்கிய ஒரு தும்பி எப்படியோ தப்பிப் பறந்து போய் விட்டது. அதை மீண்டும் பிடிக்கத் தாவிய

பல்லி தண்ணீரில் விழுந்து விட்டது! சூரியன் மேகத்துள்ளிருந்து வெளியே வந்து கொண்டிருந்தான்.

வேலைக்காரன் சிற்றுண்டி வாங்கி வந்து வைத்து விட்டு என்னைச் சாப்பிட அழைத்தான். ஓட்டல் உணவுகளை உண்ணும் பழக்கம் எனக்கு அதிகம் கிடையாதாகையால் எப்போதாவது வாய்ப்பு வந்தால் வெறுப்பாகக் கொஞ்சம் உண்ணுவேன். அதற்காக வேலைக்காரன் சிரமப்பட்டு பெரிய—நல்ல ஓட்டலுக்குச் சென்று வாங்கி வருவதுண்டு; எனக்கு அதுவும் அப்படித்தான். சில சமயம் நண்பர்கள் ஓட்டல் உணவுகளை விமர்சனம் செய்வார்கள்; அது எனக்கு வேம்பாய்க் கசக்கும்; இவர்கள் உண்மையில் ஓட்டல் உணவுகளை உண்ணாமலேயே இப்படி விமர்சனம் செய்கிறார்களா? என்றுகூட நான் எண்ணிக் கொள்வதுண்டு. வழக்கப்படி இன்றும் சிறிது உண்டு விட்டு முருகப்பர் கடிதத்தை எடுத்துக்கொண்டு வெளியிற் கிளம்பினேன்.

பஸ் ஏறிக் கடற்கரைப் பக்கமாகச் சென்றேன். மணி ஐந்தாகி விட்டிருந்ததால் நிழலைத் தேடாது பரந்த மணல் வெளியிலேயே அமர்ந்து விட்டேன். பல முறை நண்பர் கடிதத்தைப் படித்தேன்; மாணவர்கள் தேர்வுக்காக மனப்பாடம் செய்வதுபோலப் பன்முறை படித்தேன். ஆனல், பெண்ணாம்! காதலியாம்! கண்டறிய வேண்டுமாம். இதைத் தவிர அதில் எனக்கு வேறு எதுவும் புரிந்துகொள்ள முடியவில்லை.

இதுவரை எப்படி எப்படியோ கேட்டும் முருகப்பர் தன் வாழ்க்கையின் எப்பகுதியையும் கூறியதில்லை. எல்லாக் கேள்விக்கும் வறுமை! வறுமை! என்று ஒரே பாட்டைப் பாடி விடுவார்.

ஏனப்பா! பள்ளிப் படிப்பை நிறுத்திக்கொண்டாய்?

'வறுமை!'

பள்ளிக்குத்தான் நின்று விட்டாலும் ஓய்ந்த நேரத்திலாவது படிக்க முயற்சி செய்கிருயா?

'எப்படி முடியுங்கோ? வறுமை என்னை வாட்டும் போது!' என்று எல்லாக் கேள்விக்கும் வறுமையை இழுத்துப் பேசி விடுவார். அதனல், அதிகமாக நான் வற்புறுத்தலை நிறுத்திக் கொண்டேன்.

ஆனல்—திருமணத்தைப் பற்றிக் கேட்டபோது, அவர் வறுமையைக் காரணங்காட்ட முடியாது! அப்போது அவர் பெரும் பணக்காரராக இருந்தார்; ஆகையால் இப்போது வறுமையை இழுத்துப்போட அவரால் முடியாது.

'எனக்குத் திருமணம் வேண்டாம்பா! நாட்டுக்கு—மொழிக்கு—உலக அமைதிக்குத் தொண்டு செய்யப் போகிறேன். நான் திருமணம் செய்து கொண்டால் இடையூருக முடியும்' என்றெல்லாம் கூறி வந்த நண்பர். எப்படியோ காதல் செய்யுமளவுக்கு வந்து விட்டிருக்கிருர்; இப்போது காதலியைத் தேடிக்

கொண்டு பம்பாய்க்கும் வந்து கொண்டிருக்கிறார்; வேடிக்கையான மனிதர்! என்று நண்பனைப்பற்றிப் பலவாறு எண்ணிக்கொண்டிருந்தேன். நீர் வேட்கை யாக இருந்ததால், குழாவிற் சென்று கொஞ்சம் நீர் அருந்தி விட்டு அப்படியே நடந்து சென்று ஒரு மரத்தடியில் புல் தரையின்மீது அமர்ந்தேன்.

பணியாளர்கள் புல்லையெல்லாம் ஒரே அளவாகக் கத்தரித்திருந்தார்கள்; ஒரே அளவாக இருப்பது அழகாகக் காணப்பட்டது. ஏறத்தாழ இருந்தால் இவ்வளவு அழகாக இருக்காதல்லவா? தாழ இருப் பதை வளர விட்டு, வளர்ந்திருப்பதை அதற்குச் சமமாக வைத்துப் பணியாளர்கள் கத்தரித்து விடு கிறார்கள். இப்போது எல்லாப் புல்லும் சமமாகக் காணப்பட்டாலும், அவை முன்பு ஏறத்தாழவே இருந்தன. பணியாளர் வேலையால் இவை இப் போது ஒரே சமமாக ஆக்கப்பட்டு அழகாகக் காட்சி யளிக்கின்றன; இப்போது புல்லுக்கும் ஒரு பெருமை கிடைக்கிறது!

மனிதர்களும் இப்படிச் சமமாக வாழ்ந்தால்—ஏற்றத்தாழ்வில்லாதிருந்தால் — எவ்வளவு நன்றாக இருக்கும்! எத்தனைக் குடும்பங்கள் வறுமையால் வாடியழிகின்றன! நோயால் நசிந்து நொறுங்குகின் றன! இன்னலால் இறந்து போகின்றன! இவை யெல்லாம் ஒழிந்து, மனித சமுதாயம் இந்தப் புற் களைப்போல ஒரே சமமாக இருந்தால்........?

அது ஆகுமா?

ஏன் ஆகாது! முயன்றால் முடியாததுமில்லை யல்லவா? முயற்சி திருவினையாக்குமல்லவா? முயன் றால் முடியும்—கட்டாயம் முடியும்!

முயல்பவர் யார்?

தனிப்பட்ட ஒருவர் இருவர் முயற்சியால் இது முடியும் காரியமா?

சமுதாயம் முயல வேண்டும்! சமுதாயத்தை நடத்திச் செல்லும் தலைவர்கள் முயற்சியெடுக்க வேண்டும். அப்போது இது முடியும்—திண்ணமாக முடிந்து விடும்! தலைவர்கள் நினைந்து—பலகால் ஆராய்ந்து — பணியாக்க முனைந்தால் — முடிந்தே விடும்! ஒரு காலத்தில் மனித இனமும் இந்தப் புல்லைப் போலவே—ஏற்றத் தாழ்வில்லாமல் இருக் கத்தான் போகிறது. அதை முன்னாகவே சில தீர்க்க தரிசிகள் கனாக் கண்டு கூறி வருகிறார்கள். பணியாள் கத்தரிக்கோலுடன் வந்து புற்களைச் சமமாக ஆக்கு வதைப்போல, ஒரு காலத்தில் அதற்கேற்ற பணி யாளர் பொருளாதார—சட்டக் — கத்தரிக்கோலைக் கொண்டு சமமாக ஆக்குவார்கள்; ஆக்க வேண் டும்! இல்லையேல் பெரும் புரட்சிகள் தோன்றி மனித இனத்துக்கே இடர்களைத் தோற்றுவிக்கும்! அதுவரையிலும் முடியாமலேயே இருந்தால் அப் புரட்சியாவது முடித்து விடும். அந்த நிலை தோன்று வது எப்போது? எத்தனை நூற்றாண்டுகட்குப் பிறகு? இப்போது இன்னலுறும் ஏழைகளைக் கவ னிப்பார் யார்? இரக்கமுள்ள சிலர் எண்ணி எண்ணி

ஒடிந்த மனத்தோடு உலவ வேண்டும் போலும்! என்று பலவாறு சிந்தனைக் கடலுள் சிக்கிக் கரை காணுது அலைந்து கொண்டிருந்தது என் உள்ளம்.

கடலருகே பரதவர் குடிசைகள் இருந்தன; அக்குடிசைகளின் முற்றங்களில் சிறு சிறு தோணிகளும், வலைகளும் காணப்பட்டன. இளஞ்சிறுவர்கள் அச்சமென்பதே இல்லாமல் மோதிவரும் அலைகள் அருகிலும், வீடுகளுக்குமாக ஓடித் திரிந்து விளையாடிக்கொண்டிருந்தனர். வெளியிற் சென்றிருந்த பரதவப் பெண்கள் மூட்டை, முடிச்சு, கட்டுகளுடன் வீடு திரும்பிக்கொண்டிருந்தனர். தாயாரைக்கண்ட அச்சிறுவர்கள் எதிராக ஓடித் தழுவிக்கொண்டனர்; தமக்கு வாங்கி வரப்பட்ட தின்பண்டங்களை மகிழ்ச்சியாகப் பெற்றுத் திரும்பவும் ஓடத் தலைப்பட்டனர்.

அப்போதுதான் நான் வெகுதூரம் நடந்துவந்துவிட்டிருப்பது நினைவுக்கு வந்தது. அவர்கள் சேரியை அடுத்த பாறைகளில் காலையிலிருந்து மீன் உலர்த்திப் பொழுதாகி விட்டதால் வீட்டுக்குப்போக அதை வாரிக்கொண்டிருந்தனர்; அதன் நாற்றம் என்னை மேலும் நடக்க முடியாதபடிச் செய்துவிட்டது. அத்துடன் நான் திரும்பி நடக்கத் தொடங்கினேன்.

பூங்காவில் பலர் நண்பர்களோடு அன்பாகப் பேசிக் கொண்டிருந்தனர்; சிலர் தம் மனைவியோடு வந்து கடல் காற்று வாங்கிக் கொண்டிருந்தனர். ஒரு குடும்பம் தன் சிறுவர்களையும் உடனழைத்துக்

கொண்டு வந்திருந்தது; சிறுவர்களால் அமைதியாக ஒரு இடத்தில் இருக்க முடியவில்லை; அங்குமிங்கும் ஓடுவதும் பெற்றோரிடம் வருவதுமாக ஆடிக்கொண்டிருந்தனர். பெற்றோர்கள் எவ்வளவு அடக்கியும் அச்சிறுவர்கள் அடங்கவே இல்லை. அத் தாய் சிறுவர்களில் இருவரைப் பிடித்து ஆளுக்கு இரண்டிரண்டு அடி கொடுத்தாள். அகப்படாத பெரிய பையனும் தொலைவில் சென்று அமர்ந்து கொண்டான். அடியும் வசவும் நடப்பதைப் பலர் திரும்பிப் பார்த்தனர். அதனால் அந்தத் தாய்க்குப் பெரிதும் அவமானமாயிருந்தது போலும்! சிறுவர்களைக் கோபத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். இனிமேல் இவ்வாறெல்லாம் நடக்க மாட்டோம் அம்மா! என்று மன்னிப்புக் கேட்பதுபோலப் பரிதாபமாகப் பார்த்தார்கள் அடிவாங்கிய சிறுவர்கள்.

இன்னும் சிறிது தூரம் நடந்தேன். அங்கு ஒரே குழந்தையுடன் ஒரு கணவனும் மனைவியும் அமர்ந்திருந்தனர். குழந்தையின் கையில் ஒரு ஆப்பிள் பழமிருந்தது. அவர்களையடுத்து இன்னொரு குடும்பம்; அவர்களிடமும் மூன்று வயதுச் சிறுவன் உடனிருந்தான். அச்சிறுவன் பக்கத்திலிருந்த குழந்தை கையிலுள்ள ஆப்பிள் பழத்தைக் காட்டித் தனக்கும் வேண்டுமென்று அழுதான். ஆனால், அத்தாய் அடிக்கவில்லை; அன்பாகச் சமாதானம் சொன்னாள்; அப் பையன் கேட்காமல் இன்னும் உரக்க அழத் தொடங்கினான். பையனைத் தூக்கிக்கொண்டு அவர்கள் தொலைவாகச் சென்று அமர்ந்தார்கள்.

ஓரிடத்தில் அமர்ந்துகொண்டு கடலை நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்தேன் நான். கரிய புகையைக் கக்கிக் கொண்டு துறைமுகத்தை நோக்கி ஒரு கப்பல் வந்து கொண்டிருந்தது. அங்குமிங்குமாகச் சில படகுகள் தென்பட்டன. சில கப்பல்களும் தொலைவிற் காணப்பட்டன. நீலக்கடல் அலைகளை வீசிக்கொண்டிருந்தது. சூரியன் அடிவானத்தை அடைந்து விட்டான். அப்பொழுது கம்பரும், இளங்கோவும் என் நினைவுக்கு வந்தனர். இவ்வாறு கடற்கரையில் அமர்ந்துகொண்டு அப்புலவர்கள் எத்தனை முறை இக்காட்சியைக் கண்டார்களோ? என்று எண்ணினேன். கல்லாதவனுக்குங் கற்பனை உண்டாக்கும் இக்காட்சி அப்புலவர்கள் சிந்தனைக்குப் புது விருந்தளிப்பது இயற்கைதானேயென்று எண்ணிக்கொண்டேன்.

இக்காட்சியைக் கீழ்க்கடலில்—முருகனைக்கண்ட நக்கீரரும், இயற்கைப் பொருளாகக் கண்ட இளங்கோவும் என் மனத்திரையில் மீண்டும் தோன்றி மறைந்தனர். ஆனால் அக்காட்சியை விட்டு வேறு பக்கந் திரும்பிய போதும் அது என் மனத்தில் நிலையாக நின்று விட்டிருந்தது. வானொலி இசைபாடுவதை நிறுத்தி விட்டு உலகச் செய்தியைக் கூறத் தொடங்கியது. மேலும் அங்கிருக்க என்னால் முடியவில்லை. பஸ் ஏறி வீட்டுக்குக் கிளம்பினேன்.

பஸ்ஸில் வந்து கொண்டிருக்கும்போது நடேசன் நினைவு வந்தது. நடேசன் என்ன ஆனான்? உண்மையில் வானமுது இறந்துதான் இருப்பாளா? அதை

நடேசன் எப்படிக் கண்டறிந்தான்? என்றெல்லாம் சிந்தித்துக் கொண்டே வீட்டுக்கு வந்தேன். நாற்காலியில் அமர்ந்து தலையைச் சாய்த்துக் கண்ணை மூடிய வண்ணம் நடேசனைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்தேன்.

சாப்பிட்ட பிறகு தூக்கம் வரும் வரையில் என்ன செய்வதென்று ஒன்றுந் தோன்ருது சிலப்பதிகாரத்திற் சிந்தையைச் செலுத்தலாம் என்று அப் புத்தகத்தை எடுத்து வந்து மேசையருகே அமர்ந்தேன். சிந்தனை அதிற் செல்லவில்லை. ஏடுகளைப் புரட்டிக் கொண்டிருந்தது என் கை. என் சிந்தனையில் நடேசன், வானமுது, சிற்றரசு இவர்கள் தோன்றிய வண்ணமிருந்தனர். மீண்டும் புத்தகத்தைப் புரட்டினேன்; புத்தகத்தை மூடி விட்டு நாற்காலியிற் சாய்ந்து கொண்டு இளங்கோவின் இசையை எண்ணத் தொடங்கினேன்:

சிலப்பதிகாரத்தில் கூறப்படுங் கதை நடந்ததோ, இல்லையோ? அது ஒரு புறமிருந்தாலும், இளங்கோவடிகள் தமிழ்நாடு எப்படி இருக்க வேண்டுமென்று எண்ணிய எண்ணம் அதில் எதிரொலிக்கிறது. சேர, சோழ, பாண்டியர்க்குள் சேராப் பகையிருந்தாலும், தமிழகத்து எதிரிகளை முறியடிக்க ஒன்ருகச் சேர்ந்தனர். தமிழகத்தின் வடக்கே இமயம் வரைப் படையெடுத்துச் சென்று வெற்றியடைந்தனர். இமயத்தில் தமிழ்க்கொடி நாட்டித் திரும்பினர். தமிழகம் ஒற்றுமையின்மையால் — உட்பகையால் தாழ்வடையும், தமிழரினம் ஒன்றுபட வேண்டும்;

போருக்கு மட்டுமல்ல—எல்லாவற்றுக்குமே; ஒன்று பட்ட சமுதாயமாக தமிழினம் வாழ வேண்டும்; தமிழ்மொழி உயர வேண்டும்; இது அவர் அன்று கண்ட—இருக்க வேண்டுமென்று எண்ணிய—அவா வாகும். இது இரண்டாயிரமாண்டுகட்கு முற்பட்ட இளங்கோவின் கனு!

கட்சியில் ஒரு காலத்தில் இருந்திருந்தாலும் பிறகு எல்லாவற்றிலும் துறவுகொண்டு தமிழர் ஒற்றுமைக்காக ஒரு பெருந்தகை தன் உடற்பொரு ளாவி மூன்றையும் உதவித் தொண்டாற்றி வருகின் ருர். இன்று அவர்தம் அருங்குணங்கள், கொள்கை கள் இவை: மண்ணுலகு மாசின்றி வாழ வேண்டும். உலகம் ஒரு குடும்பமாக வாழ வேண்டும். ஒவ்வொரு வரும் வாழ்ந்தால்தான் உலகம் வாழ முடியும்.

செம்மையுற்ற மொழி தமிழ். ஆயினும் காலத் துக்கு ஏற்ப எல்லாச் செல்வமும் அதில் வந்து குவிதல் வேண்டும். தமிழ்மொழிக்கு எல்லாவிடத் திலும் ஏற்றமளிக்கப்பட வேண்டும்.

சமூக ஒற்றுமைக்குப் பகையாக நிற்பது எதுவோ. அதையெல்லாம் அகற்ற வேண்டும் என்று அல்லும் பகலும் பேசியும், எழுதியும், நடந்தும் வரு கிருர் அவர்.

பெண்ணின் பெருமையைப் பேசி, சமரச சன் மார்க்கத்தை மதத் துறையிற்கூறி, தொழிலாளருக் குத் துணை புரிந்து வழுக்கிலாது வாழ்ந்து வருகிருர் —தமிழ்ப் பெரியார் என்று பலராலும் பாராட்டிப் புகழும் திரு. வி. க. அவர்கள்.

திரு. வி. க. வின் பெயரை எண்ணற்ற இடங்கள் பெறுகின்றன. அவர் புகழை அளவற்ற மக்கள் அளவளாவுகிறார்கள். மாறுபட்ட கருத்துடையவர் இருவருக்கும் அம் மகானிடம் அன்புண்டு. எல்லோருக்கும் அவர், 'ஒன்றுபட்ட தமிழினத்தை உருவாக்குங்கள்!' என்றுதான் இயம்பி வந்தார்.

திரு. வி. க. வின் திருந்திய உரையை—உபதேசத்தை—ஏற்ற செவிகள் எண்ணற்றவை.

இரண்டாயிரமாண்டுகளாக இளங்கோவின் கனவைப் படித்த தமிழகம் அதை ஏற்றதா? இல்லை, எண்ணித்தான் பார்த்ததா? அத்தகைய செவிடராகிவிட்ட தமிழர் காதில் திரு. வி. க. வின் உபதேசம் பயனளிக்குமா? இளங்கோவின் எழுத்துப் பயனளித்ததா—இது பயனளிக்க?

'ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு, ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்குந் தாழ்வு' என்னும் பாரதியார் பாட்டு என் நினைவுக்கு வந்தது. திரும்பத் திரும்ப அந்த அடியை மட்டும் என் வாய் முணுமுணுத்தது. கடிகாரம் ஒன்பதடித்தது. பிறகு சிறிது நேரம் வாசலில் உலாவிக் கொண்டிருந்தேன். மாடியிற் சென்று உலாவலாம் என்று மேலே சென்றேன்.

'கண்ணற்ற வாழ்க்கை திங்களில்லாத வானத்தைப் போன்றது' என்று புலவர்கள் கூறியுள்ளார்கள். அதைப் படித்தபோது அதன் பொருள் பூரணமாக விளங்கியதா இல்லையா என்பது ஞாபகமில்லை; என்க்கு இரு கண்களும் நன்றாக இருப்பதால் கண்

ணற்ற வாழ்வை அனுபவித்தறிய முடியவில்லை. ஆனாலும் சந்திரனில்லாத இந்த வானம் அந்த அடியின் பொருளை நன்ருக விளக்குகிறது. கண்ணற்ற வாழ்வைக் கண்ணுடையவர்களால் கண்டறிய முடியாது. அவர்களும் அறியும்படி புலவர் ஒரு அழகான உவமையை அதில் வைத்து அறியும்படிச் செய்திருக்கிருர். கண்ணிருந்தும் எந்தப் பொருளும் இருட்டில் காணப்படவில்லை. திங்கள் தன் குளிர்ந்த நிலவைப் பொழியாததுதான் காரணம்; திங்களின் துணையால் நாம் இராக் காலத்தில் எல்லாப் பொருள்களையுங் கண்டு மகிழ்கிருேம்; அது இல்லாததால் இப்போது எதையுங் காண முடியவில்லை. மக்கள் விஞ்ஞானத்தின் துணையால் மின்சார விளக்குகளைத் தோற்றுவித்துள்ளனர். எத்தனை மின்சார விளக்குகள் சேர்ந்தால் ஒரு இயற்கைச் சந்திரனுக்கு ஈடாக முடியும் என்று எண்ணிக் கொண்டே சிறிது நேரம் உலவினேன்.

காலை ஏழு மணிக்கு நண்பர் முருகப்பர் வரப் போகிருர்; அதற்கு முன்பாகவே புகை வண்டி நிலையத்துக்குப் போக வேண்டும். ஐந்து மணிக்கே எழுந்து கொண்டால்தான் காலைக் கடமைகளை முடித்துக்கொண்டு போக முடியும் என்று எண்ணிக் கொண்டு படுக்கைக்குச் சென்றேன்.

வாழ்க்கையில் முறிவுபட்டவர்கள் பெரும்பாலும் நம் நாட்டில் தற்கொலை செய்துகொள்கிருர்கள்; அதிலும், பெண்கள் மிகமிக அதிகம். வாழ்வு முறிவது பலருக்கும்—எல்லா நாட்டாருக்கும் பொது

வானதே. ஆனால் தற்கொலை நடப்பது நம் நாட்டில் தான் அதிகம். இதிலிருந்தே நம் நாட்டவரின் தெளிவின்மை நன்கு புலப்படுகிறது. முற்காலத்தில் நம் முன்னோர்கள் வாழ்க்கையில் முறிவு ஏற்பட்டால், குடும்பப் பற்றைத் துறந்து பொது வாழ்க்கையில் ஈடுபட்டுத் தொண்டு செய்து வந்தார்கள். அதனால் அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் பயன் ஏற்பட்டது. தற்கொலையால் யாருக்கும், எந்த நன்மையும் ஏற் படாததோடு நாட்டின் அறியாமையை வெளிப் படுத்துகிறது; கொலைக் கணக்கில் எண்ணிக்கை ஏறு கிறது.

நடேசன் கூறியதாகப் பலராமன் சொன்னதைப் பார்த்தால், வானமுது இறந்திருக்க வேண்டும். பண் பாடு மிக்கக் குடும்பத்தில் பிறந்து—நல்ல பழக்க வழக்கங்களில் வாழ்ந்து—குடிக்கே ஒரு குரு மணி யாய்த் திகழ்ந்த வானமுது — முரட்டுப் பயலால் பலி யானாள்! அப்பப்ப—நினைக்கவும் கொடுமையாயிருக் கிறது!

காரிகையர் திலகமாயிருந்த அவள்—காமப் பேயின் கடும் பசிக்கு இரையானாள்! வனிதா மணியாயிருந்த வானமுது—வஞ்சிக்கப்பட்டு இறந் தாள்! அநியாயம் அவள் சாவு!

நடேசன் ஏற்கெனவே ஒடிந்த மனத்தோடு உலவி வந்தான். என்ன முயற்சி செய்தும் நடேசன் வாழ்வைத் தெரிந்துகொள்ள முடியாது போய் விட்டது. இனி யாரைக்கொண்டு நடேசனைத் தேடுவது? இனி நாம் எவ்வாறு முயல்வது? நடேசன்

வாழ்வைத் தெரிந்துகொள்ள முடியாமலே போய் விட்டதே என்று எண்ணிக்கொண்டிருந்தேன்.

எந்நேரம் விழித்துக்கொண்டிருந்தேன், எப் போது தூங்கினேன் என்பது நினைவில்லை; ஆறு மணிக்கு விழித்துக்கொண்டு நேராகப் புகை வண்டி நிலயத்துக்குச் சென்றேன். நான் போனதற்கும் வண்டி வந்ததற்கும் சரியாக இருந்தது. பிரயாணி கள் ஒவ்வொருவராக வெளியே வந்து கொண்டிருந் தனர். மந்தையில் விட்ட கன்றுபோல நான் மக்கள் திரளுக்குள் நண்பனைத் துருவினேன்.

வழிமேல் விழி வைத்து நண்பனைப் பார்த்துக் கொண்டிருந்தேன்; காணப்பட்டார் நண்பர்; இருவர் கரங்களும் குவிந்தன. ஒருவரையொருவர் தழுவிக் கொண்டோம். ஒரு கூலியைக் கூப்பிட்டுப் பெட்டி, படுக்கைகளை எடுத்து வரச்செய்து நாங்கள் வெளியே நடந்தோம்.

வாடகைக்கு டாக்ஸியை எடுத்துக்கொண்டு விரைவாக வீடுபோய்ச் சேர்ந்தோம். முதலில் நலத் தைப்பற்றி விசாரித்துக் கொண்டோம்; பிறகு குடும்பம், குழந்தைகள், ஊர், நண்பர்கள், நாடு, உலகம் என்று போய்க் கொண்டிருந்தது எங்கள் பேச்சு. குளித்து விட்டு வேறு உடை மாற்றிக் கொண்டு சிற்றுண்டியுண்ணத் தொடங்கினோம். முருகப்பர் முகத்தில் மகிழ்ச்சி இல்லை; பிரயாணக் களைப்பு என்று முதலில் நான் எண்ணினேன்; பிறகு அது பேச்சிலுங் காணப்பட்டது.

'எங்கள் மாநாட்டுக்குப் போய் வந்துவிட்டுப் பிறகு ஆராய்ச்சிப் படலத்தில் ஆழ்ந்து விடலாம்' என்றார் நண்பர்.

மாநாடு இன்றேயா?

'ஆமாம்! இன்று பகல் பதினொரு மணிக்குத் தொடங்கி இன்றெல்லாம் நடைபெறும்; முடிய வில்லையென்றால் நாளைக் காலையும் நடக்கும்; இன்று நீரும் வருகிறீரா?' என்றார் நண்பர்.

எனக்கு ஒரு வேலையுமில்லை; நானும் வரு கிறேன் என்று கூறினேன்.

'முல்லை இல்லாததுதான் எனக்கு ஏதோபோல இருக்கிறது! நான், முல்லை, அருள் இருவரையும் பார்த்து வெகுநாளாயிற்று. நான் போவதற்குள் வரமாட்டார்கள் என்கிறாய்! அம்மா தொந்தரவு இன்றிச் சுகமாக இருப்பது மிக்க மகிழ்ச்சி; மணி பத்தரைக்குமேல் ஆகிறது; மாநாட்டுக்குக் காலம் நெருங்குகிறது; நாம் போய் வரலாமா?' என்றார் நண்பர்.

சரியென்று நானும் புறப்பட்டேன்; இருவரும் மாநாட்டுக்குச் சென்று முடித்துக்கொண்டு இரவு எட்டு மணிக்குத் திரும்பினோம். சாப்பாடு யாவும் முடிந்து விட்டதால் நேராக வீட்டிற்சென்று படுத்து விடுவோம்; அதிக நேரம் இன்று கண் விழிக்கக் கூடாது; உங்களுக்குப் பிரயாணத் தொல்லை! என் றேன் நான்.

இது என்ன புது வழக்கம்! எந்தப் பிரயாணத்திலாவது வந்த முதல் நாள் இரவு தூங்கியதுண்டா என்று நண்பரும், நானும் பேசிக்கொண்டே வீடு வந்து சேர்ந்தோம். நண்பரின் வாழ்க்கை மறைவுகளைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆவல்; நண்பருக்கோ விரைவாகச் சொல்லாமல் நீட்டுவதில் ஆவல்; இதில் வெல்வது யார், தோற்பது யார் என்று சிறிது நேரம் கழிந்தது. மேலும் என்னால் பொறுமையைக் கையாள முடியவில்லை.

முருகு! உன் இளமை வாழ்விலிருந்து உண்மையாக எல்லா நிகழ்ச்சிகளையும் மறைக்காமல் கூற வேண்டும்; அதைத் தெரிந்துகொள்ளச் சரியான சந்தர்ப்பம் வராததால் இது வரை நீட்டித்துக் கொண்டே வந்து விட்டோம். மேலும் தெரிந்த சிலவும் நம்ப முடியாதவைபோல நான் உணருகிறேன். ஆதலால் உன் இளமை முதல் உண்மையான நிகழ்ச்சிகளை நீயே கூற வேண்டும் என்று ஆரம்பித்தேன் நான்.

வேலைக்காரன் தபாற்கட்டைக் கொண்டு வந்து எங்கள் எதிரில் மேசை மீது வைத்துச் சென்றான்.

'கடிதங்களை வந்த உடனே கவனிப்பதில்லையா?'

தினந்தோறும் கடிதம் வந்த உடனே பார்ப்பதுதான் வழக்கம்; இன்று—இதுபோன்ற வேலையுள்ள நாட்களில் மட்டும்—ஓய்வான நேரத்தில் பார்ப்பதும் உண்டு.

'அது கெட்ட பழக்கமாயிற்றே! உடனே பதில் எழுத வேண்டிய கடிதங்களும் இருக்குமல்லவா? எவ்வளவு வேலையிருந்தாலும் கடிதங்களை வந்த உடனே கவனிப்பது நல்லது. இப்போதாவது அதை முடித்து விடு' என்றார் முருகு.

நண்பரின் நல்லுரையைத் தட்டமுடியாது வேகமாகக் கவனிக்கத் தொடங்கினேன். இப்போது நான் கவனித்ததெல்லாம் யாரிடமிருந்து வந்தது என்பதைத்தான். ஒரு கட்டும் உடன் இருந்தது. அது புத்தகக் கட்டுபோலத் தெரிந்தது. அதைப் பிரிக்கவும் செய்யாது அப்படியே ஒதுக்கி விட்டேன்.

'என்ன அது? ஏதாவது புத்தகத்துக்கு எழுதியிருந்தாயா?' என்றார் நண்பர்.

எழுத்தாளரிலும் சிலர் எனக்கு நண்பர்களுண்டு. அவர்கள் புதிதாக எழுதும் புத்தகங்களில் ஒன்றை எனக்கு அனுப்பி வைப்பார்கள். இதையும் அவர்களில் யாராவது அனுப்பியிருப்பார்கள் என்று கூறிக் கொண்டே மற்ற கடிதங்களைக் கவனித்துக்கொண்டிருந்தேன். யாவும் அலுவலகக் கடிதங்களாகவே இருந்தன. எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டு மீண்டும் நான் பேசத் தொடங்கினேன்.

உன் வாழ்க்கை வேறு கோணத்துக்கு மாறி இருக்கிறது; இம்மாற்றம் எங்களுக்கு மகிழ்ச்சியே! இதை என்றிலிருந்தோ நான் கூறி வருகிறேன். ஆதியிலிருந்து என் பேச்சை அசட்டை செய்து

வந்தாய்! அதன் உண்மையை இப்போதாவது உணர்ந்திருப்பாய் என்று எண்ணுகிறேன்; தொண்டு செய்யப் போகிறேன் என்றெல்லாங் கூறுவாய்; செய்ய வேண்டியதுதான். திருமணத்தை—வாழ்க்கையை—விட்டா தொண்டு செய்ய வேண்டும்? உண்மைத் தொண்டுக்குத் திருமணம் தடையாகாது என்று உனக்குப் பலமுறை நான் சொல்லி இருக்கிறேன். இப்போதுதான் நீ என் பக்கந் திரும்பி இருக்கிருய்; அதற்காக நான் மிக மிக மகிழ்கின்றேன். திருமணம் செய்துகொண்டு—வாழ்க்கையை நன்ருக நுகர்ந்துகொண்டே — தமிழகத்தின் ஒற்றுமைக்கு, கல்விப் பெருக்கத்துக்கு இன்னும் எல்லாவற்றுக்குமே நீ தொண்டு செய்! உண்மைத் தொண்டுக்குத் திருமணமும், நல்வாழ்வும் தீமை செய்யாது என்பது என் நம்பிக்கை. அதிருக்கட்டும்; உன் வரலாற்றைச் சொல்லப்பா! என்றேன் நான்.

# முருகப்பர்

நண்பரே! என்னை மன்னிக்க வேண்டும்; நெஞ்சறிந்த செய்தியை—அதிலும் நண்பர்களிடத்திலும்—மறைத்து வந்தேன். எல்லாவற்றுக்குங் காரணம் என் வறுமையென்றுதான் கூற வேண்டும்; என் வாழ்க்கையின் பெரும்பகுதி வறுமையிலேயே கழிந்தது; அதை மற்றவர்க்குக் கூறத் தயங்கி நான் எதையாவது எண்ணத்துக்குத் தோன்றுவதைச் சொல்லுவது வழக்கம். பள்ளி வாழ்க்கையிலிருந்து இன்றுவரை என் குடும்பச் செய்திகளை என் நண்பர்களிடமும் நான் சொன்னதில்லை. 'பணக்காரச் சிறுவருடனெல்லாம் பழகுகின்றோம்; நம் வறுமை அவர்களுக்குத் தெரிந்துவிட்டால், தோழமைக்குத் தீமை வருமோ?' என்று நான் அப்போது பயப்படுவது வழக்கம்; அதனல் என்னைப் பற்றிய செய்தி எதையும் யாருக்கும் சொல்வதில்லை.

'இவையெல்லாம் பழம்பாட்டுதானே! உன் வரலாற்றைச் சொல்லாமல்!........'

சொல்லுகிறேன்; சொல்லவே வந்திருக்கிறேன்; இதற்குள் நீ அவசரப்படுகிருயே என்று நண்பரைச் சமாதானப் படுத்தி விட்டு என் வரலாற்றைக் கூறத் தொடங்கினேன்.

வடார்க்காடு மாவட்டத்தில், அரக்கோணம் பக்கத்தில், ஏதோ ஒரு கிராமம் நான் பிறந்த இடம்; அதுதான் எங்கள் சொந்த ஊர்........

'ஏதோ ஒரு ஊர் என்ருல்........உறுதியாக உனக்குத் தெரியாதா? அல்லது இப்போதும் மறைக்க எண்ணுகிருயா?'

அப்படியொன்றுமில்லே; உண்மையில் எனக்குத் தெரியாது. நான் சிறுவனுக இருக்கும்போதே என் தந்தை என்னையழைத்துக் கொண்டு சென்னே வந்து விட்டார். சென்னேயிலேயே இதுவரை இருந்து விட்டதால் ஊர்ப் பெயர் மறந்துவிட்டது. நான் சிறுவனுக இருந்தபோது, என் தாய் திடீரென்று இறந்துவிட்டார்கள். பிறகு என் தந்தை அந்தக் கிராமத்தில் இருக்க விரும்பாது வேறு ஊருக்குக் கிளம்பி விட்டாராம். சொத்து அதிகமில்லே. இருந்த சிறு வீட்டையும் பிறகு விற்றுக்கொண்டு வந்து விட்டார்; கிராமத் தொடர்பே இல்லாமல் விட்டுப் போய் விட்டதால், எல்லாம் மறந்து விடுவது இயல்பு தானே?

என் அம்மான் கிராமமும் நினைவில்லை; நான் அம்மான் வீட்டில் சில நாள் இருந்ததாக ஞாபகமிருக்கிறது; என்ன காரணத்தாலோ என் தந்தை என்னை அங்கிருந்து அழைத்துக்கொண்டு வந்துவிட்டார். அந்தக் கிராமத்தில் அன் அம்மான்தான் என்னைப் பள்ளியில் முதல் முதல் சேர்த்தார். சில மாதங்களுக்குப் பின் தந்தையோடு நானும் சென்னை வந்துவிட்டேன். இன்றுவரை நான் என் சொந்த கிராமத்துக்கோ, அல்லது அம்மான் வீட்டுக்கோ போனதே இல்லை. எத்தனையோ ஆண்டுகள் அகன்றுவிட்டதால் இப்போது அந்தக் கிராமங்களைப் பற்றியோ, உறவினரைப் பற்றியோ எனக்கு ஞாபகத்துக் கூடக் கொண்டு வர முடியவில்லை.

எத்தனையோ பேர் மறுமணம் செய்துகொள்ளச் சொல்லி வற்புறுத்தியும் என் தந்தை மறுத்துவிட்டாராம்; என்னுடன் அவர் எங்கெங்கோ சுற்றிச் சென்னை வந்து சேர்ந்தார். சிலநாள் வரை என் தந்தை, அம்மானுக்குக் கடிதங்களும் எழுதிக்கொண்டிருந்ததாக ஞாபகம். அதன் பிறகு அதையும் நிறுத்தி விட்டார்........

'உங்கப்பாவுக்கும் அம்மாளுக்கும் ஏதாவது குடும்பச் சச்சரவு இருந்ததோ என்னவோ?' என்றார் கண்ணப்பர்.

அப்போது எனக்கு எதுவும் தெரியாது. நான் சிறுவன். எப்படியோ சென்னை வந்து சேர்ந்தோம்; வேலையில்லாமல் பல நாளாய் என் தந்தை வருந்திய

தாக ஞாபகம். என்னைப் படிக்க வைக்க அவர் மிகவும் ஆசைப்பட்டார்; தன் வறுமை எப்படி இருந்தாலும் என்னை ஒரு ஆரம்பப் பள்ளியில் சேர்த்தார்; நாங்கள் நெசவாளர்களாம்; இதை மட்டும் என் தந்தை அவ்வப்போது கூறியிருக்கிறார். துணிகளை விற்க அவ்வப்போது என் தந்தை சென்னைக்கு வந்து போவாராம்; அந்தப் பழக்கத்தில் சென்னைத் துணி வியாபாரிகளில் சிலரை அவர் தெரிந்து கொண்டிருந்தார். வியாபாரிகளுக்கு என் தந்தையிடம் நல்ல நம்பிக்கை இருந்தது.

அந்த வியாபாரிகளிடம் காலையில் சில மடிகளைக் கடனாகப் பெற்றுக்கொள்வார் என் தந்தை; தெருத் தெருவாகத் தலையில் சுமந்துகொண்டே விற்பார். விற்காமல் நிற்பதை மாலையில் திருப்பிக் கொடுத்துப் பாக்கியைத் தீர்த்து விடுவார்; அன்றாடம் இப்படியே செய்து வந்தார்; இதுதான் என் தந்தையின் தொழில்; இறுதி வரையிலும் அதையேதான் செய்து வந்தார்.

சென்னைத் தெருக்களில் தலைமேல் சுமந்து விற்பதென்பது அவ்வளவு சுலபமானதாக எண்ண முடியாது! போலீஸ்காரர்கள் தடியாலடித்துத் துரத்துவார்கள்; ஒரு கண் துணி வாங்குபவரிடமும், மற்றொரு கண் போலீஸ்காரர்மேலுந்தான் இருக்கும். இப்படியே அவர் காலமெல்லாங் கடினமாக உழைத்து வந்தார். நடுவெய்யலில், கனம் கழுத்தையிறுக்கத் திரிய வேண்டும்; போலீஸ்காரருக்கும், ஏமாற்றுவோருக்கும்போக எஞ்சியது எங்கள் வருமானம்.

அதைக் கொண்டு எங்கள் வாழ்க்கை நடந்து கொண்டிருந்தது.

எங்களுக்கு அப்போது சென்னையில் சொந்த வீடு கிடையாதல்லவா? மரத்தடியிலும், மாடிப்படிகளின் கீழுமாகக் கழித்த இரவுகள் எத்தனையோ! பூங்காக்களிலும், பாதையோரங்களிலும் கழித்த இரவுகள் எண்ணற்றவை. ஓர் இரவு சர். இராமசாமி சத்திரத்தில் படுக்கச் சென்றோம்; நேரமாகி விட்டதால், கதவு சாத்தப்பட்டுவிட்டிருந்தது. திரும்பி எங்காவது பாதையோரங்களில் படுக்கலாம் என்று நடந்து கொண்டிருந்தோம். இரவில் காவல் காக்கும் போலீஸ்காரர்கள் எங்களைத் திருடர்கள் என்று ஐயப்பட்டு ரிமாண்டுக்கு அழைத்துச் சென்று நிறுத்தினார்கள். நான் பயத்தினால் நடுங்கத் தொடங்கினேன். பிறகு ஒரு போலீஸ்காரன் என் தந்தையை நன்றாக அடித்து விட்டான். எங்கே திருடுவதற்குத் திட்டமிடுகிறாய்? என்று அடித்து மிரட்டினான். உங்கொப்பனுக்கு நீயும் துணைக்கு வந்தாயடா? என்று என்னைப் பார்த்து அவன் கேட்டபோது, நான் பலமாக அழ ஆரம்பித்து விட்டேன். அன்று இரவு ரிமாண்டிலேயே இருந்தோம். காலையிலும் நம்பகமான யாராவது சொன்னால்தான் விடமுடியும் என்றார்கள். பிறகு ஒரு துணிக்கடைக்காரரை வரவழைத்து அவரைச் சொல்ல வைத்தார் என் தந்தை. அவர் எங்கள் நிலையைக் கண்டு இரங்கி, உறுதிகூறி வெளியில் விடுவித்ததோடு அவர் தம் வீட்டில் ஒரு அறையையும் எங்களுக்குக் கொடுத்தார்.

அன்றிலிருந்து அவர் வீட்டிலேயே இருந்து வந்தோம். அவரும், அவர் மனைவி முதலிய எல்லோரும் மிகவும் நல்லவர்கள். எங்களிடம் அன்பு காட்டுவார்கள். தாயில்லாப் பிள்ளையென்று என்னிடம் அதிகம் கருணை காட்டுவாள் அந்தம்மாள். சுமாரான வருமானம் வரும் மாதங்களில் என் தந்தை ஒரு தொகையை வாடகைக்குக் கொடுத்து விடுவார். பிறகு என் தந்தைக்குச் சுமாராக வியாபாரம் நடந்து வந்தது. காரணம், பலர் அறிமுகமானதுதான்! இப்படியே பத்தாண்டுகள் கழிந்து விட்டன; நான் நன்ருகப் படித்து வந்தேன். என் தந்தை அதைக் கண்டு ஆனந்தப்படுவார், பட்டு என்ன பயன்?

ஏழையின் மகன் எவ்வளவு நன்ருகப் படித்துத்தான் என்ன பயன்? என் தந்தை ஒரு நாள் திடீரென்று நோயாகப் படுத்து விட்டார். படுக்கையாகப் படுத்தவர் படுத்தவர்தான் — படுத்தே விட்டார்! நான் அப்போது பத்தாவது படித்துக் கொண்டிருந்தேன். படிப்பு முடியவே இல்லை; என் தந்தை உலக வாழ்வை முடித்துக்கொண்டார். என் தந்தை இறக்கும் வரையிலும் எனக்குக் குடும்பத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாது. ஏழையாக இருந்தாலும் என் தந்தை என்னைச் செல்லமாக வளர்த்து விட்டார். ‘நடுக்கடலில் துடுப்பிழந்தவனைப்போல’ ஆகி விட்டேன் நான்.

என் தந்தை இறந்தபோது எனக்கிருந்த ஆஸ்தி இருநூறு ரூபாய்; அதிலும் முக்கால் பங்கு தந்தையின் இறப்புக் கடன்களுக்குச் செலவாகி விட்டது.

ஐம்பது ரூபாய்தான் என்னிடம் எஞ்சி நின்ற தொகை. என்ன செய்வதென்றே தெரியாது, அழுகையும் அல்லலுமாக ஒரு வாரங் கழிந்தது. பணக்காரர் ஒருவர் இறந்திருந்தால், பலர் வந்து ஆறுதல், தேறுதல் எல்லாங் கூறியிருப்பர்; ஏழை இறந்தான்; ஏழையின் மகனுக்கு?........நாங்களிருந்த அந்த வீட்டுக்காரரும், அந்தம்மாவும் என் நிலைக்கு வருத்தப்பட்டார்கள். அதற்குமேல் அவர்கள் மட்டும் என்ன செய்ய முடியும்? என் தந்தையை மீட்டுத்தர முடியுமா? இல்லை, என்னைப் பெரிய பணக்காரனுக்க முடியுமா? வருத்தப்பட்டார்கள்; அந்த நேரத்தில் அது எனக்கு எவ்வளவோ ஆறுதலாக இருந்தது. நெருங்கி என்னிடம் பழகும் உறவினர் யாருமில்லா விட்டாலும், என் தந்தைக்கு மூட்டை சுமக்கும் கூலியாளாக ஒரு கிழவர் இருந்தார். வயதாகி விட்ட தால் இறுதிக் காலத்தில் என் தந்தை மூட்டை சுமப்பதை நிறுத்திக்கொண்டார். அதற்காக ஒரு கிழவரை உடன் வைத்திருந்தார். ஏழைக்கேற்ற ஓர் ஏழைக் கூலியாள். அந்தக் கிழவர் மிகவும் நல்லவர். தினந்தோறும் எங்கள் வீட்டுக்கு வந்து போவது வழக்கம்; இறக்கும்போது ஒரு மாதமாக என் தந்தை தொழிலுக்குச் செல்லாமையால் அந்தக் கிழவர் வேறு எங்கேயோ வேலைக்குச் சென்று விட்டார்.

ஏழைகளின் துன்பத்துக்கு உண்மையாக உள்ள முருகிக் கண்ணீர் வடிப்பவன் இன்னொரு ஏழையாகத் தானிருக்க முடியும் என்பதை அப்போதுதான் நான் நேரில் அறிந்தேன். அந்தக் கிழவருக்கு இருபது நாட்களுக்குப் பிறகுதான் என் தந்தை இறந்தது

தெரிந்ததாம். செய்து கொண்டிருந்த வேலையை அப்படியே விட்டு விட்டு ஓடி வந்தார். எங்கோ துன்பத்தில் துக்கித்துக் கொண்டிருந்த என்னைத் தேடி வந்து துடியாய்த் துடித்தார்; என் முகத்தைக் கண்ணீரால் கழுவினர்; அவரால் அப்போது ஒன்றும் பேச முடியவில்லை. அன்பின் ஆழ அகலத்தைத் திறந்து காட்டின, அவர் உதிர்த்த சில மணிச் சொற்கள்.

எத்தனையோ நாட்களாக இறுக்கிப் பிடித்த சிறு தொகையை முடிச்சுக்குள்ளிருந்து அவிழ்த்தெடுத்தார்; 'முருகு! இதை உதவியாக வைத்துக்கொள்ளப்பா! என்னைத் தந்தைபோலவே எண்ணி என்னையே தேடி வேலை கொடுத்துக் காப்பாற்றி வந்தார் உன் தந்தை; உங்கப்பா இல்லையென்றால் இந்தப் பட்டணத்தில் நான் என்ன பாடு பட்டிருக்க வேண்டும்—அது ஆண்டவனுக்குத்தான் தெரியும்! இனிமேல் என்னைப்போலவே உன்னையுந் தவிக்கும் படி உங்கப்பா விட்டு விட்டுப் போய் விட்டார். இன்னுங் கொஞ்சம் பணம் வைத்திருந்தேன். அதை எவனே பார்த்துவிட்டிருக்கிறன்! ஒரு நாள் இரவு நான் அயர்ந்து தூங்கி விட்டப்போ எப்படியோ அவிழ்த்துக்கொண்டு போய்விட்டான். அதன் பிறகு இதைச் சேர்த்து வைத்தேன். எவனே பாவிப்பயல் ஏழையின் மடியிலே கைவைத்தான்! அவன் நல்லாயிருக்க மாட்டான்!' என்று கூறிக் கண்ணீரைத் துடைத்து எறிந்தார். அப்போது நான் ஒன்றும் பதில் கூறது அழுது கொண்டிருந்தேன். அவர் மேலுங் கூறினர்:

'முருகு! நீ கவலைப்படாதேப்பா! எல்லோரும் ஒரு நாளைக்குச் சாகப் போகிறவர்தான். சாகாம இங்கேயே யாரும் இருக்கப் போவதில்லை; இதைத் தெரிஞ்சுக்காம ஏமாற்று, திருட்டு, புரட்டு என்று மக்கள் செத்து மடிகிறார்கள். இனிமேல் நாம் ஒன்றாகவே இருப்போம். எப்படியும் எனக்கு வேலை செய்யும் பலம் இருக்கிறது. கிடைக்குங் கூலியை நான் ஒண்டியாகச் சோறு தின்பதை இனி இருவரு மாகச் சேர்ந்து கூழாக் குடித்தால் போச்சு! இனி நீ எங்கும் கவலைப்பட்டுத் திரியாதேப்பா! நீ படித் திருக்கிறாய்; ஏதாவது வேலை கிடைக்கும். அதுவரை நான் கஞ்சியாவது ஊற்றிக் காப்பாற்றுகிறேன்' என்றார்.

அப்படியே ஆகட்டுமென்று கூறி இதை நீரே வைத்துக்கொள்ளுமென்று, அவர் கொடுத்த அந்தத் தொகையைத் திருப்பிக் கொடுத்தேன். அவர் மிகவும் வருத்தப்பட்டார். அவருக்கு எவ்வளவு சொல்லியும், அதைத் திருப்பி வாங்கிக்கொள்ள அவர் இசையவில்லை. அவரை மகிழச் செய்வதற்காக அதை நான் என்னிடமே வைத்துக்கொண்டேன்.

படிப்போ முடியவில்லை; அந்த நிலையில் நான் என்ன வேலை செய்வது? எங்கே போய் யாரிடம், எந்த வேலை, அல்லது உத்தியோகங் கேட்பது? ஒன்றும் புரியாது ஒரு வாரம் துயரப்பட்டேன். அந்த ஒரு வாரத்துக்குள் நான் எண்ணிய எண்ணங்கள் எத்தனை எத்தனை ஆயிரமோ! ஆனால் பலன் ஒன்று மில்லை.

எனக்குத் தெரிந்த நண்பர்களெல்லாம் இளைஞர்கள்; அவர்களால் எனக்கு அப்போது எந்த உதவியும் செய்துவிட முடியாது; முடிந்தால் ஐந்தோ, பத்தோ ரூபாய் உதவலாம். அந்த உதவியைக் கொண்டு நான் எப்படிப் பிழைத்துவிட முடியும்? ஆகையால், எந்த நண்பரிடமும், எந்த உதவியையும் நான் நாடவில்லை. மேலும் உதவியை நாடினால் நட்புக்கு ஊறு வருமல்லவா?

எங்காவது கடைகளில் கணக்கெழுதலாம்; ஆனால் எந்தக் கடையிலும் அப்போது கணக்கெழுதும் வேலை காலியாக இல்லை. நமக்காக வேலை செய்து கொண்டிருப்பவர்களை வீட்டுக்கா அனுப்பி விடுவார்கள்? தெரிந்தவர் கடைகளிலெல்லாம் ஆட்கள் இருக்கிறார்கள். தெரியாதவர் என்னை வைத்துக் கொள்வது சிரமம். வேறு எந்த வேலைக்கும் நான் அப்போது தகுதியாக இல்லை. 'எப்போதோ தொடங்க வேண்டிய வாழ்க்கைத் தொல்லை நமக்கு இளமையிலேயே தொடங்கி விட்டதே!' என்று பெரிதும் வருத்தப்பட்டேன்.

கண்ணை மூடிக்கொண்டு கற்பனையுலகில் என் கவனத்தைச் செலுத்தி விடுவேன். எங்கெங்கோ திரிவேன்; திரிவேன்; திரிவேன்—கற்பனையுலகில் மணிக் கணக்கில் திரிவேன்; ஒரு முடிவுமில்லாமல் உண்மையுலகில் வந்து குதிப்பேன்; ஒன்றுந்தோன்றாது மீண்டும் சிறிது நேரம் வருந்துவேன். எண்ணக் கற்களை எண்ணிலாதடுக்கி ஆகாயக்கோட்டையை அதிக உயரம் எழுப்புவேன். சுற்றுப்புறம் இந்த

உலகுக்கு என்னை இழுத்துவிடும் என் எண்ணக் கோட்டை—வருந்தி எழுப்பப்பட்ட அந்த வளமிக்க கோபுரங்கள்—சுழன்று சுக்கு நூருவதைக் காணும் போது சோர்ந்து போவேன்.

கையிலிருந்த காசு கரையத் தொடங்கியது. சில நாட்களில் ஒரு வேளையுணவு; சில நாட்களில் அந்த ஒரு வேளையிலும் எளிய உணவு; கஞ்சியிற்கடத்திய வேளைகள் பல. அரைப் பட்டினி, முழுப்பட்டினி—எல்லாவற்றையுஞ் சுவைத்தாயிற்று. அந்தக் கிழவர் தினந்தோறும் என்னை வந்து பார்ப்பார்; சாப்பாட்டுக்கு அழைப்பார்; அவருடைய வருமானம் அவருக்கே போதாது. அதில் நாம் பங்குக்குப்போனல்—மறு நாளைக்குக் கிழவரால் எப்படி வேலை செய்ய முடியும்? ஆகையால் நான் எப்படி வற்புறுத்தியும்—என்னிடம் பணமிருக்கிறது, நான் இப்போது தான் சாப்பிட்டேன் என்றெல்லாம் பொய்கூறி அனுப்பி விடுவேன். உடம்பு இளைப்பதைக்கண்ட அந்தக் கிழவர், என் பட்டினியை நன்ருகத்தெரிந்து கொண்டார். விடாப்பிடியாக ஒரு நாள் 'நீ வந்தால்தான் நான் சாப்பிடுவேன்' என்று என்னிடம் உண்ணுவிரதம் தொடங்குவதாகப் பயமுறுத்தினர். எதை மீறினுலும்—தட்டிக் கழிப்பதென்ருலும்—அன்பை அலட்சியஞ் செய்ய முடியாதல்லவா? கிழவருடன் அவர் எளிய உணவை இரண்டு நாள் உண்டு காலங் கழித்தேன். எப்படிச் சிந்தித்தாலும், என் சிந்தனையில் முடிவான யோசனை ஒன்றுகூடத் தோன்றவில்லை. தோன்றுவதெல்லாம் முடிவில்லாத முள்வழி—கண்ணுக்கு இனிப்பூட்டும் கானல்நீர்—

விட்டிலைப் பழமென்று ஏமாற்றும் விளக்குகள் போலவே இருந்தன. எண்ணினேன், எண்ணி னேன்—எவ்வளவு எண்ண முடியுமோ அவ்வளவும் எண்ணினேன்—எண்ணத்துக்கு எண்ணிக்கையே இல்லையென்று எண்ணினேன். சித்தங் கலங்கிப் பயித்தியம் பிடிக்கும் அளவுக்கு எண்ணினேன்; பயன் ஒன்றுமில்லை!

என் சிந்தனையைக் கண்ட அந்தக் கிழவர் ஒரு யோசனை கூறினர்; 'துணிக் கடைக்காரர் எல்லாம் உனக்குத் தெரிந்தவர்களே! நீயும் உன் தகப்பனுரைப் போல வியாபாரம் செய்யலாமே?' என்ருர்.

பார்க்கலாம் என்று அப்போது அவருக்குப் பதில் சொன்னேன். பார்த்தேன், பார்த்தேன், வேறு யோசனையெல்லாஞ் செய்து பார்த்தேன்; உருப்படியாக அவை உதவாமையால், கிழவர் சொன்ன யோசனையையே தற்காலிகத் திட்டமாக ஏற்க முடிவு செய்தேன்.

நன்ருகத் தெரிந்த சில துணிக்கடைக்காரரிடம் சென்று என் கருத்தைத் தெரிவித்தேன்.

'ஓ! நன்ருகச் செய்யலாமே!' என்ருர் ஒருவர்.

'எல்லாத் தொழிலையும் எல்லாருஞ் செய்துவிட முடியாது, அப்படிச் செய்தாலும் எல்லோருக்கும் ஒரே விதமான பயன் கிடைக்காது. நீ இளைஞனுக இருக்கின்ருய்; நீ விரும்புந் தொழில் வயதான—உங்கப்பனைப் போன்றவர்கள்—செய்ய வேண்டிய

ஒன்றாகும்; நன்றாக யோசனை செய்து முடிவு செய்' என்றார் இன்னொருவர்.

'வாடிக்கையாக நம் கடையிலேயே தினந் தோறும் எடுத்துக்கொண்டு போகலாமே—முன்பண மில்லாமல்—கடனாகவும்—விலையிலும் சுமாராகக் குறைத்துந் தருகிறேன்' என்று வாடிக்கைப் பிடிக்க வகை செய்தார் ஒருவர். இப்படிப் பலர் தத்தமக்குந் தெரிந்த அனுபவங்களை வைத்துக்கொண்டு யோசனை கூறினார்கள் கடைக்காரர்கள்.

அன்றாடங் காலையில் கடனாகத் துணிகளை எடுத்து விற்பது; நிற்பதைத் திருப்பிக் கொடுத்து மாலையில் கணக்குத் தீர்த்து விடுவது; இவ்வாறு என் ஆரம்பத் தொழில் அரும்பியது. முதலில் கொஞ் சம் சிரமமாக இருந்தாலும் பழக்கமாகி விட்டதால் தொழிலில் எனக்குச் சிரமம் ஏற்படவில்லை. துணைக் குக் கிழவரை வைத்துக்கொண்டேன். இருவரும் ஒன்றாக வியாபாரம் செய்வது போலவே குடும்பத் திலும் ஒன்றாகவே இருந்தோம். அவருடையது—என்னுடையது—என்றில்லாமல், இருவரும் சம்பாதித் தோம்; இருவருஞ் சாப்பிட்டோம்; இருவரும் வாழ்ந்து வந்தோம். நான் அக்கிழவரை என் அன்புத் தந்தையாக எண்ணிவிட்டேன். கிழவரும் என்னை அன்பு மகனாக எண்ணி விட்டார். அந்தத் தொழி லின் நுணுக்கங்களைச் சில மாதங்களிலேயே நான் நன்றாகத் தெரிந்து கொண்டேன். சுமாரான வரு மானமும் வந்து கொண்டிருந்தது.

நாங்கள் நன்ருகவே வாழ்ந்து வந்தோம். படிக்க வேண்டிய காலத்தில் நான் பட்டணத்துச் சந்துகளில் துணி வியாபாரியாகத் திரியத் தொடங்கினேன். நான் பள்ளிப் படிப்பை அடியோடு கைவிட்டாலும், மேலும் மேலும் படிக்க வேண்டும் என்னும் ஆசையை மட்டுங் கைவிடவில்லை. தந்தை பிரிந்த தயக்கத்தில் வாழ்க்கைக்கு வழியறியாது வாடிவதங்கிய இரு மாதங்களில் ஏடுகளில் என் எண்ணத்தைச் செலுத்தாதிருந்தேன். பகலில் வியாபாரம், இரவில் படிப்பு—இப்படிக் கல்வியில் ஊக்கமாகவே இருந்தேன்.

நாம் படிக்கும்போது பாடப்புத்தகத்தில் திரு. வி. க. வின் கட்டுரையைப் படித்தோமில்லையா? அப்போது தமிழாசிரியர் திரு. வி. க. வைப்பற்றி—அவர் தொண்டுகளைப்பற்றி—அவர் தம் எழுத்துத் திறத்தைப்பற்றியெல்லாம் சொன்னர். அப்போது பொதுவாக எல்லா மாணவர்க்கும் திரு. வி. க. விடம் அன்பேற்பட்டது. ஆயினும் அவரிடம் எனக்கு ஒரு தனியன்பு தளைவிட்டது. நல்லவேளையாக அந்த ஆண்டில் ஆண்டு விழாவிற்குத் திரு. வி. க. வே வந்து சொற்பொழிவாற்றினர். அதைக் கேட்டதிலிருந்து அவரிடம், சாதாரணமாக இருந்த அன்பு வேர்விடத் தொடங்கியது. அதனல் அவருடைய ஒவ்வொரு நூலையும் படிக்க வேண்டுமென்ற ஆர்வம் உண்டாயிற்று. அந்த நிலையில்தான் என் தந்தை பிரிவு, வாழ்க்கைப் பிரச்சினை எல்லாந் தோன்றின. அவையெல்லாம் முடிந்து வியாபாரியாகிவிட்ட பிறகு மீண்டும் பழைய எண்ணம் பற்றத் தொடங்கியது;

மேலும், அதற்கு முன் பணத்துக்குப் பஞ்சம்; இப்போது என்னிடமே பணமிருந்ததால்—அதுவும் சுமாராகவுமிருந்ததால்—அவர் எழுதிய எல்லாப் புத்தகங்களையும் வாங்கி வந்து படிக்கத் தொடங்கினேன். அவை என் வாழ்க்கைக்குச் சிறந்த குறிக்கோளைத் தொகுத்துத் தந்தன. அடிக்கடி அவர் சொற்பொழிவில் கலந்து கொள்வேன். என்னைத் திரு. வி. க. வுக்குத் தெரியாது; ஆயினும் நான் திரு. வி. க. வின் அன்பனுகி விட்டேன். அவ்வன்பு என்னை ஆரத் தழுவிக்கொண்டது.

எப்படியாவது அவரிடம் ஒரு முறை பேச வேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். அவர் காட்சிக்கு எளியவர், கடுஞ்சொல் கையாளாதவர் என்று அவர் எழுத்து மூலம் அறிந்திருந்தாலும், முதலில் அவரிடம் எப்படிப் பேசுவது? எதைப்பற்றிப் பேசுவது? என்று புரியாது திகைத்தேன். என் வாடகை வீட்டில் அவர் நிழற்படங்களை நிலைபெறச் செய்தேன். அவரிடம் எப்படியாவது கட்டாயம் ஒரு முறை பேச வேண்டும் என்று அவர் எழுத்துக்கள் எனக்கு எழுச்சியளிக்கும். குணக் குன்ருன—தொண்டின் சிகரமான—அவரிடம் ஒன்றுந்தெரியாத ஊமைபோன்ற நாம் எதைப்பற்றிப் பேசுவது என்ற ஐயம் பிறந்து விடும். ஆயினும், பேசாவிட்டால் முடியாது போலத் தெரிந்தது. அவருடைய நூல்களில் பல செய்திகள் என் நிலைக்கு அப்பாற்பட்டிருந்தன. அவற்றில் ஏதாவது ஒன்றைப்பற்றிக் கேட்பதை வாயிலாகக்கொண்டு பேசுவதென்று நான் முடிவு செய்தேன்.

கிழவருக்கும் என்னைப்போலவே வியாபாரத்தில் பயிற்சி ஏற்பட்டு விட்டது. முன்பெல்லாம் அவர் சாதாரண கூலிக்காரராக இருந்தார். இப்போது அப்படி இல்லையாகையால், அதை அவரும் கூர்ந்து கவனித்து வந்தார். அது அவருக்கும் நன்ருக விளங்கி விட்டது. நான் மிகவும் ஆர்வத்துடன் ஏதாவது புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தால், அன்றைக்குக் கிழவரே போகப் புறப்பட்டு விடு வார்; ஆரம்பத்தில், கிழவரால் முடிகிறதா, கவனிப் போம் என்று அனுப்பிப் பார்த்தேன். பிறகு அவ சியம் ஏற்பட்டபோது கிழவரை மட்டும் அனுப்பி வைப்பது வழக்கம்.

ஒரு சமயம் ஒரு துணிக் கடைக்காரர் அவசரமாக மதுரைக்குப் போக வேண்டிய நிலை ஏற்பட்டது. அதே சமயத்தில் அவர் வீட்டில் இருக்க வேண்டிய தாகவும் இருந்தது. இங்கு வீட்டு வேலை; மதுரை யில் வியாபார வேலை. இறுதியில் நம்பிக்கையான ஒருவரை மதுரைக்கு அனுப்புவதென்று முடிவு செய்துகொண்டு அவர் என்னிடம் வந்தார். நான் அப்போது ஓய்வாக திரு. வி. க. வின் முருகன் அல்லது அழகு என்னும் நூலைப் படித்துக்கொண் டிருந்தேன். அவர் என்னைத் தொந்தரவு செய்து மதுரைக்கு அனுப்பி வைத்தார். நான் சென்ற வேலை ஒரே நாளில் முடிந்து விட்டது. மறுநாள் மதுரைக்கு திரு. வி. க. வருவதாக இருந்தது. வெளியிடத் தில் திரு. வி. க. வுக்கு எவ்வளவு பெருமை இருக் கிறது? வெளியில் அவர் எப்படிப் பேசுகிருர்? என்

பதைப் பார்க்க அன்று நான் மதுரையில் நின்று விட்டேன்.

சென்னையைவிட மதுரையில் அவர் இருமடங்கு உற்சாகமாகக் காணப்பட்டார். அதற்குக் காரணம் அளவில்லாத மக்கள் அவரை அன்பு வெள்ளத்தில் ஆழ்த்தியதேயாகும் என்று நான் எண்ணிக்கொண் டேன். மக்கள் அவரிடம் செலுத்திய மரியாதை அவரிடம் எனக்கு முன்னிலும் அன்பு அதிகரிக்கத் தூண்டியது. அம் மக்கள் அவர் பேச்சிலும், எழுத் திலுங் காட்டிய எழுச்சியை நான் எண்ணத்தொடங் கினேன். என்ன இருந்தாலும் தமிழ்மொழி ஒரு காலத்தில் தழைக்கக் காரணமாயிருந்த இடமில்லையா மதுரை என்று நான் எண்ணிக்கொண்டேன். கூட் டந்தொடங்கியது; மாநாட்டுத் தலைவராகத் தமிழ்ப் பெரியார் முன்னுரையாற்றத் தொடங்கினர்.

அவர் பேச்செல்லாம் தொண்டு! தொண்டு! என்று விரிந்து சென்றது; நாட்டுக்கு—மொழிக்கு—கல்லாதவர்க்கு—தொழிலாளருக்கு—பெண்களுக்கு — சமயத்துக்கு—உலகத்துக்கு என்று அது பல காலாக விரிந்தது. ஈயென மொய்த்திருந்த அத்தனை மக்க ளும், எள் விழுந்தாலும் இரைச்சல் கேட்டு விடும் படி அமைதியாக இருந்ததைக்கண்டு நான் மிகவும் வியப்படைந்தேன். அப் பேச்சின் இடையில் திரு. வி. க. ஒரு தொண்டரைப்பற்றிக் குறிப்பிட்டார்.

'இப்போது தமிழகத்தின் தெற்குக் கோடியி லுள்ள நான், தமிழகத்தின் வடகோடியிலுள்ள ஒரு

தொண்டரைப்பற்றி உங்களுக்குக் குறிப்பிட விரும்பு கிறேன். அவர் எந்தப் புகழையோ, பெருமை யையோ, பணத்தையோ விரும்புபவரல்லர். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' எனக்கொண்டு தொண்டாற்றி வருகிறார். தமிழர்க்கும், தமிழுக்கும் அவர் ஆற்றுந் தொண்டு அளவிடற்பாலதன்று; நகரங்களிலுள்ள மக்களுக்கு எல்லா வசதிகளும் உண்டு. கிராமத்து மக்களுக்கு—ஏழைத் தொழி லாளிகளுக்கு—எந்த வசதியுங் கிடையாது. இக்காலக் கல்விமுறை பணமிருந்தால்தான் படிக்க முடியும்படி அமைந்திருக்கக் காண்கின்றோம். ஏழைகள் எழுத் தறிவது எப்போது? சிலப்பதிகாரத்தை ஏழை சிந்திக்க முடியுமா? தொல்காப்பியக் கடலில் நீந்தி ஏழையால் கரையேற முடியவில்லை. திருமுறையும், பிரபந்தமும் எந்த வாசனையுடையவை என்று ஏழை மக்களுக்குத் தெரியாது. இந்த நிலைமையை மேலும் வளரவிட்டால் நாடு நாசமாகி விடும்.

படிக்க வசதியின்றிப் பகலெல்லாந் தொழில் செய்யும் பாமர மக்களைக் (சிறுவர்களைக்) கூட்டி வைத்துக்கொண்டு இரவெல்லாம் இத்தகைய பாடங் களை ஓதி வருகிறார். அப்பகுதியிலவர் தமிழ்த்தென் றலைத் தவழச் செய்து வருகிறார்.

ஒன்றுமறியாது ஊமைகளாய்க் கிடந்த கிராமச் சிறுவர்களில் பலரைப் புலவர்களாக்கியிருக்கிறார் அவர். பலரைச் சிறந்த கலைஞர்களாக்கி வருகிறார். இதை நான் ஆண்டு தோறும் அங்கெல்லாம் சென்று கண்டு வருகிறேன். தமிழ் நாட்டில் உடனடியாகச்

செய்ய வேண்டியது கல்வித் தொண்டேயாகும். எல்லோரும் அறிஞர்களாகிவிட்டால்–நாட்டில் அறிவு பெருக்கெடுக்கத் தொடங்கிவிட்டால்—மற்ற எல்லாம் தாமாகவே பெருக்கெடுத்தோடும். இவ்வருந்தொண் டினை என் நண்பர் திருவாளர் மங்கலங்கிழார் அவர் கள் வடகோடியில் பல கிராமங்களில் செய்து வரு கிறார். தமிழறிஞர் பலர் அத்தகைய தொண்டில் இறங்கினால்—வெகுவிரைவில் தமிழகம் தலைதூக்கி விடும்! ஒன்றுபட்ட, வேற்றுமையற்ற தமிழ்ச் சமு தாயம் உடனே உருவாகும்.' என்று தொண்டின் சிறப்பையும், ஒரு தொண்டரின் சிறப்பையும் அவர் கூறியபோது என் உள்ளத்தில் எண்ணற்ற உணர்ச்சி கள் மோதியெழுந்தன.

மாநாடு சிறப்பாக முடிவுற்றது; நானும் சென்னை வந்து சேர்ந்தேன். மீண்டும் திரு. வி. க. விடம் பேச வேண்டுமென்ற எண்ணம் அதிகரித்து விட்டது. ஒரு நாள் நான் திரு. வி. க. வீட்டுக்குச் சென்றேன். வேம்பின் தண்ணிழலில் அவர் வீற் றிருந்தார். பல நண்பர்கள் அவரைப் புடைசூழ அமர்ந்திருந்தனர். என் கைகள் குவிதற்கு முன்பே அவர் கைகள் குவிந்து விட்டன. நானும் ஒரு ஓரத் தில் சென்று அமர்ந்து கொண்டேன். பலர் தத் தமக்கு எழுந்த ஐயங்களை எழுப்பிக் கொண்டிருந் தனர். அவற்றுக்கெல்லாம் அவர் அமைதியாகப் பதில் சொல்லியனுப்பினர். எல்லா நண்பர்களும் அவரிடம் விடைபெற்றுச் சென்று விட்டனர். பிறகு என்னை நோக்கின அவர் திருக் கண்கள்.

'எந்த ஊர் தம்பி?'

சென்னையேதான், மாம்பலம் பக்கங்கோ!

'இளைஞனாக இருக்கிறாய்; இக்கால இளைஞர்கள் என்னைப்போன்ற கிழவர்களிடம் நெருங்குவதில்லை; இளைஞர்களிடம் நிரம்பப் பேசவேண்டுமென்பது என் ஆசை; அதிருக்கட்டும், நீ படிக்கிறாயா தம்பி?'

அந்தக் கேள்வியைக் கேட்டதும் எனக்குத் துக்கமும், அச்சமும் என் தொண்டையைக் கவ்விக்கொண்டன.

இல்லைங்கோ! தொழில் செய்கிறேனுங்கோ!

'என்ன படித்தாய் தம்பி?'

பத்தாவது வரை படித்து மேற்கொண்டு படிக்க முடியாமல் அதையே முடிக்காமலும் நிற்க வேண்டியதாய் விட்டது என்று வருத்தத்துடன் நான் கூறினேன்.

என் வருத்தத்தை அறிந்துகொண்டார் அவர். பாவம்! வறுமைபோல் தெரிகிறது என்று வருத்தப் பட்டார். 'உன் பெற்றோர் என்ன செய்கிறார்கள் தம்பி?'

அதற்குமேல் என்னால் அடக்கமுடியவில்லை. கண்ணிலிருந்து நீர் வெளிவரத் தொடங்கிவிட்டது.

தாய் இளமையில் இறந்தது—பத்தாவது முடியும்போது தந்தை பிரிந்தது—வயிற்றுக்கு வகை

யறியாது வருந்தியது—தொழில் செய்வது முதலிய எல்லாவற்றையும் அவரிடம் கூறி அழுது விட்டேன். அவரும் வருத்தப்பட்டார்.

இன்னும் படிக்க வேண்டுமென்ற அளவில்லாத ஆசையிருந்தாலும் இனிமேல் பள்ளியில் சேர்ந்து படிப்பதென்பது முடியாதெனக் கூறியழுதேன். அவர் அன்பு மனம் நீராய் உருகி வழியத் தொடங்கியது. என்னை அருகிலழைத்து அமரச் செய்தார்.

'இனிமேல் என்ன செய்ய எண்ணியிருக்கிருய் தம்பி?'

நான் வயிற்றுக்காகத் தொழில் செய்கிறேன். அதில் போதிய வருவாய் கிடைக்கிறது. உணவுப் பசி அடங்கினுலும் உள்ளப் பசி என்னுள் கொழுந்து விட்டெரிகிறது. உங்கள் கருத்துப்படி—நாட்டின் நிலைக்குப் பெருந்தொண்டு அவசியப்படுகிறது. அதில் என்னை ஆழ்த்திக்கொள்ள—தொண்டன் ஆக—நான் ஆசைப்படுகிறேன். ஆனுல்......படிப்புப் போதாது. அதற்காக இன்னும் நன்ருகப் படிக்க வேண்டுமென்னும் ஆவல் தூண்டுகின்றது. வழி தெரியாது வருந்துகிறேன் என்று என் கருத்தை எப்படியோ அவரிடம் கூறி விட்டேன்.

என்னை ஆரத்தழுவிக்கொண்டது அத்திருவுடல்! நல்ல உள்ளம்—நாட்டுக்கு இதுபோன்ற பல உள்ளங்கள் தேவை.

'தமிழ் நூல்களில் பழக்கமுண்டா தம்பி?'

நான் படித்த புத்தகங்களின் பெயர்களையெல்லாங் கூறினேன். மகிழ்ச்சியாகக் காணப்பட்டது அவர் முகம். சிறிது நேரம் எதையோ ஆழ்ந்து சிந்தித்து விட்டு என்னைப் பார்த்தார்.

'வருகிற ஞாயிற்றுக்கிழமை யன்றைக்கு நீ இங்கே வா; அப்போது தமிழன்பர்களும், தமிழ்ப் பேராசிரியர்களும் பலர் இங்கு வருவார்கள். அவர்களை உனக்கு அறிமுகம் செய்து வைக்கிறேன். அவர்களிடம் சென்று பழந்தமிழ் இலக்கிய, இலக்கணங்களை நீ பாடங்கேட்டு வா' என்றும், சில ஆங்கிலப் புத்தகங்களைக் கூறி 'அவை நல்ல கருத்துடையவை; அவற்றையும் படித்து வா. அவ்வப்போது என்னிடமும் வந்து போ! நாட்டுக்குத் தொண்டு செய்பவர்கள்—காந்தியடிகளைப்போல—நல்ல அறிவு படைத்தவர்களாக இருக்க வேண்டும். தொண்டு செய்வதற்கு, உள்ளம் மட்டும் இருந்து விட்டால் போதாது; எவ்வாறு, எப்படிச் செய்வதென்ற அறிவும் வேண்டும். நீர் பெருகாத ஆறுகளால் ஏரி, குளங்களை நிரப்ப முடியுமா? சூரியனிடம் ஒளியில்லாவிட்டால் கோள்களுக்கு ஒளியேது? நீ முதலில் நன்கு படித்துக் கொள்' என்று யோசனை கூறினர். சாப்பாட்டு நேரமாகி விட்டதை நினைத்துக்கொண்டு, நான் ஞாயிற்றுக்கிழமை வருகிறேன்; இப்போது போய் வரட்டுங்களா? என்று கூறிக்கொண்டே எழுந்தேன்.

'உணவுக்கு நேரமாகி விட்டது தம்பி; நீ இங்கேயே சாப்பிட்டு விட்டுப் போப்பா!' என்று கூறி அவரும் எழுந்தார்.

நான் வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுக் கொள்ளு கிறேன் என்று எவ்வளவு சொல்லியும் அவர் என்னை விடவில்லை. அதற்குமேல் என்னால் மறுக்க முடியவில்லை. பிறகு சாப்பிட்டு விட்டு அவரிடம் விடைபெற்றுக்கொண்டேன்.

அவர் கூறியபடி நான் ஞாயிற்றுக்கிழமை யன்று காலையே அவர் வீட்டுக்குப் போனேன். பலர் என்னை முந்திக்கொண்டிருந்தனர். நான் சென்ற உடன், என்னைத் திரு. வி. க. பார்த்ததும் 'வா தம்பி!' என்றழைத்து அருகில் அமரச் செய்தார்; முன்னு விருந்த பலருக்கும் என்னை அறிமுகம் செய்தார். பிறகு அப்போது அங்கிருந்த ஒரு பேராசிரியரிடம் என்னைப் பற்றியும், என் கருத்தையும் எடுத்துக் கூறினர்; பிறகு பாடங் கேட்கும் செய்தியையும் கூறினர். அப்பெருந்தகையும் அவர் கூற்றைச் சிர மேற்கொண்டார். வாரத்தில் இருநாள் பேராசிரியர் வீட்டுக்குப்போய் பாடங்கேட்பதும், ஒரு நாளைக்குத் திரு. வி. க. வைச் சந்திப்பதும் வழக்கமாகக் கொண்டு விட்டேன். இப்படியே மூன்ருண்டுகள் கழிந்தன.

இரண்டாவது உலகப் போர் தொடங்கியது. வெளிநாடுகளில் வியாபாரம் செய்து கொண்டிருந்த பலர் உயிருக்கஞ்சி கடைகளை மூடிவிட்டு வீடு வந்து சேர்ந்து விட்டார்கள். பர்மாவிலும், சிங்கப்பூரிலும் போர் பலமாக நடந்தது. அங்கிருந்த நம்மவர் பலர் நாடு திரும்பினர்.

சென்னையிலிருந்த மக்களே போருக்குப் பயந்து ஓடி ஒளிந்தார்கள் என்றால்—சிங்கப்பூரிலும், பர்மாவிலும் இருந்தவர் ஓடி வருவதற்குக் கேட்கவா வேண்டும்!

சென்னையைச் சேர்ந்த ஒரு வணிகர் சிட்டகாங்கில் பெரிய துணிக்கடை வைத்து நடத்திக் கொண்டிருந்தார். அவரும் போருக்குப் பயந்து திரும்பி விட்டார். ஆயினும், வியாபாரத்தை விட்டுவிட அவர் விரும்பவில்லை. தான் அங்கிருக்கவுந் தயங்கினார். அவர் என்னைக் கூப்பிட்டு சிட்டகாங் சென்று வியாபாரத்தை ஏற்று நடத்தி வந்தால் வருமானத்தில் மூன்றில் ஒரு பங்குத் தருவதாகக் கூறி என்னைப் புறப்படுத்தினார். நானும் இசைந்து சென்றேன். அப்போது என்னிடம் சொந்தமாகப் பத்தாயிரம் ரூபாய் இருந்தது. கிழவரை வீட்டில் இருத்திவிட்டு நான் சிட்டகாங்கில் வியாபாரத்தில் ஈடுபட்டேன்.

நான் சென்ற மூன்று மாதத்துக்குள், போர் மும்முரமாக மூண்டுவிட்டது. முதலாளிக்கு அங்குக் கடையிருப்பதே பிடிக்கவில்லை. என்னை சென்னைக்கு வரவழைத்தார். 'இனிமேல் அங்குக் கடையிருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. உனக்குத் துணிவிருந்தால் பணங்கொடுத்து நீ கடையை ஏற்றுக் கொள்! இல்லையென்றால் எல்லாவற்றையும் விற்றுக் கொண்டு வந்துவிடு!' என்று கூறிவிட்டார். அதுவரைக் கணக்குத் தீர்ந்ததில் அவர் எனக்குப் பதினைந்தாயிரம் ரூபாய் பங்குக் கொடுத்தார்.

அங்கு வியாபாரம் நடத்தக் குறைந்தது முப்பதாயிரம் ரூபாயாவது தேவைப்படும். அவர் கொடுத்த

பதினைந்தாயிரத்தை அப்படியே திருப்பிக் கொடுத்து விட்டு, எஞ்சும் பதினைந்தாயிரத்தைக் கடனாக ஏற்றுக்கொண்டு கடையை நான் ஏற்று நடத்தினேன். மூன்று மாதங்கட்குமேல் என்னாலும் கடையை நடத்த முடியவில்லை. எல்லாவற்றையும் விற்றுக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன். கடனையெல்லாம் திருப்பிக் கொடுத்த பிறகு என்னிடம் அப்போது இருந்த தொகை மொத்தம் இருபதினாயிரம் ரூபாய்.

பூரணமாக உலகப் போர் நின்று விட்டது. மீண்டும் வியாபாரத்தைத் தொடங்கப் பலர் முயன்றனர். போருக்கு முன் யார் யார் வெளிநாடுகளில் வாணிபம் செய்து வந்தார்களோ, அவர்களுக்கே அரசாங்கம் உரிமை தந்தது. அந்த உரிமை எனக்கு முயற்சியில்லாமலேயே கிடைத்து விட்டது. மாதம் ஒன்றுக்கு ஐம்பதினாயிரம் கஜம் துணி ஏற்றுமதிக்கு எனக்கு உரிமை (கோட்டா) கிடைத்தது. அதை நான் சென்னையிலிருந்தபடியே இலாபத்தை மட்டும் வாங்கிக்கொண்டு மற்ற வியாபாரிகட்கு அனுமதியைக் கொடுத்து வந்தேன். அதனால் பல லட்சம் ரூபாய் எனக்குக் கிடைத்தது. பணக்காரனாக ஆன போதும் எனக்குப் பழைய எண்ணங்கள் மாறவில்லை.

பங்களாவுங் காரும் வசதிக்காக வாங்கப்பட்டவை; அவற்றை நான் அனுபவிக்கும் போது, வீடில்லாத காரணத்தால்—வீதிகளிலும் சோலைகளிலும் கழித்த இரவுகளையும், ரிமாண்டில் உதையுடன் ஓரிரவைக் கழித்ததையும் என்னால் மறந்துவிட

முடியுமா? என் உயிருள்ள வரை அவை நிலைத்திருக்கும்!

என் செல்வ நிலையைத் திரு. வி. க. வுக்குக் கூறினேன். அவர் மிகவும் மகிழ்ந்தார். 'எட்டி பழுத்து யாருக்கு என்ன பயன்? மா பழுத்தால் மக்களுக்குப் பயன்படும்! நீ உன் செல்வத்தை ஏழைகட்குப் பயன்படுத்தத் தவருதே!' என்று அவர் உபதேசித்தார். மேலும் அவர் கூறினர் :—

'தொண்டு மனம் உடையவருக்குப் பயன் சேர்வது மிகவும் அருமை; தொண்டனுகிய உனக்குத் திருமகள் செல்வத்தை நிரம்ப அருளியுள்ளாள். செல்வம் சேர்ந்து விட்டதே என்று செறுக்கடையாதே! ஏழைகள் பலர் தம் செல்வத்தை உம்மிடம் கொடுத்து வைத்திருப்பதாக நீ எண்ணிக்கொள்! அவற்றை அவர்கள் முன்னேற்றத்துக்கு முரணில்லாமற் பயன்படுத்து! செல்வத்தின் காவலனுக நீ உன்னை எண்ணி நட!' என்று நல்லுரை நவின்ருர்.

எந்த வகையிற் செலவிடலாம்? என்று கேட்டேன் நான்.

'உனக்கு இன்னும் திருமணமாகவில்லையே?' என்ருர் அவர்.

இன்னும் இல்லைங்கோ!

'பருவமடைந்தும் நீ ஏன் அதை எண்ணவில்லை?' என்ருர்.

தொண்டு வாழ்க்கைக்குத் திருமணம் தடையாக இருக்குமல்லவா என்றேன் நான்.

'இந்தக் கருத்தை நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன். இது போலி வேதாந்தம்; நீ இன்னும் தெளிவடையவில்லையென்று நான் எண்ணுகிறேன். உண்மையான தொண்டருக்கு இல்லறம் இடையூறு செய்யாது. முருகப்பா! நீ உன் எண்ணத்தை மாற்றிக்கொள்.

இங்கு உனக்கு இன்னென்றும் கூறவேண்டியுள்ளது; இதுதான் மிக மிக முக்கியம். முதலில் நீ இல்லத்துக்குரிய நல்லாள் ஒருத்தியைத் தேர்ந்தெடு! படிப்பும், அழகும், குணமும், உன்னைப்போலவே தொண்டு மனமும் உடைய ஒருத்தியை நீ தேர்ந்தெடுக்க வேண்டும். உன் மனம் தொண்டினை விழைகிறது; அதற்கு மாறுன குணம் படைத்தவள் மனைவியாக வந்தால் இல்லறம் இனிதாக இராது. அது நரகமாகவும் கூடும். ஒருவனுக்கு ஒருத்தி அவசியம் இருக்க வேண்டும்! அவள் அவனுக்கு ஏற்றவளாகவும் இருக்க வேண்டும். இப்போது உனக்குத் தொண்டு மனம் உடையவளாக இருந்தால்தான் உன் வாழ்வு சிறக்கும். அத்தகைய ஒரு நல்லாளை நீ உடனே தேர்ந்தெடுத்து விரைவில் மணம் செய்து கொள்ளப்பா!' என்று என்னைத் திருமணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்திக் கூறியனுப்பினுர்.

திருமணம் செய்து கொள்ளாமலேயே காலத்தைக் கழிப்பது என்று நான் இளமையிலிருந்தே

எண்ணி வருவதுண்டு. நாளுக்கு நாள் வறுமை, வசதிக் குறைவு, குறைகல்வி எல்லாம் சேர்ந்து அவ் வெண்ணத்தை உறுதியாக்கிவிட்டன. என்னைப் பற்றி வற்புறுத்துவார் யாருமில்லையாகையால் என் வாழ்க்கை யுலகுக்கு நானே அரசன். அந்த நாட்டில் நான் இட்டதே சட்டம். இப்படியே இதுவரைக் கழிந்து வந்தது. இப்போது அதன் திசை மாறுவ தென்றால்—இதுவரை நான் அனுசரித்து வந்த என் கொள்கைகளை விடவேண்டுமென்றால்—எனக்கு முத லில் வருத்தமாக இருந்தது. எவ்வளவு யோசித்தும் திரு. வி. க. சொன்னதுதான் சரியென்று ஏற்பட் டது.

நான் ஒரு நெசவாளியின் மகன். சாதிகளில் நம்பிக்கையற்றவன். சாதிகள் ஒழிய வேண்டு மென்று விரும்புபவன். ஆனால் உலகம் இன்னும் அவ்வளவு தூரம் முன்னேறாதிருந்தது எனக்கு அப் போதுதான் தெரிந்தது.

'தொண்டு மனமுடைய பெண்ணைத் தேர்ந் தெடுத்து உடனே திருமணம் செய்து கொள்ளப்பா!' என்று கூறிய திரு. வி. க. வின் அறவுரை என் காதில் ஒலித்துக்கொண்டே இருந்தது.

ஒரு வருட காலமாகத் திருமணம் செய்து கொள்வதென்னும் முடிவோடு—செய்துகொள்ளாம லேயே கழித்து வந்தேன். நான் விரும்பிய பெண் ஏழையாகவும், தொண்டு மனம் உடையவளாகவும் இருக்க வேண்டும். பணக்காரர் எனக்குப் பகைவ

ரல்லர்; பணம் படைத்தார் பெண்களில்—பெரும் பாலோரிடம்—இயற்கையாக ஆடம்பரமும், பிறரைக் கேவலமாக எண்ணும் குணமுந்தான் இருக்கக்காணு கின்றேன். அதனுல்தான் நான் ஏழையை விரும்பி னேன்.

என் வீதியின் கோடியில் ஒரு மடமும், அதன் எதி ரில் ஒரு பூங்காவும் இருப்பது உனக்குத் தெரியுமில் லேயா? நான் அந்தப் பூங்காவுக்குத்தான் தினமும் மாலேயில் செல்லுவது வழக்கம். இரண்டாண்டுகட்கு முன்னர் ஒரு நாள் அந்தப் பூங்காவில் ஒரு பெண்ணேக் கண்டேன். அவளுடைய உடை ஏழ்மையை உணர்த் திற்று. ஆயினும் அழகுடையவளாகக் காணப்பட் டாள். வயது இருபதிருக்கும்; திருமணமாகாதவ ளாகத் தோன்றினுள். தொடர்ந்து நாள்தோறும் அங்கு அவள் காணப்பட்டாள். எனக்கு அவள் யார் என்று அறிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவல் எழுந்தது. தனித்திருக்கும் ஒரு பெண்ணே—அதிலும் ஒரு இளேஞன் எப்படிச் சென்று கேட்பது? எனக்கு மிகவும் அச்சமாக இருந்தது. ஆயினும் அறிந்து கொள்ள வேண்டுமென்னும் ஆவல் அடங்கவில்லே. ஒரு நாள் அந்தப் பெண்ணுடன் ஒரு சிறுவனிருந் தான். அவர்கள் பேசிக்கொண்டதிலிருந்து அவன், அவள் தம்பியாக இருக்க வேண்டுமென்று தோன்றி யது. நான் அவர்களேப் பார்க்காதவனேப் போலப் பார்த்துக்கொண்டிருந்தேன். கேளாதவன்போலவே அவள் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தேன். ஒன் றும் விளங்கவில்லே. சிறிது நேரத்துக்குப் பின் அச் சிறுவன் என் பக்கமாக வந்தான். என் நெஞ்சம்

பட படத்தது. அவனைக் கூப்பிட்டு விசாரிக்கலாம் என்று எண்ணினேன். மீண்டும் அச்சம் வந்து அடக்கி விட்டது. சிறுவன் என்னைக் கடந்து எங்கேயோ போய்க்கொண்டிருந்தான். அவன் போய் விட்ட பிறகு துணிந்து அவனைக் கூப்பிடாமைக்கு, நான் வருத்தப்பட்டேன்.

சிறிது நேரத்துக்குப் பிறகு மீண்டும் அச் சிறுவன் அந்தப் பெண்ணை நோக்கி வந்துகொண்டிருந்தான். ஆறு மணிக்குமேல் என்றுமே நான் பூங்காவில் தங்குவதில்லை. அன்று மட்டும் நான் எதையெதையோ எண்ணிக்கொண்டு மணி ஏழாகியும் எழுந்திருக்கவே யில்லை. அந்தச் சிறுவன் என் பக்கமாக வந்தான். எப்படியோ துணிந்து தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அச் சிறுவனைக் கூப்பிட்டேன். அவன் கையில் ஒரு புத்தகம் இருந்தது. அது என்ன புத்தகம் தம்பி என்று கேட்டேன். அவன் அருகில் வந்து புத்தகத்தைக் காண்பித்தான். 'பெண்ணின் பெருமை, அல்லது வாழ்க்கைத் துணை' என்னும் திரு. வி. க. எழுதிய நூல் அது. அதைப் பார்த்துக்கொண்டே நீ எந்த வீதி தம்பி? என்று கேட்டேன்.

'நாங்க வெளியூருங்கோ! இங்கே பிழைக்க வந்திருக்கிறோம். இப்போ இந்தப் பூங்காவில்தான் இருக்கிறோம்.' என்றான் அவன்.

இன்னும் யார் யார், தம்பி?

மரத்தடியைச் சுட்டிக்காட்டி 'அது எங்க அக்கா வுங்கோ! எங்கப்பா வேலைக்குப் போயிருக்கிருர். எட்டு மணியாகிவிடும் அப்பா வருவதற்கு. அப்புறம் சமைச்சு சாப்பிட்டுவிட்டு அந்த மடத்தில் போய் படுத்துக்கொள்வோம்.'

இந்தப் புத்தகம் யாருடையது? எங்கே போய்க் கொண்டு வந்தாய்?

'இதை எங்க அக்காவுக்காக அப்பா நேற்று வாங்கி வந்து கொடுத்தார். காலையில் எழுந்து வரும் போது மடத்திலேயே வைத்துவிட்டு வந்துவிட் டாள் அக்கா. இப்போ என்னை எடுத்து வரச்சொன் ஞள். இதைப்போய் எடுத்துக்கொண்டு வருகிறேன்.'

நீ என்ன செய்கிருய் தம்பி?

'பக்கத்துத் தெருவில் இருக்குதே அந்தப் பள்ளிக் கூடத்தில் பத்து நாளைக்கு முன் எங்கப்பா என்னைச் சேர்த்தார். ஐந்தாவது படிக்கிறேனுங்கோ!' என் ருன் சிறுவன். அந்தப் பெண் எங்களைப் பார்த்தாள். நான் அவளைப் பார்த்தபோது அவள் வேறு பக்கமாக முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

உங்க அம்மா இல்லையா தம்பி?

'இல்லைங்கோ! செத்து விட்டாங்கோ!' என்று வருத்தத்துடன் சொன்ஞன். மேலும் அவனை நிறுத்த மனமில்லாது நீ போய் வா தம்பி என்று அனுப்பி னேன். 'போய் வருகிறேன்' என்று வணங்கிவிட்டு

அச்சிறுவன் போனான். நல்ல குடும்பமாக இருக்கும் போலத் தெரிகிறது! அவளும் படித்திருப்பாள்— திரு. வி. க. நூலைப் படித்தறியும் அளவுக்குக் கல்வியும் அறிவும் பெற்றவள் அவள் என்பதும் புலனாகிறது. திரு. வி. க. வின் நூலை மகள் படிக்க வேண்டுமென்று —ஏழ்மையிலும் அவ்வளவு பணங்கொடுத்து அவள் தந்தை வாங்கி வந்திருக்கிறான்—அதிலிருந்து அவனுடைய குணமும் தெரிகிறது! இவற்றையெல்லாம் சிந்தித்துக்கொண்டே நான் வீட்டுக்குத் திரும்பினேன்.

அன்றிரவு வெகுநேரம் எனக்குத் தூக்கமே வரவில்லை. காமத் தீ தூக்கத்தைக் கலைத்திருக்கும்! என்றுதானே சிரிக்கின்றீர்? அல்ல—காமமல்ல, நான் தூங்காமைக்குக் காரணம். அந்தக் குடும்பம் எந்த நிலையிலிருந்து இந்த நிலைக்கு வந்து விட்டதோ! என்றுதான் நான் சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

அன்றிலிருந்து அந்தப் பெண்ணை நான் கூர்ந்து கவனித்து வந்தேன். திரு. வி. க, மறைமலையடிகள், இவர்களுடைய புத்தகங்கள் சிலவற்றையே திரும்பத் திரும்பப் படித்துக்கொண்டிருந்தாள். மேலும் அத்தகைய வேறு புத்தகங்களை அவர்களால் வாங்க முடியவில்லையோ? பாவம்! ஏழைகள்—மூட்டை சுமந்தோ, அல்லது வேறு கூலி செய்தோ அவள் தந்தை காசு சம்பாதித்தால் எப்படி இத்தகைய— நிறைய விலையுள்ள—புத்தகங்களை வாங்க முடியும்! என்று எண்ணி வருந்தினேன். நம்மிடமுள்ள புத்த

கங்களைப் படிக்கக் கொடுத்தாலென்ன என்று ஒரு சமயம் எண்ணுவேன்.

அது எப்படி முடியும்? நாம் கொண்டு போய்க் கொடுத்தால் அவள் வாங்கிக்கொள்ள இசைவாளா? நம்மிடம் புத்தகமிருப்பதை அறிந்து அவள் கேட்க முடியுமா? எனக்குத் துன்பமாக இருந்தது. பண வசதியுடையவருக்கு இவற்றையெல்லாம் படிக்கக் குணவசதி யிருப்பதில்லை. மனமுள்ள இத்தகைய வரிடம் பணமில்லை. உலகமே எனக்கு அருவருப் பாகத் தோன்றியது. இப்படிச் சிலநாள் சென்றன.

எப்படியாவது அவளிடம் பேச வேண்டுமென்று நான் துடியாய்த் துடித்தேன். அந்தச் சிறுவனைப் பிறகு நான் ஒரு நாள்கூடப் பார்க்கவில்லை. காரணந் தெரியவில்லை. 'எப்படியாவது இன்றைக்குப் பேச் சுக்கொடுத்துப் பேசுவது' என்று எண்ணிக்கொண்டு பூங்காவுக்குப் போவேன். அவளும் இருப்பாள்; பேசமுடியாது வெற்றிகரமாகப் பின்வாங்கி வரு வேன்.

எண்ணெயில்லாது வாரிய தலை; கிழிந்த ஜாக் கெட், மாறி மாறியுடுக்கப்பட்ட இரண்டே புடவை; அவையுங் கிழிந்தவை; அடக்கமான குணம், அமைதியான தோற்றம், ஆழ்ந்து சிந்திக்குந் திறம், பெண்களுக்கே உரிய அச்சம்—இவைதாம் அவள் நிலை. ஆடம்பரத்தை வெறுக்கும் எனக்கு இவை அருவருப் பளிக்கவில்லை. அழகுமிக்க அணங்காகவே அவள் காணப்பட்டாள். அடிக்கடி அப்போது எனக்குக் குறுந்தொகைச் செய்யுளில் ஒன்று நினைவுக்கு வரும்.

ஒரு இளைஞனும், ஒருத்தியும் தமக்குள் காதல ராக ஒருவரையொருவர் நேசித்து வந்தனர். அவள் ஒரு பெருஞ்செல்வனின் மகள். அவனே ஒரு ஏழை! இருவருக்கும் எப்படியோ காதல் ஏற்பட்டு வளர்ந்து விட்டது. இளைஞன் உள்ளத்தில் உவகையும் வேதனையும் மாறி மாறித் தோன்றின. அவளுடன் பழகும்போது ஆனந்தமும்—அவளை மனைவியாக அடைவது முடியுமா என்று எண்ணும்போது ஏக்க மும்—அவனுக்குத் தோன்றும். வேதனை வெதும்ப வெதும்ப அவன் வேறுபாடுற்றான். அவனுடைய நெருங்கிய நண்பன் இளைப்பதற்குக் காரணங் கேட் டான். நண்பனிடம், தான் இன்னலுறுதற்குரிய இரகசியத்தைக் கூறினான் அவன். நண்பன் ஆச்சரியப் பட்டான். பிறகு கண்டிக்கத் தொடங்கினான். அவள் நிலை என்ன? உன் நிலை யாது? இது எப்படி முடி யும்? என்று கூறி நண்பன் வியந்தான். இது மடத் தனம். இவ்வெண்ணத்தை நீ மறந்து விடவேண்டும் என்றெல்லாம் நண்பன் கண்டித்து யோசனை கூறினான்.

நீ காதலைப்பற்றி ஒன்றும் அறியாதவனப்பா! என்னைக் கண்டிக்கிறாய்; இது சுலபம். சொல்லுவது யார்க்கும் எளிதுதானே! அந்த நிலை சொல்பவருக்கு ஏற்பட்டால்—கண்டிக்கும் உன் போன்றவருக்கு ஏற்பட்டால்—அப்போது அதன் சுபாவம் அவர்கட்குப் புரியும். ஆனால், என் நிலை எப்படி இருக்கிறது தெரியுமா? ஒரு பாறையின் மீது வெண்ணெயை வைத்து அதைப் பத்திரமாகப் பாதுகாக்க ஒருவரைக் காவல் வைத்துச் சென்றார் ஒருவர். பாதுகாப்பவன்

கையில்லாத முடவன்; வாயும் இல்லை. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வெய்யல் விரியத் தொடங்கியது. பாறை சூடேறிவிட்டது. வெண்ணெய் உருகத் தொடங்கியது. அவனுல் என்ன செய்ய முடியும்! கையில்லா விட்டாலும் வாயாவதிருந்தால் யாரிடமாவது கூறி வெண்ணெயை அப்பால் எடுத்து வைக்கச் செய்ய முடியும். எதையாவது இட்டு மூடி மறைக்கச் செய்யலாம். எதுவும் செய்ய முடியாதபடி அவன் கையில்லாத ஊமையாக இருக்கிருன். வெண்ணெய் உருகுகிறது! அதைப் பார்த்துப் பார்த்து அவன் உருகுகின்ருன். அவனைப்போலவே நான் இதை யாரிடமும் சொல்ல முடியாமலும், திருமணத்தை நடத்த முடியாமலும் வருந்துகிறேன். உனக்கென்ன, சுகமாகக் கண்டிக்கிருய். இதற்கு நீ ஏதாவது உதவினுல் கண்டித்தாலும் பொறுத்துக் கொள்ளுவேன்.

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்லை.
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்
கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே."

அந்தக் கையில் ஊமன் வெண்ணெயைக் காப்பது போலத்தான் இப்போது என்னிலையும் இருக்கிறது. நான் இதை யாரிடமும் சொல்ல முடியவில்லை. பேசாது மறந்து விடவும் முடியவில்லை. கையில் ஊமனைப்போல நானும் கலங்கினேன்—பின் தெளிந்தேன்—துணிவு கொண்டேன். அவளிடம் பேசத் துணிந்தேன்.

இன்றைக்குப் பேசாது திரும்புவதில்லையென்று ஒரு நாள் மாலை பூங்காவுக்குப் போனேன். அவள் பூவரசு மரத்தடியில் அமர்ந்துகொண்டு 'ஆலமும் அமுதமும்' என்னும் திரு. வி. க. நூலைப் படித்துக் கொண்டிருந்தாள். நான் புல் தரையில் வேறு பக்கமாகக் கொஞ்சந் தொலைவில் அமர்ந்துகொண்டு செய்தித் தாளைப் படித்துக்கொண்டிருந்தேன். எதை வாய்ப்பாகக் கொண்டு பேசுவது? என்று எண்ண மிட்டுக் கொண்டிருந்தேன். இரண்டு போக்கிரிப் பயல்கள் அவள் பக்கமாகச் சென்றார்கள். நான் அவர்களைப் பார்க்கக் கூடவில்லை. அவர்கள் அவளிடம் சென்று அநாகரிகமாகப் பேசியிருக்கிறார்கள்; அவள் எதற்கும் பதில் சொல்லாமல் படித்துக்கொண்டே இருந்திருக்கிறாள்; இந்த ஈனக் கழுதைகளை அவள் கண்ணெடுத்தும் காணவில்லை. ஓடும் நாயைக் கண் டால் துரத்தும் நாய்க்குக் கொண்டாட்டமென்பார் கள். முதலிலேயே அவள் ஏதாவது திட்டி இருந் தால் அவர்கள் போய் விட்டிருப்பார்கள். அவள் பேசாது இருந்ததால் பயப்படுவதாக அவர்கள் எண்ணிக்கொண்டு அதிகம் நெருங்க ஆரம்பித்தார் கள். கீழ்த்தரமான பேச்சுகளுடன் அவர்கள் நெருங்கி னார்கள். நான் சிந்தனையில் செயல்பட்டிருந்தேனாகை யால் எனக்கு அவை யாவும் கேட்கவில்லை.

அவள் உரக்கப் பேசுவதைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். அவர்கள் அவளுக்குத் தொல்லை கொடுப்பது தெரிந்தது. அதற்கு மேல் என்னால் பொறுமையுடன் இருக்க முடியவில்லை. ஓடினேன் அங்கு. அவர்கள் ஓரமாக ஒதுங்கி விட்டார்கள்.

நான் ஓடி ஒருவனை ஓங்கி ஒரு அடி கொடுத்தேன். இருவரும் ஓடிவிட்டார்கள்.

'நல்ல வேளையாக நீங்கள் வந்து எனக்கு உதவி செய்தீர்கள்; நன்றி!' என்று கூறி அருவருப்புடன் அவள் தலை குனிந்து கொண்டாள்.

நீ யாரம்மா? பல நாளாய் இங்கு இருக்கப் பார்க்கிறேன்.

'ஆமாங்கோ! நாங்கள் வெளியூர்; இங்கே வேலை செய்து பிழைக்க வந்திருக்கிறோம். எங்கப்பா வேலைக் குப் போயிருக்கிறார். அவர் ஏழு மணிக்குத்தான் வருவார். அவர் இல்லாத இந்த நேரத்தில் இந்தப் பயல்கள் வந்து இப்படிப் பயப்படுத்துகிறானுங்கோ!'

இதற்கு முன்புகூட அவர்கள் இப்படி நடந்திட் டாங்களா?

'ஆமாங்கோ! இது இரண்டாந் தடவைங்கோ! நீங்க இன்று பலமா அடிச்சிட்டதனால் இனிமேல் அவன்கள் வரமாட்டானுங்க; எனக்கும் இனிமேல் பயமிருக்காதுங்கோ!'

அதற்குமேல் எதைப்பற்றிப் பேசுவதென்று புரியாமல் சிறிது நேரம் மௌனமாக இருந்தோம். அவள் அச்சத்தால் தலைகுனிந்து தரையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு, முதலில் நானே, நீ படித் திருக்கிறாயாம்மா? என்றேன்.

'எட்டாவது வரை படித்தேன். அதோடு எங்கப்பா நிறுத்திவிட்டார். அதிலிருந்து இது போல பெரியவர்கள் எழுதிய நல்ல புத்தகங்களைத் தனியாகப் படித்துக்கொண்டு காலத்தைக் கழிக்கிறது வழக்கங்கோ!'

நீ வைத்திருக்கும் அந்தப் புத்தகம் யார் எழுதியது?

' திரு. வி. க. எழுதியதுங்கோ!'

யாரது திரு. வி. க? என்று தெரியாதவனைப் போல நான் கேட்டேன்.

'இன்னுங்கோ! சென்னையிலுள்ள உங்களுக்கு உண்மையில் திரு. வி. க. தெரியாதுங்களா? இவர் ஒரு தமிழ்ப்பெருந்தகை.'

நான் உள்ளூர உவந்தேன். நம்மைப்போலவே இவளும் திரு. வி. க. விடம் அன்பும் பெருமையும் கொண்டவளாக இருக்கிறுள் என்று எண்ணியவனுய் நகைத்தேன்.

அவரைத் தெரியும்; உனக்குத் தெரிந்திருக்கிறதா? என்று அறியத்தான் கேட்டேன். அவர் எழுதிய எல்லாப் புத்தகங்களும் என்னிடம் இருக்கின்றன. வேண்டுமென்றுல் கொடுத்தனுப்புகிறேன்.

'வேண்டாங்கோ! நான் எங்கப்பாவைக் கொண்டே வாங்கிக் கொள்ளுகிறேனுங்கோ' என்று

கூறி மறுத்து விட்டாள். அன்று முதல் நான் அவளிடம் தினமும் பழகிப் பேசி வந்தேன்.

அவளும் என்னைப்போலவே நெசவாளியின் மகளாம்; குடும்பச்சரிவால் இப்படிப் பிழைக்க வந்ததாகக் கூறினள். அதற்குப் பிறகு—பல நாளைக் குப்பின்—என் காதல் நிகழ்ச்சியைத் துணிந்து கூறினேன். அவள் துணுக்குற்ருள். அவள் தன் தந்தைக்கு அஞ்சுகிருள் என்று ஊகித்தேன். எங்கள் சந்திப்பு வளர வளர காதலும் வளர் பிறையாக வளர்ந்து வந்தது.

அடக்கம், அமைதி, கல்வியில் ஆர்வம், ஏழ்மை முதலிய—நான் நெடுநாளாய் எதிர்பார்த்து வந்த பண்பெல்லாம் ஒருங்கே அமையப் பெற்றவளாக அவள் இருந்ததால் நான் துணிந்து என் கருத்தை அவளிடம் கூறினேன். அவள் என்றும் என் கேள் விக்குப் பதில் கூறியதில்லை. யோசிக்கிருள் என்று எண்ணினேன்.

தமிழ்நாடு, தமிழ்மொழி, திரு. வி. க. நூல்கள் முதலியவற்றைப்பற்றியெல்லாம் அவள் தைரியமாக என்னிடம் பேசுவாள். ஆனல், குடும்பச் செய்தி யையோ, எந்த ஊர் என்பதையோ அவள் கூறிய தில்லை.

சனி, ஞாயிறுகளில் பேராசிரியர் வீட்டுக்கும், திரு. வி. க. வீட்டுக்கும் போய் விடுவதால் அவள் தம்பியை நான் சந்திக்க முடியாதவனுகிவிட்டேன்.

மற்ற நாட்களில் அவன் பள்ளிக்குப் போய் விடுகிருன். அப்படியே விளையாட்டு—ஆசிரியர் வீட்டில் படிக்க—இவையெல்லாம் முடிந்து அவன் இரவு ஏழு மணிக்குத்தான் திரும்பி வருவான். அதனுல் பையனைச் சந்திக்க முடியவில்லை.

ஆறு மாதமாக நாங்கள் சந்தித்துப் பழகி வந்தோம். ஒருவரையொருவர் நன்ருகப் புரிந்து கொண்டோம். அவளை நானும், என்னை அவளும் மனமார நேசித்தோம். அதை நான் வெளிப்படையாக அவளிடம் கூறியதும் உண்டு. அவளும் விரும்பி இருந்தாலும் வெளியிற் கூறியதில்லை. அதுதானே பெண்மையியல்பு! எங்கள் காதல் திங்கள் பிறையாக நாளும் வளர்ந்து வந்தது.

ஒரு நாள் மாலை நான் பூங்காவுக்குச் சென்றபோது அந்தக் குடும்பம் மரத்தடியில் காணப்படவில்லை. என் முதுகெலும்பு முறிந்துவிட்டதுபோல ஆகிவிட்டது. தேடினேன், தேடினேன்—சென்னை முழுவதும் தேடினேன். சல்லடையிட்டுச் சலித்துப் பார்த்து விட்டேன். எங்குத் தேடியுங் கிடைக்கவில்லை.

கைக்கெட்டியது வாய்க்கெட்டாது போனதுபோல ஆகிவிட்டது என் நிலை. நான் வருத்தப்பட்டேன் — வாடினேன் — வதங்கினேன் — பயன் என்ன? எப்படியாவது திரும்பி வருவாள்; அல்லது எங்கு இருப்பதையும் கடிதமாவது எழுதுவாள் என்று பல நாளாய் எதிர்பார்த்தேன். எதுவுமில்லை.

நான் எதிர்பார்த்த—எல்லாக் குணங்களும் நிரம்பியிருந்த—அவளைப்போல இன்னொருத்தி உலகில் இருக்க மாட்டாள் என்று வருந்தினேன். அவள் தந்தையிடம் பேசலாம் என்று எண்ணிக்கொண்டிருந்தேன் ; எல்லாம் வீணாயின.

பல மாதங்களாய் எதிர்பார்த்து ஏமாற்றத்துடன் சோர்ந்து கிடந்த என்னை இக்கடிதம் பம்பாய்க்குப் புறப்படச் செய்தது. இதை நானே படிக்கிறேன், கவனி!

பம்பாய்

அன்புள்ள முருகு அவர்களுக்கு,

அன்பரீர்!

என்னை மன்னிக்கும்படிப் பன்முறை வேண்டிக்கொள்ளுகிறேன். இதுபோன்ற பெரிய தவற்றை என் வாழ்நாளிலேயே செய்ததில்லை.

பெரும்பணக்காரராக இருந்தும் தாங்கள் ஏழையாகிய என்னிடம் அன்புகொண்டீர்கள். அதற்கு நன்றி.

எங்கள் குடும்பச் செய்தியைப் பற்றியும் என் திருமணத்தைப் பற்றியும் நீங்கள் என்னைப் பன்னாள் கேட்டீர்கள். நான் பதில் கூறவே இல்லை. முழுவதையும் கூறுகிறேன் :—

என் அத்தை மகன் ஒருவர் இந்த உலகத்தில் இருப்பதாகக் கேள்வி. அவர் எங்கு—எவ்வாறு

இருக்கிறார் என்பது யாருக்கும் ஒன்றும் தெரியவில்லை. அவரைத் தேடிக் கண்டு பிடிக்கவே என்னைக் கூட்டிக்கொண்டு என் தந்தை சென்னைக்கு வந்தார். அவர் எங்களுக்கு இது வரைக் கிடைக்கவில்லை. அவருக்கு என்னைக் கொடுத்துத் திருமணம் செய்து வைப்பதாக அவர் பெற்றோருக்கு என் தந்தை வாக்களித்தாராம். அதை நிறைவேற்ற என் தந்தை இன்று வரை ஆசைப்படுகிறார். அத்தான் கிடைக்கவில்லை. தேடினோம், தேடினோம்—சென்னையில் எங்கெங்கோ தேடினோம். அவர் கிடைக்கவில்லை,

என் தந்தைக்குச் சென்னையில் தினந் தோறும் வேலை கிடைக்காமையால்—பலநாள் நாங்கள் பட்டினி கிடந்தோம். ஆயினும் அயலாருக்குத் தெரியாது. என்றுமே அயலார் உதவியை நாங்கள் விரும்பியதில்லை.

பம்பாயில் ஆலைத்தொழிலுக்கு ஆளெடுப்பதாகக் கேள்வியுற்றுப் பலர் புறப்பட்டனர். அவர்களில் நாங்களும் மூவர். நான் என் தந்தையை மீறி நடக்கும் அளவுக்குப் பழக்கப் படாதவள். நான் ஏழையாக இருந்தாலும் நீங்கள் என்னைப் பூரணமாகக் காதலித்தீர்கள். ஆனால் நான் என் தந்தையின் கருத்தறியாது உங்களிடம் எதையும் கூறக்கூடாதென்று மறைத்து வந்தேன். அதனால்தான் நீங்கள் பன்முறை கேட்டும் நான் பதில் கூறவில்லை.

ஆயினும் எனக்கு நம்பிக்கை இருந்தது; அதனுல் தான் உங்களிடம் பழகி வந்தேன்.

திடீரென்று பம்பாய் பிரயாணம் வந்து விட்டது. என் தந்தை எனக்குப் பூரண உரிமையளிப்பவர். திருமணத்திலும் அளிப்பார் என்று நான் அன்றும் இன்றும் நம்பினேன், நம்புகிறேன். இதைக் கூறிப் பயணத்தைத் தடை செய்ய எனக்கு அப்போது துணிவேற்பட வில்லை. பம்பாய்க்குச் சென்றதும் தந்தையிடம் அனுமதி பெற்று உங்களை வரச்செய்யலாம் என்று நானும் உடன் புறப்பட்டு விட்டேன்.

நலமாக இருந்த குடும்பம் நாசமாகி விட்டது—வயிற்றுப் பிழைப்புக்காக வடக்கே வந்தோமே என்று என் தந்தை அளவில்லாது வருத்தப்பட்டார். அந்த வருத்தத்துக்கிடையில் நான் இதைக் கூறத் தயங்கினேன். அதன் பிறகு தங்கை மகனைக் கண்டறிவது இனி முடியாது என்று அவருக்கே உதித்தது. பின் என்னிடம் திருமணத்தைப் பற்றிக் கேட்டார். 'நீ இனி அத்தானை எதிர்பார்த்துப் பயனில்லை. உனக்குப் பிடித்தமான ஒருவனைச் சொன்னுல் விரைவில் திருமணத்தை முடித்து விடுகிறேன்' என்று கூறினுர். நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவிருக்க முடியுமா!

வந்து பல மாதங்களாகி விட்டன; இது வரை ஒரு கடிதங்கூட எழுதாது எந்தச் செய்தி

யையும் கூறுதிருந்தது நான் செய்த பெருந்தவறு கும். ஆயினும் எதையாவது துணிந்து எழுதிவிடவும் எனக்குத் துணிவு பிறக்கவில்லை. அதனுல் தான் இதுவரை நீட்டித்து வந்துவிட்டேன்.

நீங்கள் என்னைத் தேடி வருத்தப்பட்டிருப்பீர்கள். ஒரு கடிதமாவது எழுதியிருந்தால் எவ்வளவு ஆறுதலாக இருந்திருக்கும்! என்று நீங்கள் எண்ணுவீர்கள்; உங்கள் நிலைக்கு அவ்வாறு எண்ணுவது இயல்புதான். ஆனுல், என் நிலையில் இருந்து நோக்கினுல் எப்படி எழுத முடியும்? என்பது தெரியும், நீங்கள் என்னைக் கட்டாயம் எதிர்பார்த்துக் கொண்டிருப்பீர்கள் என்ற ஒரு குருட்டு நம்பிக்கை என்னை விட்டு நீங்கவில்லை. அது இருப்பதால்தான் இக்கடிதம் எழுதப்படுகிறது.

இதய பீடத்தில் உங்களை ஏற்றுக்கொண்ட பிறகு அவ்விடத்தில் என் கனவிலும் வேறு யாரையும் இதுவரை யமர்த்தவில்லை; இனியும் அமர்த்தமாட்டேன். உங்களையே நம்பி இருக்கின்றேன். என் நம்பிக்கை வீணுகாது என்பதில் எனக்கு இன்னமும் நம்பிக்கை இருக்கிறது. அது அற்றுப்போனுல்—பொது வாழ்வில் ஈடுபட்டுத் தொண்டாற்றி கன்னியாகவே வாழ முடிவு செய்துள்ளேன்.

என் தந்தை நேற்றுதான் என்னிடம் என் யோசனையைக் கூறும்படிக் கேட்டார். நேற்றி

லிருந்து யோசித்து இதை உங்களுக்கு எழுதினேன். இன்று இரவு என் கருத்தை என் தந்தைக்குக் கூறுவேன். அதன் பிறகு அதையும் எழுதுகிறேன்.

இறுதியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்; என் தவற்றை மன்னித்து விடுங்கள். நாளை மறுநாளில் நாங்கள் வேறு வீட்டுக்குக் குடி போவதாக இருப்பதால் பிறகு முகவரியுடன் எழுதுகிறேன்.

அன்புள்ள
**வானமுது.**

உடனே முகவரியுடன் வேறு கடிதம் எழுதுவதாக இதில் குறித்திருக்கிறது. ஆனால் ஏதனாலோ ஒரு வாரமாகியும் கடிதம் வரவில்லை. இவள் தந்தை இங்கு எந்த ஆலையில் வேலை செய்கிறார் என்பதை உன்னைக் கொண்டுதான் தெரிந்துகொள்ள முடியும் என்று எண்ணி உடனே உனக்குக் கடிதம் எழுதினேன். நாளைக்கு இவர்களைச் சென்று கண்டு பிடிக்க வேண்டும் என்றேன் நான்.

'அவள் தந்தை, தம்பியின் பெயர்கள் உனக்குத் தெரியுமா?' என்றார் கண்ணப்பர்.

அவள் எதையுங் கூறியதே இல்லை. ஆயினும் தம்பியைச் சிதம்பரம் என்றோ, சிற்றரசு என்றோ ஒரு முறை கூப்பிடக் கேட்டேன். அதற்குமேல் எனக்கு ஒன்றும் தெரியாது. அவள் பெயர் மட்டும் வானமுது என்று அன்றிலிருந்தே தெரியும்.

'உலகில் எத்தனை வானமுதோ?' என்று வெறுப்பாகக் கூறினர் நண்பர்.

அப்போது உமக்கு யாராவது ஒரு வானமுது தெரியும் போலிருக்கிறது! நாளைக்கு அவர்களைத்தான் சென்று பார்ப்போமே என்றேன் நான். அப்போது நண்பர் துக்கப்படுவதாகத் தெரிந்தது.

தலை கவிழ்ந்து கொண்டு எதையோ சிறிது நேரம் யோசித்துக்கொண்டிருந்தார். பிறகு 'மணி ஒன்ருகி விட்டது. படுத்துத் தூங்குவோம்; மேற்கொண்டு நாளைக்கு ஆராய்வோம்' என்ருர் நண்பர்.

சரியென்று அதை நானும் ஆமோதித்து இருவரும் படுத்துக் கொண்டோம். உடல் படுத்துக் கிடந்தாலும் உள்ளம் ஓயவில்லை. அதன் பிறகு எந்நேரம், எவ்வாறு இருந்தேன் என்று ஞாபகமில்லை.

காலையில் நான் எழுந்தபோது நண்பர் எனக்கு முன்பே எழுந்து விட்டிருந்தார். கையால் எழுதப்பட்ட ஒரு காகிதக் கட்டை விரித்துப் படித்துக் கொண்டிருந்தார். அவர் ஆழ்ந்து சிந்தித்துப் படிப்பதாகக் காணப்பட்டார். முதலில் நான் நாட்குறிப்போ என்று எண்ணினேன். அவர் அருகில் நாற்காலியில் அமர்ந்தபோது, நேற்றுப் புத்தகக் கட்டுபோல வந்திருந்ததே அதுதான் இது என்பதை அதன்மேல் உறை மேசைமீது இருந்து அறிவித்தது. எதைப்பற்றியதோ? எழுதியவர் யாவரோ? என்று நான் எண்ணமிட்டவனய்ச் சிந்தித்தேன். அப்

போது மணி ஆறரை ஆகி இருந்தது. நண்பர் அதைப் படித்து முடித்துவிட்டுத் திரும்பினர். ஆழ்ந்த சிந்தனையும்—வருத்தமும் அவர் முகத்தில் அமைந் திருந்தன. சிறிது நேரம் அமைதி நிலவியது.

நேற்றுப் புத்தகம் என்றீர்; கையால் எழுதப் பட்டிருக்கிறதே! புத்தகம் வெளியாவதற்கு முன்ன மேயே உம் கருத்தறிய நண்பர்கள் அனுப்பி இருக் கிறார்களா?

'புத்தகமல்ல இது—ஒரு நண்பர் எழுதிய கடி தம்—அவருடைய சோகச் சரிதை' என்று சிறிது வருத்தத்துடன் கூறினர் நண்பர்.

இப்போது சரிதமெல்லாம் வேண்டாம்; வான முதைத் தெரியுமென்றீர்களே? அவர்கள் எங்கே இருக்கிறார்கள்? காலையே போய்ப் பார்த்துவிட்டு வருவோமா? என்றேன் நான்.

'சீக்கிரம் சென்று பார்க்க வேண்டியதுதான்! நாம் விரைவாகக் காலைக் கடமைகளை முடித்துக் கொண்டு ஓய்வாகப் பேசலாம்' என்றார் நண்பர்.

பேசுவதற்கு என்ன இருக்கிறது?

'நிறைய இருக்கிறது! விவரமாகப் பேசலாம்; முதலில் கடமைகளைக் கவனிப்போம்' என்றார். பிறகு இருவரும் சென்றோம்.

சிற்றுண்டி யுண்ணும்போது மீண்டும் நான் அதைத் தொடர்ந்தேன். நண்பர் அப்போதும்

ஆழ்ந்த வருத்தத்துடன் காணப்பட்டார். பேச வேண்டுமென்றீரே எதைப்பற்றி? என்றேன் நான்.

'நீர் யாரைத்தேடி வந்தீரோ—அவரைப்பற்றித் தான்! நான் இப்போது படித்துக்கொண்டிருந்த கடிதமும் அவர்களைப் பற்றியதுதான்!'

என்ன? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!

'விளங்காது! எப்படி விளங்கும்? அதைப் படித்தால் எல்லாம் நன்றாக விளங்கி விடும். எல்லாவற்றுக்கும் பதில் அதில் இருக்கிறது. முதலில் அதைப் படித்துப் பாருங்கள்.'

## நடேசன்

பம்பாய்.
நடேசன்.

அன்புள்ள **கண்ணப்பருக்கு**, வணக்கம்.

அன்பரே!

ஏழைகளான எங்களிடம் காட்டிய உங்கள் அன்புக்குக் கோடி கோடி வணக்கம். சேற்றில் முளைத்த செந்தாமரை போலவும், முள்ளுக்கிடையில் தோன்றும் ரோசாப்போலவும் பெரிய பதவிகளிலுள்ளவருக்கிடையில் நீங்கள் அன்புருவாகக் காணப்பட்டீர்; பணமும், படிப்பும் இருந்தும் பாமரரிடம் பரிவுகாட்டும் உங்கள் பண்புக்கு எத்தனை வணக்கம் செலுத்தினும் இணையாகா!

எங்கள் வாழ்க்கையை—சோகச் சரிதையை—அறிய நீங்கள் பன்முறை முயன்றீர்கள். ஆனால் நான் சிறிதுங் கூறாது மறைத்து வந்தேன்.

மறைக்குந்தோறும் மறைக்குந்தோறும் நீங்கள் மன்றாடிப் பார்த்தீர்கள்! உங்கள் மனம் அமைதியடைய வேண்டி எங்கள் எல்லாச் செய்திகளையும் கூறிவிடுகிறேன். என் சிங்காரச் சிட்டுகளை மகிழவைக்க முடியாத நான், உங்களையாவது மகிழச் செய்வோம் — அறிய வேண்டுமென்று ஆவல் கொண்டீரே, அந்த ஆவலை அடக்குவோம்—என்று இதை எழுதுகிறேன்.

முருக்கம்பட்டிக் கிராமம் என் சொந்த ஊர். அது வடாற்காடு மாவட்டத்தில், இராணிப் பேட்டையை அடுத்திருக்கிறது. அதில் எங்கள் முன்னோர் செல்வமும் சிறப்புமாக வாழ்ந்து வந்தனர். என் தந்தைக்கு நான்கு ஏக்கர் நன்செய் நிலமும், சுமாரான ஒரு வீடும், துணிக் கடையும் இருந்தன. எங்கள் குடும்பத்தில் நான் ஒரே ஆண் மகனும், என் தங்கை நீலா ஒருத்தியும் பிறந்தோம். என்னை என் பெற்றோர்கள் பத்தாவது வரை படிக்க வைத்தார்கள். நான் பெரியவனாவதற்குள் எங்கள் செல்வம் சிதையத் தொடங்கியது. எஞ்சி நின்றது வீடும், நிலமுந்தான். நாங்கள் நெசவாளிக் குடியைச் சேர்ந்தவர்கள். வளமான நிலமும், சீரான தொழிலும் எங்களைக் கண்யமாகவே காத்து வந்தன. எனக்கு நெசவு, விவசாயம் இரண்டு தொழிலிலும் பழக்கமுண்டு. நான் இரண்டு தொழிலையும் இன்பமாகவே செய்து வந்தேன்.

அருமைத் தங்கையை என்னிடம் ஒப்படைத்துவிட்டு பெற்றோர் பிரிந்து விட்டார்

கள். நானும், என் அன்பு மனைவி தங்கமும் என் தங்கையைக் கண்ணைக் காத்து வந்தோம். சோளிங்கபுரத்தில் எங்களுக்கு உறவினர் இருந்தனர். அவர்களில் அருணசலம் என்பவருக்கு என் தங்கை நீலாவைத் திருமணம் செய்து கொடுத்தோம்.

சிலவாண்டுகளுக்குள் என் தங்கை ஒரு சேயுக்குத் தாயாகி விட்டாள். அதுவும் ஆண் குழந்தை. நானும் என் மனைவியும் மிகவும் சந்தோஷமடைந்தோம். அண்ணிக்குக் குழந்தையில்லையே என்று நீலா வருந்துவாள். நான்கு வருடங்கட்குப்பின் அக்குறையும் நீங்கி விட்டது. வானமுதும், சிற்றரசும் பிறந்தார்கள். இரு குடும்பத்தாரும் இன்பமாக இருந்து வந்தோம். ஆனல்.........காலம் விட்டு வைக்கவில்லை.

திடீரென்று என் தங்கை நீலா இறந்து விட்டாள். அத்துயரம் எங்கள் அத்தனைபேரையும் அச்சுறுத்திவிட்டது. அருணசலத்தை எவ்வளவு வற்புறுத்தியும் மறுமணம் செய்து கொள்ள இசையாது போனன். தங்கையின் பிரிவைத் தங்கை மகன் முத்து நீக்கி வந்தான். தாயிறந்தபின் முத்துவை என் வீட்டில் கொண்டு வந்து வளர்த்தேன். பள்ளியிலும் சேர்த்தேன்.

அருணசலம் சோளிங்கபுரத்தில் இருந்த தன் வீட்டையும் விற்றுவிட்டு—எங்காவது சென்று காலங்கடத்தும் முடிவுடன், என் வீட்டுக்கு வந்தான். நாங்கள் எவ்வளவு தொந்தரவு

செய்தும் அவன் கேட்கவே இல்லை. 'என் வீட்டிலேயே முத்துவும் நீயும் இருங்கள்' என்று கூறி மன்றாடினோம். அவன் முரட்டுச் சுபாவம் உடையவன். மறுத்துவிட்டான். மகனையாவது எங்கள் வீட்டில் விட்டுச் செல்லுங்கள்! சிறுவன் வாழ்வு சிதைந்துவிடுமே! கல்வி இல்லாது கெட்டு விடுவானே! என்றெல்லாம் சிந்திக்கு மாறு எடுத்துக் கூறினோம். நாங்கள் அவனை வளர்த்து—அழகாகப் படிக்க வைத்துப் பின் வானமுதைக் கொடுத்துத் திருமணமும் செய்து வைக்கின்றேன். முத்து எங்களிடமே இருக்கட்டும் என்று வேண்டினோம்.

அருணசலம் எதற்கும் இசையவில்லை. மகனை அழைத்துக்கொண்டு போய்விட்டான். அவன் போகும்போது கூறினான்:—'நான் எங் கிருந்தாலும்—எப்படி வாழ்ந்தாலும் என் மக னைக் கண்ணுங் கருத்துமாகக் கவனித்துக்கொள் வேன்—படிக்க வைத்து விடுவேன். அவனுக்கு உரிய வயது வந்ததும் உன் மகள் வானமு தையே அவனுக்குத் திருமணம் செய்து வைக் கிறேன். இது உறுதி; இதை என்றும் மற வேன்!' என்று கூறி எங்களிடமும் உறுதி பெற்றுச் சென்றான். அவர்கள் எங்கெங்கோ திரிந்திருக்கிறார்கள். அவர்கள் பல ஊர்களி லிருந்து போக்கிய கடிதங்களால் அதைத் தெரிந்துகொண்டேன். பல மாதங்கள் வரைக் கடிதமெழுதிக் கொண்டிருந்தான் அருணசலம். நானும் பதில் கடிதம் எழுதிக்கொண்டிருந்தேன்.

அதற்குமேல் அருணாசலம் கடிதம் எழுதுவதை யும் நிறுத்திக்கொண்டான். நான் எப்படி முயன்றும் இதுவரை அவர்கள் எங்கிருக்கிறார் கள் என்பதைத் தெரிந்துகொள்ள முடிய வில்லை.

தங்கை இறந்தாள்; தங்கை மகனும் பிரிந் தான்; எங்கிருப்பதும் தெரியவில்லை. இந்த வருத்தத்தில் நாங்கள் ஆழ்ந்திருந்தோம். அப் போது எனக்குக் கொஞ்சம் கடன் இருந்தது.

இரண்டு நாள் வயிற்று வலியாகப் படுத் தாள் என் மனைவி. படுத்தவள் படுத்தவளே! மூன்றாம் நாள் கண்ணை மூடி விட்டாள். சித்தங் கலங்குமளவுக்கு நான் சிதறி விட்டேன். ஆயி னும், குழந்தைகள் வருந்துமே! என்று என் வருத்தத்தை மறந்து வந்தேன்.

இருமக்களையும் நன்றாகப் படிக்க வைக்க விரும்பினேன். வானமுது எட்டாவது வரை படித்தாள். அதற்குமேல் எங்கள் ஊரில் பள்ளி வசதியில்லாமையால் — வெளியூருக்கு அனுப்பி வைக்க வேண்டும். அப்படி அனுப்பிப் படிக்க வைக்க வீட்டில் பெண் துணையும், பொரு ளாதார வசதியும் இல்லாமையால் அத்துடன் வானமுதை நிறுத்தி விட்டேன். அவளுக்கு நல்ல புத்தகங்கள் வாங்கிக்கொடுத்துப் படிக்க இன்று வரை வசதி செய்து வந்தேன்.

கடன் அதிகமாகி விட்டது—வட்டி விஷம் போல ஏறியது. இதுதான் சந்தர்ப்பமென்று

கடன் கொடுத்தவர்கள் நெருக்க ஆரம்பித்தனர். வேறு வழியின்றி நிலத்தை விற்றுக் கடனை யடைத்து விட்டேன். வீட்டோடு இருந்து எங்குடித் தொழிலாள நெசவு வேலையை மட்டும் செய்து வந்தேன். போர்க் காலத்தில் எங்கள் தொழிலுக்கு நல்ல வருமானம் இருந்தது. ஆயினும் போதிய நூல் கிடைக்காமையால் அப்போதும் சாதாரண வருமானத்துடன் நான் என் குடும்பத்தை நடத்தி வந்தேன். போருக்குப்பின் எங்கள் நெசவுத் தொழில் நசிந்து விட்டது. நெசவாளிகள் எல்லாம் பிச்சைக்காரராகும் நிலை ஏற்பட்டு விட்டது. வளமான நிலையிலிருந்த அக்குடி மக்கள் இன்று வளமிழந்து நடுத்தெரு நாராயணர்களாகி—நடை பாதைகளில் நல்லவர்க்கு இடையூறு செய்பவர்களாக மாறி விட்டார்கள்! பிறர்க்குப் பிச்சையளித்த அவர்கள் கைகள் இன்று பிறரிடம் பிச்சைக்காக ஏந்தி நிற்கின்றன! பிற ஏழைகளுக்குக் கஞ்சியூற்றிய அப்பெருங்குடி மக்கள் இன்று கஞ்சித் தொட்டிகளில் காலங்கழிக்க நேர்ந்துவிட்டது!

மிராசுதாரர் ஒருவரிடம் கொஞ்சம் நிலத்தைக் குத்தகைக்குப் பெற்று நான் பயிர்த் தொழில் செய்து வந்தேன். நானும் வானமுதும் நிலத்தில் நன்ருக உழைத்து வந்தோம். மிராசுதாரர் வழக்கம்போல ஒரு நாள் அங்கு வந்தார். அப்போது அவர் வானமுதைப் பார்க்க நேரிட்டது. அவர் காம வயப்பட்ட கண்மூடி! இளமை எழில் மிக்க வானமுதைப் பார்த்த

போது அவனுக்கு என்னவோ செய்தது. ஏதேதோ எண்ணமிட்டான். வானமுதைக் காட்டி 'இவள் யார்?' என்று அவன் கேட்ட போதே நான் உணர்ந்து கொண்டேன், அவன் உள்ளக் கருத்தை. அன்றிலிருந்து அவன் எங்க ளிடம் காட்டும் அதிக அன்புக்குக் காரணமுங் கூற வேண்டுமா? என் வீட்டுக்கும் நிலத்துக் கும் அவன் அடிக்கடித் திரிய ஆரம்பித்தான். நான் இல்லாதபோது அவன் ஒரு நாள் என் வீட்டுக்கு வந்து வானமுதிடம் ஏதோ கேட் டிருக்கிருன்; அவள் அவனைத் திட்டி அனுப்பி யிருக்கிருள்; அவன் எதையோ கூறிப் பயமுறுத்தி யிருக்கிருன்.

நல்ல வேளையாக அப்போது நான் வீட்டுக் குப் போனேன். தேள் கொட்டிய திருடனைப் போல அவன் 'திருதிரு' என்று முழித்தான். என்னையறியாது எனக்குக் கோபம் வந்து விட் டது. வானமுது உள்ளே விக்கி அழுவது கேட்டதும் எனக்குக் கோபம் பன்மடங்காகப் பெருகியது. ஏழைகள் என்ருல் உங்களுக்குக் கிள்ளுக்கீரைதான? அவர்களுக்கும் ஒழுக்கம் என்பது வேண்டாமா? பணமிருந்து விட்டால் ஏழைகளை என்ன வேண்டுமானலும் செய்யலாம் என்பது உங்கள் எண்ணமா? அயோக்கியப் பயலே! வெளியே போகிருயா—கழுத்தைப் பிடித்துத் தள்ளட்டுமா? என்று கோபாவேசத் துடன் நான் திட்டினேன். உருமிக்கொண்டே

அவன் வெளியேறினான். நான் அழுதுகொண்டிருந்த வானமுதைத் தேற்றினேன்.

வெந்த புண்ணில் வேலிடுவதுபோல அவன் மூன்றாந்தாரமாக வானமுதைப் பெண் கேட்கும்படி ஆளனுப்பினான். ஒன்றுமே இல்லாவிட்டாலும் ஊரார்கள் 'குசு குசு' என்று பேசத் தொடங்கினார்கள். முதலில் அது எனக்குத் தெரியாது. ஏற்கெனவே நொந்த மனதை அவர்கள் மேலும் நோகச் செய்தார்கள். அந்த ஊரே எனக்குச் சுடுகாடாகக் காணப்பட்டது. இனி இந்த ஊரிலேயே இருக்கக்கூடாதென்று நான் முடிவு செய்து விட்டேன். அப்போதும் எனக்குக் கொஞ்சம் கடனிருந்தது. வீட்டை விற்றுக் கடனைத் தீர்த்துவிட்டு எஞ்சிய தொகையுடன் தங்கை மகனைத் தேடப் புறப்பட்டேன். குழந்தைகளையும் உடனழைத்துக்கொண்டு எங்கெங்கோ சுற்றினேன்; அலைந்தேன்—சோர்ந்தேன். நாங்கள் தேடித்தேடி அலைந்த கதையை எழுத்தால் எழுதி விளக்க முடியாது; சொற்கள் கிடைக்கவில்லை. சிற்றரசின் படிப்புச் சிதறிவிடும் போலிருந்தது. அதனால் அனாதைகளாக சென்னையில் சில காலம் வாழ்ந்தோம். அங்கு இருக்க இடமின்றி—பகலில் பூங்காவிலும், இரவில் ஒரு பஜனை மடத்திலுமாக ஆறு மாத காலத்தைக் கழித்தோம்.

இடந்தெரியாத ஆளை எங்குச் சென்று தேடுவது? வேறு யாருக்காவது வானமுதைக்

கொடுத்து ஏன் திருமணத்தை நடத்தக்கூடாது? என்று நீ எண்ணலாம்!

எப்படியும் முத்து கிடைத்து விடுவான் என்ற நம்பிக்கையால் நான் தேடினேன். என்னைப்போலவே வானமுதுக்கும் தேடுவதில் அன்பும் ஆர்வமும் இருந்தது. அதனால்தான் நான் மேலும் மேலுந் தேடத்தொடங்கினேன். சென்னையில் நாள் முழுதும் வேலை தேடுவதற்கே நேரம் சரியாக இருந்ததால் முத்துவைத் தேடுவதில்—அவனைப்பற்றிப் பேசுவதைக்கூட-நாங்கள் குறைத்துக்கொண்டோம். அதற்கும் வானமுது தான் காரணம்.

சென்னைக்கு வந்த சில நாளைக்குப் பிறகு வானமுதிடம் ஒரு புதுப் போக்கைக் காணத் தொடங்கினேன். மாலையில் திரும்பி வரும் போதே 'அத்தானைப்பற்றி இன்று ஒன்றும் தெரியவில்லையாப்பா?' என்று தினமும் கேட்டு வருபவள், இப்போது அத்தானை அவள் அடியோடு மறந்து விட்டாள். கேட்கவேயில்லை. அதன் காரணத்தை நானும் கேட்டதில்லை. காலையெழுந்ததும் வேலை வேலையென்று மூலை தோறும் திரிந்து, இரவு ஏழு அல்லது எட்டு மணிக்குப் பத்தரைவோடு வீடு திரும்புவேன். சில நாட்களில் வெறுங்கையுடனும் வீடு திரும்புவதுண்டு. அன்றைய ராத்திரி எங்களுக்குச் சிவராத்திரிதான்! நம்மை வாட்டும் வறுமை மக்களையுந்தானே வறுத்துகிறது! இந்த நிலையில்

அத்தானைக் கேட்டு அப்பாவுக்குத் தொல்லை கொடுக்கக்கூடாதென்று வானமுது அடியோடு விட்டுவிட்டாள் என்று நான் எண்ணி வந்தேன். இவ்வாறு வேலையின்றியும், வேளாவேளையில் உணவில்லாமலும் நாங்கள் சென்னையில் தொல்லை பட்டுக் கொண்டிருந்தபோதுதான் பம்பாயில் ஆலைத் தொழிலுக்கு ஆளெடுப்பதாகக் கேள்வி யுற்றோம்.

வயிறு எங்களை விரட்டியடித்தது. பம்பாய்க்கு மட்டுமல்ல—சோறு போடுவதாக நரகத்துக்குக் கூப்பிட்டிருந்தாலும்—நாங்கள் அப்போது பேசாது நடந்திருப்போம். சீரான தாய் நாட்டில் பேரான குடும்பத்திலுதித்த நாங்கள் சோற்றுக்கு வழியின்றிப் பம்பாய்க்குப் பறந்து வந்தோம். நாங்கள் பம்பாய்க்கு வந்ததிலிருந்து எங்களைப்பற்றி உங்களுக்குத் தெரியும்!

ஒரு வருடம் துன்பமில்லாமல் பம்பாயில் கழிந்தது. இடையிடை சிதறிவிட்ட எங்கள் குடும்பத்தைப் பற்றியும், முத்துவைப் பற்றியும் நான் எண்ணிக் கொள்வதுண்டு. ஆனால், வானமுது ஒரு நாள்கூட அத்தானைக் கேட்கவே இல்லை—நினைத்ததாகவும் தெரியவில்லை. அவள் கருத்தை யறிய ஒரு நாள் நான் வானமுதைக் கேட்டேன்.

வானமுது! காலங் கடந்துகொண்டே இருக்கிறது; உன் திருமணத்தைப் பற்றித்தான் எனக்குப் பெரிய கவலையாக இருக்கிறது. உன்

கருத்து என்ன என்று நான் கேட்டேன். அவள் அதற்கு முன்—சென்னை, வேறு இடங்களில் இருந்ததுபோல அப்போது காணப்படவில்லை. அவள் ஆழ்ந்து சிந்தித்தாள்.

உன் அத்தானை இதுவரை எதிர்பார்த்தோம். இனி அவனைப் பார்த்துக் கொண்டிருப்பதில் பயனில்லை. பம்பாயிலோ, அல்லது தமிழ் நாட்டிலோ உனக்குப் பிடித்தமானவனைத் தேர்ந்தெடுத்துக் கூறினால் திருமணத்தை விரைவில் முடித்து விடலாம். இதில் நான் உன் விருப்பத்துக்கு மாறாக எப்போதும் நடக்க மாட்டேன். நீயோ அறிவுடைய—வயதடைந்த பெண்; அதற்குமேல் நான் உனக்கு ஒன்றுங்கூறவேண்டியிருக்காது. நன்றாகச் சிந்தித்து உன் முடிவைக் கூறினால் நான் அதற்கேற்ப நடப்பேன் என்று கூறினேன்.

மறுநாள் வானமுது தன் கருத்தைத் தைரியமாகக் கூறினாள். சென்னையில் ஒரு நல்ல மனிதராம்; படித்த—பணக்காரக் குடும்பத்து—இளைஞர் ஒருவர் வானமுதைக் காதலித்தாராம். அவர் பல நாளாய் வேண்டியும் இவளே எதையுங் கூறாது மறுத்து வந்ததாகவும், அவரை மணந்துகொள்ள வானமுது விரும்புவதாகவும் தெரிந்தது. சென்னைக்குச் சென்று அந்த மனிதரைப் பார்த்துவிட்டு வரத் தீர்மானித்தேன். அவரைப் பம்பாய்க்கு வரவழைக்கலாம் என்றாள் வானமுது. சென்னைக்குச் சென்றால் அவரை

நேரில் பார்ப்பதோடு மற்றவர்களைக் கொண்டும் நன்ருகத் தெரிந்துகொள்ளலாம் என்றுங் கூறி இன்னும் இரண்டு நாட்கள் கழித்து நான் சென்னை செல்வதென்று நாங்கள் முடிவு செய்தோம்.

தாராவிப் பகுதி முழுவதும் காலரா நோய் கவ்விக்கொண்டது. சிலர் இறந்தனர். பலர் பயந்து வெளியூர்களுக்கு ஓடியொளிந்தனர். இந்த நிலையில் எங்கள் சிற்றரசுக்கு அந்த நோய்க்குறி தென்பட்டது. உடனே அவனை மருத்துவமனையில் சேர்த்து நானும் துணைக்கு அங்கேயே இருந்துவந்தேன். பக்கத்து வீட்டுப் பலராமன் துணைக்கு இருந்ததால் வானமுதை வீட்டிலேயே விட்டுச் சென்றிருந்தேன். இந்தச் சமயத்தில் எங்கள் ஊர்க்காரனுன முனியாண்டி என்னைத் தேடிக்கொண்டு வீட்டுக்கு வந்திருக்கிருன். வானமுதுக்கு அவனும் துணையாக வீட்டில் இருந்தான்.

முரட்டுப் பயல் பீமையாவால் நடத்தப் பட்ட துரோகச் செயல் யாவற்றையும் பலராமன் உமக்குச் சொல்லியிருப்பான். நான் மருத்துவமனையில் மகனுயிர்க்காக மன்ருடிக் கொண்டிருந்தபோது ஒரு நாள் இரவு பதிைேரு மணியிருக்கும்; என் மகன் இன்றைய இரவைக் கடத்துவது கடினம். விடிவதற்குள் அவன் மடிந்து விடுவான் என்ருர் மருத்துவர். குறித்த நேரத்தில் தவிர மற்ற நேரத்தில் நான் மகனைப்

பார்க்க முடியாதவனுக இருந்தேன். இப்போதே மகனைக் கொடுத்து விடுங்கள் என்று எவ்வளவு கெஞ்சியும், பெரிய டாக்டர் இல்லாமல் அது என்னுல் முடியாது என்று அவர் மறுத்து விட்டார். காலை எட்டு மணிக்கு வந்தால்—உயிருடனே—பிணமாகவோ—எடுத்துச் செல்லலாம்; அதற்குள் தரமுடியாது என்றும், எட்டு மணிக்குப் பிறகு நேரங்கழித்து வந்தால் புதைத்து விடக் கூடுமென்றுங் கூறினுர். அவர் கூறிய விதம் என் மகன் பிழைப்பது அரிது என்பதை உறுதிப் படுத்திற்று.

முனியாண்டியையும், வானமுதையும் துணைக்கு அழைத்து வருவது என்று இரவில் நான் வீட்டுக்குச் சென்றேன். பீமையா தவருகக் கூறிக் கடத்திச் சென்றதைப் பலராமன் மூலம் அறிந்தேன். பலராமனை மருத்துவச் சாலைக்கு அனுப்பிவிட்டு நான் புகைவண்டி நிலையத்துக்குப் போனேன். அப்போது மணி நான்கு ஆயிருந்தது. மகனைத் தேடினேன்! பெட்டி பெட்டியாக வண்டி முழுவதும் தேடினேன். ஒரு மணி நேரமாக—ஒவ்வொரு ஆளாக—வண்டி, நிலையம் எல்லாந் தேடினேன். கிடைக்கவில்லை. மணி ஐந்தாயிருந்தது. அதற்குமேல் என்னுல் அங்கிருக்க முடியவில்லை. நேராக மருத்துவச் சாலைக்குப் போவதென்று புறப்பட்டேன். பின்னிருள். சிறு தூரல் வேறு போட்டுக்கொண்டிருந்தது. நான் நடந்துகொண்டிருந்தேன். எண்ணம் எதையெதையோ சிந்தித்துக்கொண்

டிருந்தது. நான் எப்படியோ வழி தவறி ஆலைப் பக்கம் போய்விட்டிருக்கிறேன். வழியிலுள்ள டீக்கடையைப் பார்த்தபோதுதான் எனக்குத் தவறான வழியில் நடந்துகொண்டிருப்பது புலனாயிற்று. அங்கிருந்து திரும்பிக் கொண்டிருந்தேன். வெளிச்சமாகிக் கொண்டிருந்தது.

ஒரு மரத்தடியில் யாரோ முக்கிக் கொண்டிருப்பது கேட்டது. அருகில் சென்று ஆளைத் தடவிப் பார்த்தால் குற்றுயிராக நம் முனியாண்டி கிடந்தான். அப்போதே எனக்கு இடுப்பொடிந்ததுபோல ஆகிவிட்டது. அவனை நன்றாகப் பார்த்ததில் துடையில் பிச்சுவாவால் குத்தப் பட்டிருந்தது. அவனை அப்படியே வீட்டுக்குத் தூக்கிக்கொண்டு வந்தேன். பலராமன் துணையால் அவனையும் மருத்துவ மனையில் சேர்த்தேன்.

மகனைக் காண மருத்துவ மனைக்குப் போனேன். நேரமாகிவிட்டிருந்தது. அதற்குள் என் மகன் அடக்கஞ் செய்யப்பட்டிருந்தான். அதைக் கேட்டுத் துக்கத்துடன் மீண்டேன். என் தங்கை மகன் மாம்பலத்தில் பெரிய பணக்காரனாக இருப்பதாக முனியாண்டி கூறியதாகப் பலராமன் சொன்னான். மகனைத்தான் காண முடியாதுபோய் விட்டதே! மகள் பிணத்தையாவது காணலாம் என்று முனியாண்டி விழுந்துகிடந்த பக்கம் சென்று தேடினேன். வானமுது இறந்துதான் இருக்கவேண்டும் என்று முனியாண்டி

கூறியது உறுதியாகி விட்டது. அவள் கட்டி யிருந்த சேலையின் கிழிசல் துண்டும், தலை மயி ருடன் கூட்டி முடிக்கும் சவுரி மயிரும், சில வளை யல் துண்டுகளும் அங்குக் காணப்பட்டன. என் இரு கண்களும் குருடாகி விட்டன. கண்ணற்ற குருடனுக—கபோதியாக—இந்த உலகில் எப்படி வாழ முடியும்! நீங்களே எண்ணிப் பாருங்கள்! நடந்த செய்திகள் பலவும் உமக்குப் பலராமன் மூலம் தெரிந்திருக்கும்.

நான் அன்று பிற்பகல் வானமுதின் பெட்டி யைச் சோதித்தேன். அவளால் எழுதப்பட்ட சில கடிதங்கள் மறந்தோ-மறைத்தோ-வைத்த அவை அவள் எண்ணங்களைத் தெரிவித்தன. அதைப் பார்த்தபின் எனக்கு மேலும் வருத்த மாக இருந்தது. சென்னையில் இருந்த ஒரு இளைஞனைக் காதலித்திருக்கிருள்; அவனுக்குத் தன் கருத்தைத் தெரிவிக்காமல் எனக்காக மறைத்து வந்திருக்கிருள். அவனுக்குச் சொல்லா மல் என்னுடன் பம்பாய்க்கு வந்துவிட்டதனல் அவனுக்கு மன்னிப்புக் கடிதம் எழுதி அதை அனுப்பாமலேயே பெட்டியில் வைத்து விட் டிருந்தாள். அதுவும் பம்பாய்க்கு வந்த ஆரம் பத்திலேயே எழுதப்பட்டிருந்தது. அதைச் சென்னையிலேயே வானமுது சொல்லியிருந்தால் திருமணமாவது செய்து முடித்திருக்கலாம். அதைச் சொல்லாமல் மறைத்தது எனக்கு வருத் தத்தைத்தான் தந்தது. மூத்துவையோ அல்

லது அவள் காதலனையோ கண்டு பிடித்து நடந்த நிகழ்ச்சிகளைக் கூறலாம் என்று சென்னைக்குச் செல்லுகிறேன்.

நாம் சந்திக்கும் போதெல்லாம் நீங்கள் கூறுவீர்கள். அடிக்கடி கூறுவீர்கள்! ‘நீங்கள் ஏன் இப்படி வெறுப்பாக இருக்கிறீர்கள்? மனமொடிந்து பேசுகிறீர்களே? ஓடிந்த மனத்தோடு உலவுகிறீரே’ என்று நீங்கள் பன்முறை கூறக் கேட்டிருக்கிறேன்.

என் தங்கை பிரிவு, முத்து அகன்றது, தங்கம் இறந்தது, சொத்திழந்தது, மகள் மானபங்கம் செய்யப்பட்டது இவைகளால் ஏற்கெனவே நான் ஓடிந்த மனத்தோடு பம்பாய் வந்தேன். வாழ்வில் மகளுக்கு—மகனுக்கு என்று அப்போது சிறிதேனும் பற்றிருந்தது. என் முந்திய வாழ்க்கை உலராமல் உயிருடன் ஓடிந்து ஊசலாடிக்கொண்டிருக்கும் கிளைபோல இருந்தது. இப்போது என் நிலை அப்படி இல்லை. இரண்டு துண்டாக ஓடிந்துவிட்ட கிளைபோல ஆகிவிட்டது என் வாழ்வு. தறிக்கப்பட்ட கிளை இனி தளிர்க்க முடியுமா? எனக்காக நீங்கள் வருந்தாதீர்கள்! என்னைப்போன்ற எண்ணற்ற ஏழைகள் தமிழகத்தில் திக்கில்லாது தவிக்கிறார்கள். தமிழரிடத்தில்—தமிழ் நாட்டில் அன்பு கொண்ட உங்களைப் போன்றோர் பெருகவேண்டும். அப்போது என்போன்ற ஏழைகளுக்கு ஏதாவது நன்மை கிடைக்கும்.

நீங்கள் செய்த உதவி—காட்டிய அன்பு—உதாரகுணம் அவற்றுக்கு என் நன்றி. என் வாழ்க்கையில் மீண்டும் மலர்ச்சி தோன்றினுல்--உயிருடனிருந்தால்—உடனே உமக்குக் கடிதமெழுதுகின்றேன். முடிந்தால் சந்திக்கின்றேன், இல்லையேல் இதையே இறுதிக் கடிதமாக ஏற்றுக்கொள்ளுங்கள்! என் வாழ்க்கையை அறிய நீங்கள் ஆவல் கொண்டீர்கள். அதைக் கடிதத்தில் ஒருவாறு நிறைவேற்றி விட்டேன்.

இறுதி வணக்கம்.

நண்பரிடம் நன்மையும், அன்பும் பெற்றுச்
சொல்லாமல் பிரிந்து செல்லும்,

நடேசன்.

நண்பரே, வருத்தப்படாதீர்கள். நீ தேடிவந்த வானமுது இருக்கும் திசை தெரியவில்லை. இப்போது உடனடியாகச் செய்யவேண்டியதைக் கவனிக்க வேண்டுமே தவிர கவலைப்பட்டுப் பயனில்லை. சீரான குடும்பம் சிதறிவிட்டது! பண்பாட்டுக்கு உறைவிடமான நடேசன் மனம் புண்பட்டுவிட்டது! உங்கள் வாழ்க்கையை உயர்த்த இருந்த வானமுது இருக்குமிடம் தெரியவில்லை. எப்படியும் கிடைத்து விடலாம். நீ உறுதியாக இருக்க வேண்டும்......'

உறுதியாம் உறுதி! இனிமேல் உறுதியாக இருந்துமட்டும் பயனென்ன! இனி இறந்துபோன

வானமுதை என்னால் அடைய முடியுமா? வெறுங் கனவு! கனவு!..........

'எனக்கு அவ்வாறு தோன்றவில்லை. வானமுது இறந்திருக்க மாட்டாள். இறந்ததற்குரிய காரணம் எதையும் நடேசன் குறிப்பிடவில்லை. மயிரும், வளையலும் அவள் மறைவை எப்படி அறிவித்த தாகும்? உயிருடன் இருப்பவர்கூட அவற்றை யிட்டுச் சென்றிருக்கலாமல்லவா? மேலும், நடேசன் சென்னை செல்வதாக எழுதியுள்ளான். ஒருவர் இங்கும் ஒருவர் சென்னையிலும் இருந்தால் அவர்களிருவரையும் கண்டு பிடித்துவிடலாம்.

'நீ சொல்லுகிறாய்! எனக்கு நம்பிக்கை இல்லை. வாழ்க்கையை வெறுத்துக்கொள்ளும் அளவுக்கு வந்து விட்டான் நடேசன். உனக்குக் கடிதம் எழுதும்போது இருந்த எண்ணம் அவனுக்கு சென்னை செல்லும் வரை இருக்குமென்று எண்ணமுடியாது. இதற்குள் மனம் மாறித் தற்கொலையில் ஈடுபடலாம்; அவ்வளவு தூரம் வாழ்க்கைக் கசந்து விட்டதை அவர் கடிதம் குறிப்பிடுகிறதில்லையா?'

நாம் நடேசன் இருந்த வீட்டுப்பக்கம் போய் வரலாமா? அங்குப் பலராமன் இருக்கிறான். ஏதாவது செய்தி கிடைத்தாலும் கிடைக்கலாம். நீங்கள் இங்கேயே இருந்தால் நானாவது போய் வருகிறேன்.

'ஏன்? நானுந்தான் வருகிறேன். எனக்கு இங்கு என்ன வேலை இருக்கிறது?'

நாம் செல்லும் வழியில்தான் அந்த மருத்துவமனை இருக்கிறது. அங்குப்போய் முதலில் விசாரித்துவிட்டு அப்படியே தாராவிக்குப் போவோம் என்று கூறி முருகப்பனையும் அழைத்துக்கொண்டு மருத்துவ மனைக்குள் நுழைந்தோம். அங்கு இருந்த டாக்டர் எனக்கு நன்றாகத் தெரிந்தவர்தான். போகும்போதே அவர் எங்களை வரவேற்றார்.

சிற்றரசைப்பற்றிக் கேட்டோம்; நாங்கள் அவர் பதிலைக்கேட்டு ஆச்சரியப்பட்டோம்.

'சிற்றரசு நன்றாக இருக்கின்றான். ஒரு இரவு அவன் தந்தை கேட்டதற்கு இறந்து விட்டதாக ஒரு டாக்டர் தவறாகச் சொல்லிவிட்டார். ஒரு அறையைச் சுட்டிக்காட்டி அதிலுள்ள சிறுவன் எப்படி இருக்கிறான் என்று அவர் கேட்டிருக்கிறார்; அதே அறையில் ஒரு சிறுவன் மரணத் தறுவாயில் இருந்தான்; அதை அந்த டாக்டர் தவறாக நடேசனுக்குக் கூறிவிட்டார். நடேசனை அழைத்துவரச் சொல்லி ஆளனுப்பி இருக்கிறோம். இப்போது அவர் இங்கு வருவார்' என்றார் பெரிய டாக்டர்.

இப்பொழுது நாங்கள் சிற்றரசைப் பார்க்க முடியாதா? என்று கேட்டேன் நான்.

'தாராளமாகப் பார்க்கலாம். அவனுக்கு இப்போது ஒன்றுமில்லை. வீட்டுக்குப் போகலாம். அழைத்துப்போகத்தான் அவன் தந்தையை வரவழைக்கச் சொல்லி யிருக்கிறேன். (ஒரு பணியாளை நோக்கி) அந்தப் பையனை அழைத்துவா !' என்றார் டாக்டர்.

சிறிது நேரத்தில் சிற்றரசு எங்கள்முன் வந்தான். எங்களைக் கண்டதும் அவன் வணங்கினன். அவன் தந்தை வீட்டில் இல்லை. நாங்கள் அழைத்துப் போகிறோம் என்று கூறிச் சிற்றரசைக் கூட்டிக்கொண்டு வெளியே புறப்பட்டோம்.

'நான்கைந்து நாட்களாக அப்பா வரவே இல்லையே! அப்பாவுக்கு உடம்பு சரியாய் இல்லைங்களா?' என்ருன் சிற்றரசு.

ஆமாம்! என்று கூறிவிட்டு முருகப்பனைக் காண்பித்து இவரை உனக்குத் தெரியுமா? என்றேன் நான்.

'எங்கேயோ பார்த்ததாக ஞாபகம் மட்டும் இருக்கிறது.........யாரென்று புரியவில்லை.'

எங்கே! என்பதை நன்ருக ஞாபகம் செய்துபார்.

'ஞாபகம் வந்துட்டதுங்கோ! இவரைச் சென்னையில் ஒரு பூங்காவில் பார்த்தேன். ஒருநாள் இவருடன் பேசிக்கூட இருக்கிறேன்.' என்ருன் சிற்றரசு.

நாங்கள் பேசிக்கொண்டே எங்கள் வீட்டுக்குத் திரும்பினேம். வழியில் பலராமன் ஓடிவருவதைப் பார்த்தேன். குறிப்பாக பலராமனுக்குச் சாடை காட்டி ஒன்றுங் கூருதே என்று தெரிவித்தேன். பலராமன் வியப்பாகச் சிற்றரசைப் பார்த்துக் கொண்டே எங்களுடன் திரும்பி நடக்கத் தொடங்கினன்.

பலராமா! ஏதாவது புதுச் செய்தி உண்டா? என்றேன்.

'சிற்றரசு செய்தி இப்பத்தான் தெரியும். டாக்டர் அனுப்பிய ஆள் வந்து சொன்னான். வேறு ஒன்று மில்லேங்கோ! ஒன்றுங் கிடைக்க வழியில்லேங்களே!' என்றான் பலராமன்.

வீட்டுக்குள் வந்து அமர்ந்தோம். பலராமன் 'நான் போய்வருகிறேன்' என்றான். செய்தி கிடைத் தால் மட்டும் தெரியப்படுத்து! என்று கூறி அனுப் பினேன்.

'கடிதங்கள் வந்திருக்குங்கோ!' என்றான் வேலேக் காரன்.

வந்திட்டதா? கொண்டுவா என்றேன். அவற்றில் சென்னேயிலிருந்து ஏதாவது கடிதங்கள் வந்திருக் கின்றனவா என்று தேடினேன். முருகப்பனுக்கு மூன்று கடிதங்கள் வந்திருந்தன. அவற்றை நண்ப ரிடம் நீட்டினேன். அவர் ஒன்றைப்பிரித்துப் படிக்கத் தொடங்கினர். அவர் முகம் மலர்ந்தது—புன்னகை பூக்கக் கண்ட நான், என்ன முருகப்பன்? என்றேன். அதை நீட்டினர்.

சென்னே.

அன்பருக்கு வணக்கமாய் வரைவது,

அன்பரீர்!

நான் சென்றவாரம் ஒரு கடிதம் எழுதி உங் களின் இப்போதைய வாழ்க்கைக்கு இடையூறு செய்துவிட்டேன். மன்னிக்கவும்! நான் இன்று

வரை உமக்குத் திருமணம் நடந்திருக்காது என்று குருட்டுத்தனமாக நம்பியிருந்தேன். ஆனால் அந்த நம்பிக்கைக்கு எந்த ஆதாரமுமில்லை. அக்கடிதம் எழுதிய பிறகு நாங்கள் எண்ணற்ற தொல்லையிற் சிக்கித் தவித்தோம். புலியின் வாயிற்பட்ட மான் தப்பியது போல நான் எப்படியோ தப்பிச் சென்னைவந்து சேர்ந்து விட்டேன்.

பழைய பூங்காவிற்சென்று பார்த்தேன். உங்களைக் காணவில்லை. உங்கள் வீட்டுப் பக்கமாகச் சென்று பார்த்தேன். அங்கும் காணப்படவில்லை. வீட்டுக்கு எதிரே ஓரமாக சிறிது நேரம் தங்கியிருந்தேன். அப்பொழுது காரில் ஒரு அம்மையார் வந்து இறங்கி உங்கள் வீட்டுக்குள் சென்றார்கள். காரும் வீட்டுக்குள் கொண்டுபோய் நிறுத்தப் பட்டது. அவ்வம்மையாரைப் பார்த்த வழிப் போக்கர் இருவர் உங்களைப்பற்றி பேசிக்கொண்டு போனார்கள். நான் அவர்களைப் பின்தொடர்ந்து கேட்டதில் இரண்டு மாதங்கட்குமுன் உமக்குத் திருமணமாய் விட்டதாக அறிந்தேன். அதற்கு மேல் நான் அவர்களைப் பின்தொடர—அவர்கள் பேச்சைக் கேட்க—மனமின்றித் திரும்பி விட்டேன். எங்கே போவதென்று புரியாது பழைய பூங்காவிற் சென்று அமர்ந்தேன். என் எதிர்கால வாழ்வு முடிந்துவிட்ட பின்னர்—நான் மாண்புடன் எழுப்பிய மாணிக்க மண்டபம் மண்ணோடு மண்ணாய் மாய்ந்து விட்ட பின்னர் — எதைப் பற்றி யோசிப்பது? ஒன்றும் புரியாமல் வெகு

நேரமிருந்தேன்! யோசித்தேன், எதை எதையோ யோசித்தேன்! என் நம்பிக்கை நசிந்து விட்டது.

இந்தக் கடிதத்தை உங்களுக்கு அவ்சியமில்லாமல் எழுதுகிறேன். இது உங்களுக்கு நன்மை செய்யாவிட்டாலும் தீமை செய்யாதிருந்தால் போதும். நீங்கள் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டதற்காக நான் வருந்தவில்லை, வருந்துவதற்கு என்ன இருக்கிறது? என்னை எதிர்பார்த்து நீங்கள் பல நாள்வரைக் காத்துத்தான் இருந்தீர்கள். ஒரு கடிதங்கூட எழுதாதிருந்த என்னை அதற்குமேலும் நீங்கள் எதிர்பார்க்க என்ன நியாயம் இருக்கிறது?

வரண்டு கிடந்த என் வாழ்க்கைப்பாலையில் காதல் புயலைக்கிளப்பிக் கனமழை பெய்வித்தீர்கள். என் இதய பீடத்தை உங்களுக்கு அளித்துவிட்டேன். என் தவறு உங்களுக்குப் பெருந்தொல்லையைக் கொடுத்திருக்கும் என்பது மட்டும் உறுதி. இவ்வளவு நாட்களுக்குப் பிறகும் என்னை நீங்கள் எதிர்பார்க்க வழியில்லை. குற்றமெல்லாம் என்னுடையதே அல்லாமல் உங்களுடையது சிறிதுமில்லை. என் வாழ்வு வரண்டு விட்டாலும் உங்கள் வாழ்வு வளமடைய பிரார்த்திக்கிறேன்.

இப்போதைய நிலையில் இக்கடிதத்தை எழுதி உங்கள் நல்வாழ்வைக் கலைக்க நான் சிறிதும் விரும்பவில்லை. ஆனல் கடிதமெழுதாமல்

—கொண்ட காதலைக் கைவிட்டு எங்கோ, எப்படியோ வாழ்கின்றாள்—என்று நீங்கள் எண்ணியிருப்பீரே! அம்மாசினைப் போக்காதிருக்க முடியவில்லை. உங்களைக் காதலித்து உங்களுக்காகவே இவ்வளவு தொல்லைபட்டும் சென்னைக்கு ஓடிவந்தேன் என்பதைத் தெரிவிக்காதிருக்க—உங்களை மறந்துவிட முடியவில்லை! அதனாலேயே இதை எழுதுகிறேன். உங்களைக் காதலராக ஏற்றபின் உங்களையன்றி வேறு எவரையும் அவ்வுயர்ந்த இடத்தில் அமர்த்த நான் விரும்பவில்லை. விரும்பவும் மாட்டேன்! திலகவதியாரின் திருக்குடியில் பிறந்து — அவர்தம் அரும் வரலாற்றைப் படித்துள்ள நான்—இனி வேறொரு திருமணத்தைப்பற்றி எண்ண மாட்டேன். இவ்வாறு எதிர்பாராதபடி நிகழ்ந்து விட்டிருந்தால் என் எதிர் காலம் முழுவதையும் ஏழை எளியவருக்குத் தொண்டு செய்து கழிப்பதென்று முடிவுசெய்து வந்தேன். இப்போது எவ்வாறு, எந்த வகையில் தொண்டு செய்வதென்று புரியாது திகைக்கிறேன். ஆயினும் எப்படியும் நான் தொண்டு செய்வதென்றே இருக்கிறேன்.

உங்களை இறுதியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்: என்னைத் தயவுசெய்து மறந்து விடுங்கள்! அடியோடு மறந்து விடுங்கள்! இதைக் கண்டபின் என்னைக் காணவோ, தேடவோ எண்ணாதீர்கள்! இனி என்னை நினைத்தால் உங்கள் நல்வாழ்வு நலிவடையும். அந்த அம்மையா

ரின் வாழ்வில் அமைதி குலையும். அவர்கள் வாழ்வு சிறக்க நீங்கள் என்னை அடியோடு மறந்து விட்டு அவர்களுக்குத் துணை செய்யுங்கள்! இனி நான் எப்படியாவது ஆகிறேன். உங்கள் வாழ்வை ஓம்புங்கள்! இதுவே என் இறுதிக் கடிதம். என் இறுதி வேண்டுகோள்—என்னை மறந்து விடுங் கள்! மன்னித்து விடுங்கள்!

அன்புள்ள அபலை,

**வானமுது.**

நான் கடிதத்தைப் படித்துவிட்டு நண்பரைப் பார்த்தேன். அவர் இன்னொரு கடிதத்தைப் படித்து விட்டு என்னைப் பாராமலேயே தனக்குள் சிரித்துக் கொண்டார். ஏன் சிரிக்கிறீர்கள் என்று கேட்டேன். அக் கடிதத்தை நீட்டினர்.

சென்னை.

அன்புள்ள முருகப்பனுக்கு,

நண்பரீர்!

இரண்டு மாதமாகச் சந்தோஷ் புரத்தில் இருந்துவிட்டு நேற்றுத்தான் வீடுவந்து சேர்ந் தேன். இப்போது உடம்பு நன்றாயிருக்கிறது. நாங்கள் எல்லோரும் இன்று இரவு ஊருக்குப் போகிறோம். அன்பையும் வீட்டையும் கொடுத்து எங்களுக்கு உதவியதற்கு எங்கள் குடும்பச்

சார்பில் நன்றி செலுத்திக் கொள்ளுகிறேன். அப்பா, அம்மா, மீனு எல்லோரும் உங்கள் குணத்தையும், அன்பையும் அளவில்லாமல் பாராட்டுகிருர்கள். விரைவில் நீங்கள் திருமணத்தை முடித்துக்கொள்ள வேண்டுமென்று நாங்கள் வேண்டிக் கொள்ளுகிருேம். போகும்போது உன்னைப் பார்க்காமல் — சொல்லாமல் போகிருேமே என்பதுதான் எங்களுக்கு வருத்தமாக இருக்கிறது. நீ திருச்சிக்கு வந்தால் தவருமல் எங்கள் இல்லத்துக்கு வரவும். பதில் வரையவும்.

அன்புள்ள நண்பன்,

**அழகேசன்.**

முருகு! அழகேசன், மீனு இவர்களெல்லாம் யார்?

'இவர்களா? அழகேசன் என் நண்பர். திருச்சினுப் பள்ளிக்காரர்; வியாபார சம்பந்தமான நண்பர். மீனு அவர் மனைவியார். பெரிய பணக்காரர்கள். மிகவும் நல்லவர்கள். அழகேசன் இருமல் நோய் காரணமாக சென்னை சந்தோஷபுரத்தில் இரண்டு மாதம் இருக்க நேர்ந்தது. சென்னையில் தன் குடும்பம் இருக்க ஒரு வீட்டை வாடகைக்குப் பார்க்கச் சொன்னுர். இரண்டு மாதந்தானே! நண்பருடைய குடும்பம் தங்கியிருக்க வேறு வீட்டை எப்படிப் பார்க்க முடியும்? அவர்களை என் வீட்டிலேயே இருக்க ஏற்பாடு செய்தேன். அழகேசன் சந்தோஷபுரம் மருத்துவமனையில் இருந்தார். அவர் தாய் தந்தையர், மனைவி மீனு இம்மூவரும் என் வீட்டில் இருந்தார்கள். தினந்தோறும் அவர்கள்

காரிலேயே சென்று பார்த்துவிட்டு வருவார்கள். அழகேசன், மீனு இருவரும் இளைஞர்கள். மீனுவைக் கண்ட அவசரக் குடுக்கைகள் ஏதாவது தவருகப் பேசிக்கொண்டு போயிருப்பார்கள். அதை வானமுது கேட்டிருக்கிருள். அதைத்தான் வானமுது தன் கடிதத்தில் எழுதியிருக்கிருள்.' என்று கூறி விட்டு மூன்ருவது கடிதத்தைப் படித்துவிட்டு அதையும் என்னிடம் கொடுத்தார்.

சென்னை.

அன்பு மகனுக்கு,

நலம். நாடலும் நலமே. தவிர,

அழகேசன் குடும்பத்துடன் இன்று மாலை ஊருக்குப்போய் விட்டார்கள். உன்னிடம் சொல்லாமல் போவதற்கு அவர்கள் மிகவும் வருத்தப் பட்டார்கள். மிகவும் நல்ல குடும்பம். தவிர,

இன்றுமாலை ஒரு பெண் உங்களைத் தேடிக் கொண்டு வந்தாள். கிராமத்துப் பெண்ணுகை— ஏழைக் கோலத்துடன் காணப்பட்டாள். நீ ஊரில் இல்லையென்று நான் கூறினேன். எந்தவூர்? ஏன் வந்தீர்? என்று கேட்டதற்கு எதுவும் சொல்லாமல் போய்விட்டாள். மீண்டும் இரவு ஏழு மணிக்கு வந்து கேட்டாள். இல்லை யென்று சொன்னபோது தயங்கித் தயங்கி ஒரு கடிதத்தைக்கொடுத்து 'இதைத் தயவு செய்து அவரிடம் கொடுத்துவிடுங்கள்! வேறு யாரிடமும்

கொடுக்காதீர்கள்!' என்று கூறிச்சென்று விட்டாள். அந்தக் கடிதத்தையும் அனுப்பியுள்ளேன். வந்திருக்கும்.

அன்புத் தந்தை.

கடிதத்தைப் படித்துவிட்டு நான் நண்பரைப் பார்த்தேன். அவர் எதையோ ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தார். பிறகு அவர் என்னைப்பார்த்து,

'இப்போது நாம் என்ன செய்யலாம்?' என்று கேட்டார்.

உடனே சென்னைக்குப் புறப்பட வேண்டியதுதான். நடேசன், வானமுது இருவரும் சென்னையில்தான் இருக்கவேண்டும். நாம் தாமதித்தால் ஆபத்து இருக்கிறது. ஆகையால் நாம் இப்போதே புறப்பட்டுப் போகலாம். மணி ஐந்தாகிவிட்டது. ஆறு மணி எக்ஸ்பிரஸுக்குப் போய்விடலாம் என்றேன்.

'வேண்டவே வேண்டாம்! இரண்டு நாளைக்கு அதில் எப்படி உட்கார்ந்து கொண்டிருப்பது? விமானத்தில் போய்விடலாம்.'

அப்படியும் செய்யலாம். உடனேபோக அதுவும் நல்ல யோசனைதான் என்று கூறினேன். பிறகு சிற்றரசையும் அழைத்துக்கொண்டு மூவரும் விமான நிலயத்திற்குப் போனோம். சென்னை செல்லும் விமானம் காலையில்தான் என்றார்கள். பிறகு வீட்டுக்குத் திரும்பி அன்று இரவைக் கழித்தோம். காலையில் மூவரும் விமானமூலம் சென்னை மீனம்பாக்கத்தில் வந்து இறங்கினோம்.

மூவரும் பஸ் ஏறி வீட்டுக்குப் புறப்பட்டோம். முருகப்பன் செய்தித் தாள் வாங்கி என்னிடம் ஒரு தாளைக்கொடுத்துவிட்டு அவர் ஒன்றைப் பார்த்துக் கொண்டே வந்தார். திடீரென்று நண்பர் என்னைக் கூப்பிட்டுச் சென்னையில் பைத்தியங்கள் அதிகமாகின்றன. இந்தப் பைத்தியத்தைப் பாருங்கள்! என்று அவர் கையிலிருந்த தாளை நீட்டி ஒரு படத்தைக் காண்பித்தார். 'பலே பைத்தியம்' என்ற தலைப்பின் கீழ் ஒருபடம் இருந்தது. படத்தின் கீழே:

'படத்திலிருக்கும் பேர்வழி பாதையில் செல்பவர்களை யெல்லாம் முத்தோ முத்து! என்று கட்டிக் கொள்கிறான். பெண்களைப் பார்த்து மகளே! மகனே! என்று கத்துகிறான். போலீசார் பைத்தியம் என்று இவனைப் பிடித்துக் கீழ்ப்பாக்கம் பைத்திய மருத்துவ மனையில் சேர்த்திருக்கிறார்கள்.' என்று எழுதப்பட்டிருந்தது.

நான் படத்தையும், அதன் கீழ் எழுதப்பட்டிருந்ததையும் மாறி மாறிப் பார்ப்பதை முருகு கூர்ந்து கவனித்தார்.

'என்ன யோசிக்கிறீர்?'

யோசிப்பது ஒன்றுமில்லை. யோசனை முடிந்து விட்டது. நம் சந்தேகமும் தெளிந்து விட்டது. அதோடு நாம் தேடிக்கொண்டு வந்த இருவரில் ஒருவர் கிடைத்து விட்டார். இவர்தாம்பா நடேசன், சந்தேகமே இல்லை. இவரேதான்! நான் நேராகக் கீழ்ப்பாக்கம் போய் நடேசனைக் கூட்டிக் கொண்டு வந்து விடுகிறேன் என்றேன்.

'நடேசனு! இவரா?' என்று வியந்த வண்ணம் நடேசன் படத்தை நண்பர் பல கோணத்தில் வைத்துப் பார்த்தார். 'பிறகு நானும் வருகிறேன்; மூவரும் சென்று கூட்டிக் கொண்டே வீட்டுக்குப் போகலாம்' என்ருர் முருகு.

நாங்கள் மூவரும் கீழ்ப்பாக்கம் மருத்துவ மனைக்குச் சென்ருேம். நடேசன் எங்களைப் பார்த்ததும் ஓடிவந்து சிற்றரசைக்கட்டித் தழுவிக் கொண்டான். பிறகு எனக்கு வணக்கம் செலுத்தி விட்டு 'சிற்றரசு எப்படிப் பிழைத்து விட்டான்? சண்டாளர்கள்! இறந்துபோனதாக எனக்குச் சொன்ஞர்களே! நீங்க இப்போ தான் வந்தீர்களா? நான் இங்கே இருப்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? இந்தப் பைத்தியங்களுக்கு எவ்வளவு சொல்லியுங் கேட்கவில்லே! என்னைப் பைத்தியம் என்று இங்கே கொண்டுவந்து அடைத்து விட்டார்கள். எப்படியோ நான் சிற்றரசைப் பார்த்தேனே, அதுவே போதும்! அவனைக்கொண்டு வந்து காட்டினீர்களே! உங்களுக்கு என்ன கைமாறு செய்தால் இதற்கு ஈடாகும்? நான் இங்கிருப்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?' என்று உணர்ச்சியோடு கேட்டான் நடேசன்.

நான் செய்தித்தாளைப் பிரித்துக்காட்டி விட்டு நாம் வீட்டுக்குப் போகலாம் புறப்படுங்கள் என்றேன். இதற்குள் நண்பர் முருகப்பர் தலைவரிடம் சென்று நடேசனை அழைத்துச் செல்ல அனுமதி பெற்று வந்துவிட்டார். நாங்கள் நால்வருமாக முருகப்பர் வீட்டுக்குச் சென்ருேம்.

சென்னையில் யார் யாரைக் கண்டுபிடித்தீர்கள்? உங்கள் தங்கை மகனைக் காணச் சென்னைக்குச் செல்வ தாகக் கடிதத்தில் எழுதியிருந்தீரே! கண்டுபிடித்தீர் களா? என்று நடேசனைக் கேட்டேன் நான்.

'என் தங்கை மகன் மாம்பலத்தில் இருப்பதாக முனியாண்டி சொன்னான். மாம்பலம் மட்டுமல்ல, சென்னை முழுவதுமே தேடினேன். அவன் எங்கிருப் பதும்—யாரைக் கேட்டாலும் தெரியவில்லை. அது இருக்கட்டும், சிற்றரசு உயிருடன் இருந்தது உங்க ளுக்கு எப்படித் தெரிந்தது?'

நான் சமயோசிதமாக மருத்துவ மனைக்குப் போனேன். அவர்களே சொல்லி விட்டார்கள். அவர்கள் தங்கள் தவறுதலுக்கு மிகவும் வருத்தப் பட்டார்கள்.

'வானமுதைப்பற்றி ஏதாவது தெரிந்ததுங்களா? தெரிவதற்கு என்ன இருக்கிறது? அவள் உயிருடன் இருந்தால்தானே?'

எல்லாந் தெரிந்தது, அவள் உயிருடன் இருக் கிறாள், நீங்கள் கவலைப்படாதீர்கள்.

'ஆ! என் வானமுது இன்னும் உயிருடன் இருக் கிறாளா? உண்மையாகவா? நீங்கள் பார்த்தீர்களா வானமுதை? பம்பாயிலா இருக்கிறாள்?'

இல்லை, சென்னையிலேதான் இருக்கிறாள். இன் னும் நாங்கள் யாரும் பார்க்கவில்லை. அவள் கடிதம் எழுதி இருக்கிறாள்.

'உண்மையாகவா? என்ன எழுதியிருக்கிருள்? இன்னும் நீங்கள் அவளைப்போய்ப் பார்க்கவில்லையா? சென்னையில் எங்கிருக்கிருள்?'

அதுதான் தெரியவில்லை. நாம் இனித்தேடித் தான் கண்டுபிடிக்க வேண்டும் என்றேன் நான். நடேசன் முகம் சுருங்கி விட்டது. உள்ளம் மட்டும் மகிழ்ச்சியில் திளைத்தது.

'நடேசா! நீயாப்பா! யாரோ என்றல்லவா நான் இதுவரை எண்ணியிருந்தேன்? எப்படியப்பா தெரிந்து வந்துவிட்டாய்?' என்று வியப்பாகக் கேட்டார் முருகப்பரின் அன்புத் தந்தையான கிழவர் நடேசனைப்பார்த்து.

'நீங்க யாருங்கோ?......எங்கோ—எப்போதோ—பார்த்ததாக மட்டும் ஞாபகம்; புரியவில்லையே!' என்று நடேசன் கிழவரைப் பார்த்துக் கேட்டான்.

'புரியாது; இருபது வருடம் ஆய்விட்டதில்லையா! உங்க ஊர்தாம்பா! சந்து வீட்டுச் சின்னசாமியப்பா நான். உங்க துணிக்கடையில் வேலை செய்து கொண்டிருந்தேனே, ஞாபகமில்லை?'

'ஓ! சின்னசாமியா? நீ வெகுநாளாய்க் காணவில்லையே? இப்போ நீ எங்கேப்பா இருக்கிருய்?' என்ருன் நடேசன்.

'இங்கேதாம்பா இருக்கிறேன்,'

'இது யார் வீடு?'

'உன் தங்கை மகன்தாம்பா முருகப்பன்! நீங்கள் எல்லாம் முத்து என்று கூப்பிட்டு வந்தீர்கள். இங்கே முருகப்பன் என்று பெயர் மாறிவிட்டது. நான் ஊரையும், உங்களையும், எல்லாவற்றையும் அடியோடு மறந்து விட்டேம்பா!'

'ஏம்பா, நீ இத்தனை நாட்களாக எனக்கு அம்மான் இருப்பதாகச் சொல்லவேயில்லை?' என்றார் முருகு.

'முருகு, நான் ஊரைவிட்டு வந்தபிறகு ஒரு முறைகூட திரும்பி ஊருக்குப் போகவே இல்லை. எல்லோரும் அடியோடு மறந்து போனார்கள். குறைந்தது பத்து வருடங்கட்குப் பிறகு உன்னிடம் வந்து சேர்ந்தேன். அதற்கு முன்பே எல்லாம் மறந்து போயின. இப்போது ஆளைப் பார்த்தபிறகு ஞாபகம் வருகிறது.' என்றார் கிழவர்.

'முருகு! இதை யெல்லாம் நாம் பிறகு வந்து பேசிக்கொள்ளலாம். இப்போது வானமுதைத் தேட முயற்சி செய்யவேண்டும்!' என்றேன் நான்.

'நானும் இந்நேரம் அதைத்தான் யோசித்தேன். எங்கு இருக்கிறாளோ வானமுது. நாம் எங்குச் சென்று தேடுவது? ஒன்றும் புரியவில்லையே! என்ன செய்யலாம்?'

நாம் சென்னையில் தேடிப்பிடிப்ப தென்பது முடியாது!.........

'அப்போ தேடாமல் வானமுதை விட்டு விடுவதா?' என்ருன் நடேசன்.

'யாரப்பா சொன்னது? இது அறிவுக் காலம். நாம் சென்று தேடியலேய வேண்டியதில்லே. போலீசில் சொன்ஞல் அவர்கள் தேடிப்பிடித்து விடுவார்கள். இப்போது வானமுதின் நிழற்படம் ஒன்று இருந்தால் அவளேச் சுலபமாகத்தேடிப்பிடித்து விடலாம்' என்று நான் யோசனே கூறினேன்.

'வானமுதின் நிழற்படம் என்னிடம் இருக்கிறது' என்று கூறிவிட்டு, அறையுள் சென்று அவள் படமொன்றைக் கொண்டு வந்தார் முருகு.

இது போதும். நாம் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் வருவோமா? என்றேன். சரியென்று முருகப்பரும் வந்தார். போலீஸ் அதிகாரியிடம் படத்தைக் கொடுத்துத் தேடித் தரும்படிக் கூறினேம். அவரும் சரியென்று இசைந்து 'விரைவில் நான் தகுந்த ஏற்பாடு செய்து விடுகிறேன். சென்னேயில் இருந்தால் இன்றே கண்டுபிடித்துக் கொடுக்கிருேம்' என்ருர்.

சென்னேயில்தான் இருப்பதாக அவள் கடிதம் எழுதியிருக்கிருள். அவள் பெயர் வானமுது என்று விவரம் கூறிவிட்டு நாங்கள் வீட்டுக்கு வந்து விட்டோம்.

அன்று மாலே போலீஸ் இன்ஸ்பெக்டர் டெலிபோனில் கூப்பிட்டார். 'நீங்கள் தேடச்சொல்லிய வானமுது என்ற பெண் கண்ணகி விடுதியில் இருக்

கிறார்கள். ஆனால் வர மறுக்கிறார்கள். நீங்கள் நேரில் சென்று பேசிக்கொள்ளுங்கள்' என்று செய்தி கொடுத்தார். எல்லோருக்கும் வானமுது கிடைத்து விட்டதாக மகிழ்ச்சி ஏற்பட்டது. நாங்கள் எல்லோரும் அவ்விடுதிக்குப்போய் வானமுதைக் கண்டோம்.

வானமுது தந்தையையும், தம்பியையும் கண்டதும் ஓடோடிவந்து அப்பாவைத் தழுவிக்கொண்டாள். 'அப்பா உங்களை உயிருடன் கண்டேனே, அதுவே போதும்!' என்று வியப்பாகக் கூறிவிட்டு என்னையும் முருகப்பரையும் பார்த்து விட்டுத் தலை குனிந்து கொண்டாள்.

'உங்கள் இரண்டு பேரையும் நான் திரும்பப் பார்த்தேனே, இதுவே எனக்குப் போதுமம்மா!' என்று நடேசன் மகிழ்ச்சியாகக் கூறிவிட்டுப் பிறகு, 'வானமுது! அத்தானைக்கூடக் கண்டுபிடித்து விட்டோமே!' என்று ஆச்சரிய பாவத்துடன் கூறி எங்களைத் திரும்பிப் பார்த்தான். ஆனால் வானமுது சாந்தமாகவே இருந்தாள். ஒன்றும் வியப்படைய வில்லை. அமைதியான குரலில் 'எங்கேப்பா கண்டு பிடித்தீர்கள்?' என்று கேட்டாள்.

'இவர்தாம்மா உங்க அத்தான்!' என்று முருகப்பரைக் காட்டினான் நடேசன். வானமுது அமைதியாகத் தலையை மேலும் சாய்த்துக் கொண்டாள். பிறகு நான் வானமுதைக் கூப்பிட்டுப் பேசத்தொடங்கினேன்.

வானமுது! நாங்கள் உன்னிடம் நிரம்பப் பேச வேண்டியிருக்கிறது. நீ உடனே புறப்பட்டு வர

வேண்டும். தலைவரிடம் நாங்கள் கூறுகிறோம் என்றேன்.

'என் எதிர்கால வாழ்வைப் பற்றித்தானே பேச வேண்டுமென்று அழைக்கிறீர்கள்? என் எதிர்காலத்தை நான் முடிவு செய்து விட்டேன். தயவு செய்து என்னை எங்கும் அழைக்காதீர்கள்! நான் வரத் தயாராகவும் இல்லை என்பதைப் பணிவுடன் கூறிக் கொள்ளுகிறேன். அதற்காக என்னை மன்னியுங்கள்.'

வானமுது! நீ கண்டதும், கேட்டதும் எல்லாம் பொய்யானவை. இப்போது நாங்கள் சொல்லப் போவதுதான் மெய்யானது. ஆகையால்........

'இனிமேல் எனக்கு மெய்யோ பொய்யோ எதுவும் வேண்டாங்கோ! நான் இங்கேயே இருந்துவிட......'

நீ தவறான முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது. இது அவசர முடிவு. விவரமாக நான் எல்லாச் செய்தியையும் சொல்லுகிறேன். நீ எங்களுடன் வாம்மா! என்றேன் நான். என்னுடன் நடேசனும் வற்புறுத்தினான். மேலும் மறுக்க முடியாமலும் ஆனால் வரச் சம்மத மில்லாமலும் தயங்கினாள் வானமுது.

நீ, மறுக்காமல் எங்களுடன் வா, வானமுது! நாங்கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டு அதன் பிறகு உனக்குப் பிடிக்கவில்லை யென்றால் இங்கேயே திரும்பி வந்துவிடு!

'அப்படிக் கூறியே ஆகவேண்டு மென்றால் அதை இங்கேதான் சொல்லுங்களேன்!' என்றாள் வானமுது.

உன் திருமணத்தைப்பற்றிய செய்தியை இங்கே எப்படிக் கூறுவது? ஆகையால் நீ எங்களுடன் வர வேண்டுமென்று வற்புறுத்தினேன். முருகப்பர் என்னைப் பின்பற்றி, 'வானமுது! என்னைப்பற்றி நீ தவருகக் கேள்விப்பட்டு விட்டு இப்படி அவசர முடிவு செய்து விட்டாய். எல்லாவற்றையும் விரிவாகச் சொல்லுகிறோம், எங்களுடன் வீட்டுக்கு வா!' என்ருர். மேலும் மறுக்க முடியாது தலை நிமிர்ந்தாள் வானமுது. எங்கள் பேச்சுக்களைக் கேட்டுக் கொண்டிருந்த விடுதித் தலைவர் வந்து 'இவர்கள் அவ்வளவு தூரம் வற்புறுத்தும்போது ஏனம்மா மறுக்கிருய்? போய்க் கேட்டுத்தான் வாயேம்மா?' என்ருர் அவர்.

நாங்கள் தலைவரிடம் அனுமதி பெற்று வானமுதை அழைத்துக்கொண்டு முருகப்பர் வீட்டுக்கு வந்தோம். மணி ஏழாகி விட்டிருந்தது. சாப்பிட்டு விட்டு ஓய்வாகப் பேசலாம்; முதலில் சாப்பிடலாம் என்றேன் நான். வானமுது வெறுப்பாகக் காணப்பட்டாள். மற்றவர்கள் மகிழ்ச்சியில் மூழ்கி இருந்தார்கள். எல்லோரும் சாப்பிடச் சித்தமானுர்கள். வானமுது மட்டும் விரும்பவில்லை.

'நான் சற்று முன்புதான் சாப்பிட்டேன். நீங்கள் எல்லோரும் சாப்பிடுங்கள்!' என்ருள்.

'ஏன் வானமுது! அப்படிச் சொல்கிருய்?' என்ருர் முருகு.

'எனக்குப் பசி இல்லைங்கோ! நான் இப்போது தான் சாப்பிட்டேன்.'

'இல்லை! உன் மனக்குறை வேறு. ஆனால் அது தவறானது என்பதை உனக்கு விளக்கிச் சொன்ன பிறகுதானே தெரியும்! முதலில் சாப்பிட்டு விடலாம்; பிறகு விவரமாக எல்லாவற்றையும் சொல்லுகிறேன்.' என்றார் முருகு.

நானும், நடேசனும் எவ்வளவு சொல்லியும் வானமுது சாப்பிட இசையவே இல்லை. நாங்களும் சாப்பிடவில்லை.

'வானமுது! எனக்குத் திருமணம் ஆகி விட்டது என்று உனக்கு யாரோ தவறாகக் கூறிவிட்டார்கள். நீ அதைக்கேட்டுவிட்டு இப்படி முடிவு செய்து விட்டாய். நீ கேட்டது தவறான செய்தி!' என்றார் முருகு.

'நான் முதலில் அதை நம்பித்தான் விட்டேன். விடுதியில் சேர்ந்த பிறகு உங்களுக்கு இன்னும் திருமணமாகவில்லை என்பதையும் தெரிந்து கொண்டேன். அதன் பிறகுதான் நன்றாக யோசித்தே—கன்னியாகவே இருக்க—முடிவு செய்து விட்டேன்.'

'பின் ஏன் இத்தகைய விரும்ப முடியாத முடிவைச் செய்து விட்டாய்?' வானமுது பேசவில்லை. துயரப் படுவதாகக் காணப்பட்டாள்.

'ஏன் வானமுது, இப்படி எண்ணி விட்டாய்? நான் இந்த ஒரு வருட காலமாக உன்னைத் தேடித் தேடி அலைந்தது இருக்கிறதே, அதைச் சொற்களால் சொல்லிக்காட்ட முடியாது. முதல் முதல் உன்னுடைய கடிதத்தைக் கண்டதும் குருடன் கண் பெற்

றது போல நான் மகிழ்ந்தேன். முகவரி இல்லாமை யால் பதில் எழுத-தேடிவர முடியாது-நான் திகைத் தது இருக்கிறதே, அது என்னைத்தவிர பிறர்க்கு எப் படித் தெரியும்? அடுத்த கடிதத்தை ஆவலுடன் எதிர்பார்த்தேன், பார்த்தேன், பார்த்தேன்—வரவே இல்லை. ஓடினேன் பம்பாய்க்கு. உங்கள் அல்லல் பல வற்றையும் நண்பர் மூலம் அறிந்து திரும்பினேன். எப்படியோ மீண்டும் சந்தித்து விட்டோம். இனி நமக்கு ஒரு தொல்லையுமில்லை. நம் எண்ணப்படியும், உன் தந்தையின் விருப்பப்படியும் என் அப்பாவின் ஆசைப்படியும் நாம் ஒரு குடும்பத்தினராக ஆகிவிட் டோம். இனிமேல் நீ ஏன் மணத்தை மறுக்கிறாய்? உன் எண்ணந்தான் என்ன? ஏன் அழுகிறாய்?'

'என்னைத் தயவு செய்து மன்னியுங்கள்! மன் னித்து விடுங்கள்! உங்கள் அன்புக்கு ஆயிரமாயிரம் வணக்கம். உங்களை என் இதயக்கோயிலில் நான் என்றும் இருத்தித் தொழுவேன். இதை நான் உயி ருள்ள அளவும் மறக்க மாட்டேன். ஆயினும்......'

'என்ன ஆயினும்? திருமணத்தை விரும்ப வில்லை என்கிறாயா நீ?'

'ஆம்! உண்மையாக விரும்பவில்லை! விரும்பாத நீ என்னைக் காதலித்திருக்கலாமா? என்று நீங்கள் கேட் பீர்கள்! அப்போது-நாம் ஒன்றாகப் பழகிய காலத் தில்-அளவில்லாமல் உங்களைக் காதலித்தேன். ஆனால் இப்போது நான்........'

'ஏன்? இப்போது என்னைப் பற்றித் தவறாக ஏதா வது கேள்விப் பட்டாயா?'

'யாரப்படிச் சொல்ல முடியும்? மாணிக்கத்துக்கு யாராவது மாசு கற்பிக்க முடியுமா?—குயிலின் குரலுக்குக் குற்றங்கூறினால்—முத்துக்குத் தப்புச் சொன்னால்–நான் நம்பி விடுவேனா? அதுவும் மறுவற்ற உங்களை யாரும் அப்படிச் சொல்லவில்லை; நான் அப்படி எண்ணவில்லை. எண்ணவும் மாட்டேன்! உங்களை அன்புத் தெய்வமாகவே இன்றும், என்றும் உறுதியாக எண்ணினேன்; எண்ணுகிறேன்; இனியும் எண்ணித் தொழுவேன், இது உறுதி!'

'பின் நீ ஏன் திருமணத்தை மறுக்கிறாய்? ஏன் அழுகிறாய், வானமுது? உன் எண்ணத்தை வெளிப்படையாகச் சொல்லு! என்னிடம் எதையும் அஞ்சாமல் சொல்லு! பயப்படாமல் சொல்லு, வானமுது!'

'தயவு செய்து என்னை விடுதிக்கு அனுப்பி விடுங்கள்! மேற்கொண்டு நான் இங்கு எதையும் சொல்ல விரும்பவில்லை. என் இன்ப வாழ்வு முடிந்து விட்டது! உங்கள் காதலி வானமுது இறந்து விட்டாள் என்று எண்ணிக் கொள்ளுங்கள்! உங்களிடம் பேசும் இவள் வேறு வானமுது என்று எ்ண்ணிக் கொள்ளுங்கள்! என்னை அனுப்பி விடுங்கள்! மன்னியுங்கள்! மறந்து விடுங்கள் என்னை. நான் போய் வருகிறேன்.'

'வானமுது! நீ ஏன் இப்படி அழுகிறாய்? நடுங்குவதற்குக் காரணமே தெரியவில்லையே? என்ன நடந்தது, பயப்படாமல் சொல்லு வானமுது! உன் கன்னி வாழ்வை உன் தந்தை விரும்புவாரா? நான் இப்படியே துவண்டு வாழ்வதை நீ விரும்புகிறாயா? ஏன்

இப்படித் துடிக்கின்ருய்? உட்கார்ந்து அமைதியாக உன் கருத்தைச் சொல் வானமுது!' என்ருர் முருகு.

'ஏம்மா வானமுது! இவரையே திருமணம் செய்து கொள்ளப் போவதாகச் சொன்னுய்; நான் தேடிக் கொண்டிருந்த முத்துவே உன் காதலனுகவும் ஆகி விட்டான், இது எல்லோருக்கும் மகிழ்ச்சிதானே? நீ ஏன் இப்போ ஏதேதோ கூறுகிருய்? நீ என்ன எண்ணுகிருய் என்பதைச் சொன்னுல்தானே தெரியும்? நீ சுய நிலையிழந்து பேசுகிருயா? உட்காரம்மா! இந்தா, இந்தத் தண்ணீரையாவது குடியம்மா!' என்று நடேசன் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தான். அதை வாங்கிப் பக்கத்தில் வைத்துவிட்டு வானமுது பேசத் தொடங்கினுள்.

'நான் சுய உணர்வோடுதான் பேசுகின்றேன். என் நிலை சொல்லமுடியாததாக—நீங்கள் வெறுக்கத் தக்கதாக–இருக்கிறது. அதை உங்களுக்குச் சொல்லி, உங்களையும் துயரத்தில் ஆழ்த்த நான் விரும்பவில்லை. அதனுல்தான் இதுவரை மறுத்தேன்; அதையும் சொல்லி விடுகின்றேன்......'

'அப்படி என்னம்மா நடந்து விட்டது? மறைத்து மட்டும் பயன் என்னம்மா? என்ன நடந்து விட்டதோ? நாம் இப்போது சோதனைச் சிகரத்தில் இருக்கிருேம்; ஏழைகளுக்கு என்ன வந்தாலும் அவர்கள் ஏற்றுக்கொள்ளத்தானே வேண்டும்? வருவது வழியில் நிற்குமா? அதை ஏழைகளால் தடுத்து நிறுத்த அவர்களுக்குப் பலம் ஏது? பயப்படாது சொல்லு, வானமுது!'

'காமப்பேயான பீமையா என்னைத் தந்தை இறந்ததாகச் சொல்லி அழைத்துச் சென்றான். உடன் வந்த முனியாண்டியைக் கொலை செய்து விட்டுத் தன்னை மணம் செய்து கொள்ளும்படி மன்றாடினான். நான் மறுத்தேன்! வேண்டினான். நான் வெறுத்தேன்! உயிருள்ள வரையில் உன்னை மணக்க முடியாதென்று கண்டிப்பாகக் கூறினேன். 'புலிக்குகைக்குள் வந்து விட்ட நரி என்பதை மறந்து விடாதே! இனி நீ கற்புடன் திரும்ப முடியாது!' என்று பயமுறுத்தினான். உயிருள்ள வரையில் உன் இச்சைக்கு ஆளாக முடியா தென்று கூறினேன். அருகில் வந்து என்னைப் பிடிக்க முயன்றான்; கன்னத்தில் ஓங்கி அறைந்துவிட்டு ஓடத் தொடங்கினேன். காலிடறிக் கீழே விழுந்து விட்டேன். பிறகு உணர்ச்சி வந்த போது அவன் என்னை எங்கோ தூக்கிச்செல்வதாக உணர்ந்தேன். ஓவென்று கதறியழுது இரைச்சலிட்டேன்; அப்போது நாங்கள் ஒரு பாலத்தின் கீழே இருந்தோம். அருகில் புகைவண்டி நிலையத்துக்குச் செல்லும் பாதை ஒன்று இருந்தது; அதில் ஒரு கூட்டம் வண்டிக்குப் போய்க் கொண்டிருந்தது. அவர்கள் ஓடிவந்து என்னைக் காத்தார்கள்; கூட்டத்தைக்கண்ட அவன் ஓட்டமாய் ஓடி மறைந்து விட்டான்.

'நான் அவர்களோடு கூடவே புகைவண்டி நிலையத்துக்குப் போனேன். சென்னை செல்லும் வண்டி தயாராக இருந்தது; ஒரு பெட்டியில் சென்னை செல்லுபவர்கள் தமிழில் பேசிக்கொண்டிருந்தார்கள். நான் ஒரு பெட்டியில் ஏறிப் பேசாது படுத்துக் கொண்டேன். சென்னை வந்து சேர்ந்து விட்டேன்.

'நடந்து விட்ட பலவற்றையும் எண்ணி நான் ஏங்கினேன்; அழுதேன்! அழுதேன்! ஆற்றுவாரின்றி அழுதழுது நானே ஆறினேன். நடந்துவிட்ட செய்திகள் நண்பருக்குத் தெரிந்தால் நம் நிலை என்னகும்? அதை மறைத்து விடலாம்; பின் தெரிந்து விட்டால் என்ன செய்வது? என்று பயந்தேன்; பதை பதைத்தேன். பிறகு ஒரு வஞ்ச எண்ணம் என்னைத் தேற்றியது; வருத்தத்தை மாற்றியது. புதுத் திட்டம் உருவாகியது. நடந்து விட்டது யாருக்கும் தெரியாது; ஆகையால், அதைக் கூறுது மறைத்துவிட முடிவு செய்தேன். மனப்போராட்டத்துடனேயே அன்று நான் இம்மாளிகை எதிரில் வந்து நின்றேன். எப்படியோ அப்போது என் மனத்தை நான் வென்றுவிட்டேன். அன்பருக்குத் துரோகம் செய்ய முடிவு செய்து விட்டேன். உங்களுக்குத் திருமணம் ஆகிவிட்டது என்பதைக் கேள்விப்பட்ட பிறகு ஒரு சிறிது பயம் குறைந்ததாகத் தெரிந்தது. ஆயினும் நடந்ததை மறைத்தே அக்கடிதத்தை எழுதி வீட்டில் கொடுத்து விட்டுச் சென்றேன்.

'பிறகு என்னை என் மனசாட்சியே மருட்டத் தொடங்கியது. அதன் முன் நான் மறைக்க முடியாது மருண்டேன்; தரிக்க முடியாது தலை குனிந்து நின்றேன். உயிராகக் காதலித்த உத்தமருக்கு உண்மையை மறைத்துத் துரோகம் செய்து இந்த உலகில் வாழும் வாழ்வைப் பின் எண்ணிப் பார்த்தேன். எண்ணற்ற ஈட்டிகள் என் இதயத்தைத் துளைப்பது போலிருந்தது. சூரியன் சுழல்வது போலக் காணப்பட்டது. வானம் பூமியை நோக்கி வந்து கொண்

டிருந்தது; பூமி அதிர்வது போலத் தெரிந்தது. மக்களெல்லாம் தலைகீழாக நடப்பது போலக் காணப்பட்டனர். பயித்தியம் பிடித்துவிடும் என்று உணர்ந்தேன்: என்னை நானே சோதித்துப் பார்த்துக்கொண்டேன்.

'அன்பரிடம் சென்று மன்னிப்புக் கேட்டுவிட எழுந்தேன். ஊரில் இல்லாதது அப்போதுதான் நினைவுக்கு வந்தது. கொடுத்த கடிதத்தைத் திருப்பி வாங்கிவிட இவ்வீடுவரை வந்தேன். கதவு மூடிக் கிடந்தது. அன்று இரவெல்லாம் என் மனமென்னும் மரத்தில் கோடி கோடியான சிந்தனை மலர்கள் பூத்தன.

'நான் எண்ணியது போலவே மறைத்துவிட்டு இவரை மணந்துகொண்டு மாசான மனத்தோடு நான் வாழவும், மாசற்ற மனத்தோடு அவர் என்னிடம் பழகவுமாக வாழ்ந்து வருங்காலத்தில்—சிலவாண்டுகளுக்குப் பிறகு அன்பருக்கு இச்செய்திகள் தெரிந்தால் அப்போது எங்கள் நிலைமை என்னகும்? அவர் வாழ்க்கையையும்—தூய அன்புள்ளத்தையும் நான் அப்போது எவ்வாறு, எந்நிலையில் காண நேரும்? ஒருக்கால் இந்நிலைமை அவருக்கு அருவருப்பாகத் தோன்றிஞல் அதை நாம் அப்போது எப்படி மாற்ற முடியும்? 'இவ்வாறு நேர்ந்த தவற்றினைச் சொல்லாமல் மறைத்து விட்டாயே!' என்று அப்போது கேட்டால் அதற்கு நான் எந்த முகத்தோடு—எந்த மனத்தோடு—அவருக்குப் பதில் சொல்லுவேன்? ஒன்றும் தோன்ருமல் இப்படியே கன்னியாகவே இருந்துவிட எண்ணி விட்டேன். இறுதியில் விடுதியில் ஒரு அநாதையாகச் சேர்ந்து விட்டேன்.

'இப்போது எண்ணிப் பாருங்கள்! அவருடன் உற வாடி—அன்புடன் அருகில் அமர்ந்து பேச—நான் அருகதையுடையவள்தானா? என்பதை நீங்களே சொல்லுங்கள்! என் இதயம் வெடித்து விடும்போல இருக்கிறது; தயவுசெய்து என்னை விடுதிக்கு அனுப்பி விடுங்கள்! மறுவற்ற ஞாயிறு நீங்கள்! மாசுடைய திங்களைப் போன்றவள் நான். நீங்கள் மாசற்ற மாணிக்கம்—வளமான ஒளி வீசும் வைரம்! நான் குண்டுமணி போன்று குற்றமுடையவள். குண்டுமணியின் கருமையைப்போக்க முடியுமா? நில வின் கருமையை நீக்க முடியுமா? முடியா தில்லையா?......'

'அவற்றின் கருமையை நீக்க எப்படி முடியும்? என்று நீயாக எண்ணிக் கொண்டதுதானே? பூப் போன்ற உன் பொன்னுடலைப் பொல்லாத அவன் கைகள் தொட்டதற்கு உன் வாழ்க்கையையே துறந்து விட 'எண்ணுகிருயா? உன் மாசற்ற மனம் அப்படி எண்ணுவது இயல்புதான். வானமுது! நான் சொல் வதைக் கேள்! உன்னுடைய உயர்ந்த பண்பை—ஒப்பற்ற அன்பை—எல்லையிலாத இதயத்தை எந்த முரடனாவது தொட முடியுமா? முடிந்ததா? வீணுகக் கலங்காதே! உன்னை நீயே அவசியமில்லாமல் அலட்டிக் கொள்ளாதே! நம் உடம்பை நாள் தோறும் எண்ணற்ற ஈக்களும் எறும்புகளும் தொட வில்லையா? கூட்டத்துக்குள் இருக்கும்போது நம்மீது எத்தனை உடம்புகள் உராய்கின்றன? அவற்றை எல்லாம் நாம் சிந்திக்கின்ருேமா? அத்தகைய ஒரு ஈ; ஒரு எறும்பு உன் அன்பு மேனியைத் தொட்டது;

கலங்காதே வானமுது! அதற்காக நம் அன்பு குறையாது! உண்மையைச் சொல்லி அதற்காக வருந்தி நீ உதிர்த்த கண்ணீர்த்துளிகள் அம்மாசினைக் கழுவி விட்டன. களங்கம் கரைந்து விட்டது. நான் உன்னை என் மனமாற ஏற்றுக் கொள்ளுகிறேன், பயப்படாதே! உன் முடிவை மாற்றிக்கொள்!

'உன் தந்தை மிகவும் நொந்திருக்கின்ருர்; நீ அவரருகில் இருந்து அவருக்கு மகிழ்ச்சியளிக்க வேண்டும். இதுவரை நீங்கள் எண்ணற்ற தொல்லைக்கு உள்ளாகி இருக்கிறீர்கள்; அவற்றை நண்பர் மூலம் நான் முழுவதையும் அறிந்தேன். உண்மைக் கற்புக்கு ஊறு விளைந்து விட்டதாக வருந்தும் நீ என் மனத்தில் உண்மையில் கற்பரசியாகவே காட்சியளிக்கின்ருய்! என் இதயத்திலிருந்து உன்னையகற்ற எத்தனை பீமையாக்களாலும் முடியாது. இனியுன் கவலையை விட்டு விடு! எல்லோரும் பசியாக இருக்கிருர்கள், நீயும் வா, சாப்பிடலாம்' என்று முருகப்பர் வானமுதை அழைத்தார். அவள் அருகில் சென்று அவளுடைய குனிந்த தலையைத் தூக்கி நிமிர்த்தினர். எல்லோர் முகத்திலும் மகிழ்ச்சி காணப்பட்டது. வானமுது மட்டும் அருவருப்பாகவே காணப்பட்டாள். பிறகு எல்லோரும் சாப்பிட்டோம்.

வானமுது! என் நண்பர் முருகப்பரின் உயர்ந்த பண்பை—ஒப்பற்ற குணத்தைப்பற்றி—நான் உன்னிடம் கூற வேண்டியதில்லை. அது நெசவாளர் வீதியில் துணி விற்ற கதையாகத்தான் முடியும். என்னைப் போலவே நீயும் முருகப்பரிடம் பலநாள் பழகி இருக்கின்ருய். எல்லாவற்றையும்விட அவருடைய அருங்

குணங்கள் வெளிப்பட இந்த ஒரு நிகழ்ச்சியே போதுமானது. என் நண்பருக்கு இது ஒரு சோதனை; இதில் அவர் வெற்றி பெற்று விட்டார். பாலில் வெண்ணெய் மறைந்திருந்தாலும் காய்ச்சிக் கடைந்த போது அது வெளிப்படுவது போல இந்நிகழ்ச்சியிலிருந்து அவருடைய உயர்ந்த பண்பு நம்மையெல்லாம் இன்பக்கேணியிலிட்டுக் குளிப்பாட்டியது. அவர் மனிதருள் மாணிக்கம்; அவரை மேலும் துன்பத்துக்குள்ளாக்குவது நல்லதல்ல. மேலும் உன் தந்தை அளவில்லாமல் உங்களுக்காகத் துன்பப்பட்டுத் துவண்டு விட்டார். மேலும் அவருக்குத் துன்பந்தந்து அதிர்ச்சியுறச் செய்தால் அவர் உள்ளம் கெட்டுவிடும். நீயும் நண்பரும் மணந்து வாழ்வதுதான் நல்லது. இனி நீ எதையும் யோசிக்கக் கூடாது. இது எங்கள் எல்லோருடைய விருப்பம். இதை நீ மறுத்தால் உனக்கும் மற்றவர்க்கும் நீயே தீங்கிழைத்தவள் ஆவாய். உன் குருட்டு முடிவை மாற்றிக்கொண்டு இந்த இல்லத்துக்குத் தலைவியாக—என் நண்பரின் வாழ்க்கைத் துணைவியாக—இருக்க வேண்டும். இதை நீ மறுக்க மாட்டாய் என்று எண்ணுகிறேன். ஒடிந்த உள்ளத்தோடு உங்கள் நல்வாழ்வுக்காக வாழ்ந்துவந்த உன் தந்தையை விழிப்பாகக் கவனித்துக் கொள்ள வேண்டும்! இதுதான் நான் உனக்கு இறுதியாகக் கூறும் யோசனை. இதைத் தட்டாதே! என்று நான் கூறிக் கொண்டிருக்கும்போது தந்திச்சேவகன் எனக்கு ஒரு தந்தி கொண்டுவந்தான்.

குழந்தை அருளுக்கு உடம்பு சரியில்லை என்றும், அதனால் எல்லோரும் பம்பாய்க்கு வந்திருப்பதாகவும்,

என்னை உடனே வந்து சேரும்படியும் அப்பா தந்தி கொடுத்திருந்தார்.

அதற்கு மேல் சென்னையில் என்னால் இருக்க முடியவில்லை. முருகப்பர், நடேசன், வானமுது எல்லோரும் 'நீங்கள் உடனே சென்று வாருங்கள்' என்று புறப்படுத்தினார்கள்.

விமானத்திலேயே செல்ல முருகு ஏற்பாடு செய்து விட்டார். எல்லோரும் விமான நிலையத்துக்கு வந்து என்னை வழி விட்டார்கள்.

வானமுது! நான் சொல்லியவை யாவும் நினைவிருக்கிறதா? எனக்கு நீங்கள் விரைவில் திருமண அழைப்பிதழ் அனுப்பவேண்டும்! சரிதானே? என்று நான் சிரித்துக்கொண்டே கேட்டேன். வானமுது நாணத்தால் தலை குனிந்து கொண்டாள். திருமணச் சம்மதத்தை அவள் வாய் திறந்து சொல்லாவிட்டாலும், அவள் நாணம் அதைக் குறிப்பிடத் தவறவில்லை.

'போனஉடன் குழந்தையின் நிலையைத் தெரியப்படுத்துங்கள்' என்று கேட்டுக் கொண்டாள் வானமுது.

'ஆமாம் கண்ணு! நான் மறந்து விட்டேன்; வானமுது ஞாபகப்படுத்தி விட்டாள். போன உடன் தந்தி கொடு!' என்றார் முருகு.

'ஆமாங்கோ' என்று அவர்கள் கூறியதை ஆமோதிப்பது போலக் கூறினான் நடேசன்.

மறக்காமல் போனவுடன் தந்தி கொடுக்கின்றேன்; ஆனால், முருகு! நீ மட்டும் கலியாணச் சந்தடியில் அழைப்பிதழ் அனுப்ப மறந்து விடாதே? என்று சிரித்துக்கொண்டே சொன்னேன் நான்.

'உனக்கு அனுப்பாமலா மறந்து விடுவேன்? அப்படி நான் மறந்து விட்டாலும், ஞாபகப்படுத்த வானமுது இல்லையா?' என்றார் முருகு. எல்லோரும் சிரித்தோம்.

நான் பம்பாய் போவதற்குள் குழந்தையின் உடம்பு நன்றாக ஆகிவிட்டிருந்தது. ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருந்தான் அருள்.

நான் நாள்தோறும் காலையில் கடிதக் கட்டில் ஒன்றை எதிர்பார்ப்பேன்; ஒருமாதம்வரை ஏமாந்தே வந்தேன். ஒருநாள் நான் எதிர்பார்த்த 'வானமுது, முருகப்பர் திருமண' அழைப்பு வந்தது! நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

நான், என் குடும்பத்தாருடன் திருமணத்துக்குச் சென்னை வந்து சேர்ந்தேன். நாங்களும் நண்பர்களும் மகிழ்ந்தோம். திருமணம் திரு. வி. க. வின் தலைமையில் சிறப்பாக நடந்தது. அன்று மாலை திரு. வி. க. அவர்கள் தலைமையில் ஒரு கூட்டம் நடந்தது. அன்பர் பலர் மணமக்களுக்கு வாழ்த்துரை வழங்கினர். தலைவர் அவர்கள் 'திருமணம்' என்னும் பொருள் பற்றிச் சிறப்பாகச் சொற்பொழிவாற்றினார்.

Printed at Visva & Co., 9, Velders St., Mount Road, Madras-2.